ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமானுஜாய நம:



# ஸ்ரீ பகவத்கீதா சாரம்


நூலாசிரியர்

கீர்த்தி மூர்த்தி நியாய வேதாந்த வித்வான

ஸ்ரீ.உ.வே.காரப்பங்காடு வேங்கடாசாரியார் ஸ்வாமியின் சீடரான

*ஸ்ரீவில்லிபுத்தூர் திருமலை விஞ்சிமூர் வித்வான்*

**வி.கே. ஸ்ரீநிவாஸாசாரியார்**

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:



# பகவத் கீதா சாரம்

கீர்த்தி மூர்த்தி, ந்யாய வேதாந்த வித்வான்,

ஸ்ரீ உ.வே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமியின்

"பகவத் கீதா" உபன்யாசத்தொகுப்பு

அன்னாரின் *நூற்றாண்டு விழா* நினைவு வெளியீடு


நூலாசிரியர்

அன்னாரின் சீடரான

*ஸ்ரீவில்லிபுத்தூர் திருமலை விஞ்சிமூர் வித்வான்*

ஸ்ரீ.உ.வே.வி.கே. ஸ்ரீநிவாஸாசாரியார் ஸ்வாமி

THIS BOOK IS PUBLISHED WITH THE FINANCIAL ASSISTANCE OF
TIRUMALA TIRUPATI DEVASTANAMS
UNDER THEIR SCHEME "Aid to Publish Religious Books"

First Edition; 2006



| | |
|---|---|
| Title | "BHAGHAVAT GITA SARAM" of<br>Keerti Murti, Nyaya Vedanta Vidwan,<br>**Sri.U.Ve.Karappankad VENKATACHARYA Swami** |
| Author | Srivilliputtur Vidwan<br>**Sri.U.Ve.V.K.SRINIVASACHARIAR Swami** |
| No.of Copies : | 1000 |
| Pages | 6 + XII + 199 |
| Price | Rs.100 |
| Type set by | Sri.S.Sampath, Sri.S.Sundararajan &<br>Sri.V.S.Venkatachariar,<br>29/19,South Mada Street,<br>SRIVILLIPUTTUR - 626125 |
| Printed at | Navbharath Enterprises<br>No.10, Sirur Park 'B' Street,<br>Seshadripuram, Bangalore - 560020<br>☎ : 080-23364682, 23364142 |

Books available with :

Sri.V.S.Venkatachariar,
S/O. Sri.U.Ve.V.K.SRINIVASACHARIAR
29/19,South Mada Street,
SRIVILLIPUTTUR - 626125

☎ : 9443418731

ஸ்ரீ :

ஸ்ரீமதே ராமாநுஜாய நம





கீர்த்தி மூர்த்தி, ந்யாயவேதாந்த வித்வான், வைகுண்டவாசி

**ஸ்ரீ உ.வே.காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி**

ஆத்ரேயாந்வய பூஷணச்ச ஜநகாத் லப்த்வா ந்ருஸிம்ஹார்யத:
சாஸ்த்ராணி ப்ரதிதாத் ததைவ வரதாசார்யாத் பரஸ்தாதபி ।
கோவிந்தார்ய பதாச்ரிதம் நிருபம ப்ரக்யாத வாக்வைபவம்
தாந்த்யாத் யாத்மகுணாகரம் குருவரம் ஸ்ரீவேங்கடார்யம் பஜே ॥

ஸ்ரீ :
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

# முகவுரை

## பார்த்திப பங்குனி புனர்வசு பிறந்தநாள் பெருவிழா

ஸ்ரீயப்பதியான ஸர்வேச்வரனுக்கு நித்யவிபூதி என்ற பரமபதமும், லீலாவிபூதி என்ற ஸம்சார மண்டலமும் ஸ்வாதீனமான சொத்தாக உள்ளன. இதனால் அவனுக்கு *உபயவிபூதிநாதன்* என்று பெயர் கொடுக்கப்பட்டுள்ளது. இந்த இரண்டு சொத்துக்களில் பரமபதமாகிற சொத்து, அவன் மனதை அனுசரித்து நடக்கிறது. இந்த சம்சார மண்டலமாகிற சொத்து அவன் மனதிற்கு முரண்பாடாக நடக்கிறது. இதற்காகப் பல அவதாரங்கள் பண்ணியும் சாஸ்திரங்களை உபதேசித்தும் ஞானிகளைத் தோற்றுவித்தும் ஞான மார்க்கத்தைப் பரப்பியிருக்கிறான். ஆனாலும் அவன் நினைத்தபடிக்கு சம்சார மண்டலம் முன்னேறுவதில்லை. இருந்தாலும் இவற்றினிடத்தில் தனக்குண்டான பற்றுதலால் இவற்றைத் திருத்துவதற்காக கண்ணனாக அவதாரம் பண்ணினான். அர்ஜுனனை முன்னாக வைத்து பகவத் கீதையை உபதேசம் பண்ண்ணினான். சாஸ்திரங்களைப் படிப்பதில் பல கட்டுப்பாடுகள் உண்டு. இதில் அந்தக் கட்டுப்பாடு தளர்ந்திருக்கிறது. ஆசைப்பட்டவர் அனைவரும் படிக்கலாம். இதை அனைவரும் அறியும்படி சொல்பவருக்கு தர்க்கம், வ்யாகரணம், மீமாம்சை, வேதம் முதலிய சாஸ்திரங்களில் நல்ல அனுபவமும் வல்லுனர்களாகவும் இருக்க வேண்டும். அத்தகைய வல்லுனர்கள் ஒரு ஒரு காலத்தில் தோன்றுவார்கள். அப்பொழுது பயன் பெறக் கூடியவர்கள் பயன் பெறுவார்கள்.

சென்ற நூற்றாண்டில் பட்டுக்கோட்டைப் பக்கம் உள்ள காரப்பங்காட்டில் ஸ்ரீ.உ.வே.சிங்கபெருமாள் ஸ்வாமி என்பவர் மேலே சொன்ன சாஸ்திரங்களை எல்லாம் பயின்று பலரை

ஞானவான்களாக ஆக்கினார். அவர்களுள் ஸ்ரீ.உ.வே.தேசிக வரதாசாரியார் ஸ்வாமி என்பவர் ஒருவர். அவர் ஸ்ரீரங்கத்தில் ஜீயராக எழுந்தருளி ஸ்ரீரங்கநாத பெருமாளுக்கு தங்க விமானம் முதலிய கைங்கர்யங்கள் செய்தார். அவரிடம் பயின்று பலர் ஞானம் பெற்றனர். நிற்க, காரப்பங்காடு ஸ்ரீ.உ.வே.சிங்கப்பெருமாள் ஸ்வாமிக்கு ஒரு ஸ்வீகார குமாரர். அவரே, கீர்த்திமூர்த்தி, ந்யாய வேதாந்த வித்வான் ***ஸ்ரீ.உ.வே. காரப்பங்காடு வேங்கடாசாரியார் ஸ்வாமி*** என்று பெயர் பெற்றவர். அவர், தன் தகப்பனாரிடம் சிறு குழந்தையிலிருந்து சாஸ்திரங்களைக் கற்றவர். அவருடைய அருமை பெருமை தெரிந்த சென்னை மாநகரப் பெரியோர்கள், அவரைச் சென்னைக்கு அழைத்து வந்து சுமார் முப்பது ஆண்டு காலம் உபன்யாசம் நடத்தி வைத்தனர். இவரிடம் பயின்று இவர் பெயரைப் புகழாக்கின ஸ்ரீ.உ.வே.வேளுக்குடி வரதாசாரியார் ஸ்வாமி, சதாபிஷேகம் ஸ்ரீ.உ.வே. கோவிந்த நரசிம்மாசாரியார் ஸ்வாமி, ஸ்ரீ.உ.வே.தேசிக வரதாசாரியார் ஸ்வாமி குமாரர் ஸ்ரீ.உ.வே.ரெங்கராஜ ஐயங்கார் ஸ்வாமி, பிள்ளைலோகம் ஸ்ரீ.உ.வே.பாஷ்யகாரர் ஸ்வாமி ஆகியோர் அவர் காலத்தில் திக்கஜங்கள் போல் உபன்யாசத்தில் விளங்கினார்கள். அடியனேன், குமாரவாடி ஸ்ரீ.உ.வே. சே.இராமாநுஜாசாரியார் ஸ்வாமி, பிள்ளைலோகம் ஸ்ரீ.உ.வே.ஸ்தலசயனத் துறைவார் ஸ்வாமி, மேல்கோட்டை அரையர் ஸ்ரீ.உ.வே.ஸ்ரீராம சர்மா, மேல்கோட்டை ஸ்ரீ.உ.வே. லக்ஷ்மிதாதாசாரியார் ஸ்வாமி போன்ற பிரபல வித்வான்களும் மற்றும் பலரும் இன்றும் அவருடைய உபன்யாசத்தை நாடறிய சொல்லி வருகிறார்கள். சென்னை மினர்வா டுடேரியல் காலேஜ் ஆங்கிலப் பேராசிரியர் மண்டையம் ஸ்ரீ.உ.வே.சம்பத் குமாராச்சாரியார் ஸ்வாமி, அவரிடம் ஸ்ரீபாஷ்யம், கீதாபாஷ்யம் இவற்றை முறையோடு கற்று, கற்ற விஷயங்களை ஆங்கிலத்தில் எழுதி தனித்தனி புத்தகங்களாக வெளியிட்டுள்ளார். அவருடைய சென்னை உபன்யாசங்களில் டாக்டர் இராம ஐயங்காரும் அவருடைய தர்மபத்னியுமான கதாகாலக்ஷேபமணி யதுகிரி அம்மாவும் தவறாமல் கலந்து கொண்டு களிப்பார்கள். சாஸ்திர வளர்ச்சிக்கு அவரைப் போல் பாடுபட்டவர் யாரும் இல்லை. சுமார் ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு அவருடன்

நெருங்கிப் பழகும் பாக்கியம் அடியேனுக்குக் கிடைத்தது. அவர் கூடவே இருந்து அவருடைய உபன்யாசங்களையெல்லாம் கேட்டு வந்தேன்.

ஒரு சமயம் மதுரை மாநகரில் அருள்மிகு கூடலழகர் சன்னிதியில் மதுரைப் பெருமக்களால் அவரைக் கொண்டு பகவத் கீதா உபன்யாசம் நடத்தப்பட்டது. வேதாந்தங்களில் **ப்ரஸ்தானத்ரயம்** என்று சொல்லுவார்கள். அதில் *உபநிஷத், ப்ரம்ம ஸூத்திரம், பகவத் கீதை* என்ற மூன்றும் அடங்கும். அவற்றிற்கு ***இராமாநுஜர், மாத்வர், சங்கரர்*** ஆகிய மூன்று மதாசார்யர்களும் உரை செய்துள்ளனர். அவற்றில் இராமாநுஜரின் உரையான **விசிஷ்டாத்வைத** முறையில் நம் ஸ்வாமி உபன்யாசம் செய்தார். அடியேன் அவருடைய சீடனாக இருப்பதால் அவர் கூடவே இருந்து, அவர் சொல்லுவதை எல்லாம் எழுதிக் கொண்டேன். தற்பொழுது ஸ்வாமியின் **நூற்றாண்டு விழாவை** முன்னிட்டு ***திருமலை திருப்பதி*** **தேவஸ்தானத்தார்** உதவியுடன் இந்நூல் வெளியிடப்படுகிறது.

*அடியேன்,*

***வி.கே.ஸ்ரீநிவாஸாசாரியார்,***

19/29, *நாச்சியார் தெற்கு மாட வீதி,*

*ஸ்ரீவில்லிபுத்தூர் - 626125.*

# அணிந்துரை

*"ஸ்ரீ சடகோபன் பொன்னடி", "வைணவ இலக்கிய மாமணி*
*பேராசிரியர்* **டாக்டர் ந. சுப்புரெட்டியார்,**

***"நோந்தேன் பல்பிறவி நுன்னைக் காண்பதோராசையினால்***
***ஏந்தேன் இப்பிறப்பே இடருந்தனன் எம்பெருமான்***
***கோந்தேன் பாய்ந்தொழுகும் குளிர்சோலைசூழ் வேங்கடவா***
***ஆந்தேன் வந்தடைந்தேன் அடியேனைஆட் கொண்டருளே."***

திருமங்கையாழ்வார்-பெரியதிருமொழி-1-9-8

ஸ்ரீ உவே .காரப்பங்காடு வேங்கடாசார்ய சுவாமிகள் மதுரையில் 1965ல் நிகழ்த்திய சொற்பொழிவுகள், அப்படியே ஸ்ரீ.உ.வே.வித்துவான் வி.கே.ஸ்ரீநிவாஸாசாரியார் சுவாமியால் படியெடுக்கப்பெற்றதே, **"பகவத் கீதா சாரம்"** என்ற இந்நூல். யாமுநாசாரியாரின் கீதாபாஷ்யமும் ஸ்ரீராமாநுஜரின் கீதாபாஷ்யமும் அடிப்படையாக அமைந்த சொற்பொழிவுகளே இது.

பார்த்தன் பரந்தாமனிடம் கேட்ட வினாக்களுக்கு, அப்பெருமான் தந்த விடைகளே நூலின் சாரமாக அமைந்துள்ளன. கண்ணனைப் போன்ற ஓர் ஆசிரியரையும் பார்த்தனைப் போன்ற ஒரு சீடனையும் இவ்வுலகில் காண்டல் அரிது. இவர்களே நமக்கு உதாரணபுருஷர்கள்.

***கர்மம், ஞானம், பக்தி*** என்ற முறையில் விளக்கம் அமைய வேண்டும் என்பது **"விசிட்டாத்வைதம்."** இந்த முறையில்தான் பார்த்தனுக்குப் பரந்தாமன் உபதேசித்து விளக்கம் தருகின்றான். ***யான், எனது*** என்ற செருக்குகளை அடக்கவேண்டும், தனது மனம் வாக்கு செயல்கள் யாவும் தன்னுடையவை அல்ல, அவை அனைத்தும் இறைவனுடையவையே என்ற உண்மை நூலெங்கும் வற்புறுத்தப்-பெறுகின்றது.

கர்மயோகத்தின் மூலம்தான் ஞானயோகம் வரப்பெற்று, அதன் மூலம்தான் பக்தியோகத்தை அடையவேண்டும் என்ற படிமுறை வற்புறுத்தப்பெறுகின்றது. இந்த உண்மையைக் காரப்பங்காடு சுவாமிகள்

பல்வேறு எடுத்துக்காட்டுக்களால் விளக்குகிறார்கள். நூலைப்படிக்கும் போது. நாமும் பொழிவுகளைக் கேட்பவர்கள் கூட்டத்தில் ஒருவராக இருப்பது போன்ற உணர்வு ஏற்படுகின்றது.

நூலெங்கும் வேதம். வேதாந்தம். வால்மீகி இராமாயணம். வியாச பாரதம். கம்பராமாயணம். வில்லி பாரதம். நம்பிள்ளை ஈடு. ஸ்ரீவசனபூஷணம். பல கதைகள் ஆளப்பெற்றிருப்பதால் நூலின் கருத்துக்களை வாசகர்கள் தெளிவாக அறிவதற்குத் துணை புரிகின்றன. புராண இதிகாசங்களின் உண்மைகளை யதார்த்த உண்மைகளால் விளக்கும் வள்ளுவர் பெருமானின் வாக்குகளும் தலைகாட்டி. உண்மைகள் படிப்போர் மனத்தில் பசுமரத்தாணிபோல் ஆழப் பதிவதற்குத் துணையாக அமைகின்றன.

இருபது அகவையிலிருந்து தொண்ணூறு அகவைவரை சமய இலக்கியத் தொண்டு புரியும் அடியேனை இப்பணியில் பங்குகொள்ளச் செய்த உ.வே.வித்துவான் வி.கே.ஸ்ரீநிவாஸாசார்ய சுவாமிகட்கு என் நன்றியைப் புலப்படுத்திக்கொள்ளுகின்றேன். இந்த சுவாமிகளின் தெய்வத் தொண்டு **"வேங்கடம் மேய விளக்கின்"** திருவருளால் மேலும் மேலும் வளர்வதாகுக என அவன் திருவடிகளை நினைந்து வாழ்த்துகிறேன்.

***"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே***
***நெடியானே வேங்கடவா நின்கோயி லின்வாசல்***
***அடியாரும் வானவரும் அரம்பையரும் கிடந்தியங்கும்***
***படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே"***

(குலசேகரப்பெருமாள் - 4-9)

**ந.சுப்புரெட்டியார்.**

"வேங்கடம்"
AD - 13-14, அண்ணா நகர்,
சென்னை - 600040.

தமிழ்ப்புத்தாண்டு - 14-04-2005

ஸ்ரீ:
ஸ்ரீமதே ராமாநுஜாய நம :

Sriman U.Ve.
**Dr.M.Varadarajan, M.A., Ph.D.,**
Associate Professor and Principal Investigator
UGC Major Research Project
"A Study on the Recitation of
Dravida Veda (Alwars hymns) in
108 Divya Desas (Holy Shrines)"
Department of Tamil
Sri Venkateswara University
TIRUPATI - 517502.

Date : 30.04.2005.

---

## ஸ்ரீமதுபயவே. காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி அருளிய பகவத் கீதையின் ஸாரம்

## அணிந்துரை .

ஸ்ரீவைஷ்ணவ ஸம்ப்ரதாயத்தில் ஸ்ரீமந் நாதமுனிகள் தொடக்கமான பூர்வாசாரியர்கள் வைஷ்ணவத்தை உரைகள், உபன்யாசங்கள் மற்றும் காலக்ஷேபங்கள் மூலமாக பரப்பி வந்துள்ளனர். 20ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியில் சிறந்து விளங்கிய வித்வான்களில் வைகுண்டவாசியான ஸ்ரீமதுபயவே. ***காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி*** தன்னிகரற்ற வித்வானாகத் திகழ்ந்தவராவர். உபயவேதாந்த வித்யா நிதியாய் சாந்தமே வடிவெடுத்த இந்த ஸ்வாமியின் உபன்யாஸங்கள் – குறிப்பாக பகவத்கீதா உபன்யாஸங்கள் அளப்பரிய ஆரமுதாயிருக்கும். அறியாக்காலத்தே அடியேன் பலகால் கண்டு களித்த இந்த ஸ்வாமியின் தோற்றப்பொலிவு அடியேனுடைய உள்ளத்தின்கண் உருவெளிப் பாடாய்த் தோன்றி உறைந்தருள்கிறது.

இந்த ஸ்வாமி பல இடங்களில் ஸாதித்த ஸ்ரீ பகவத் கீதா உபன்யாஸத்தை சில பெரியோர்கள் ஏடுபடுத்தி அச்சிட்டுள்ளனர். 1965ல் மதுரை கூடலழகர் ஸந்நிதியில் காரப்பங்காடு ஸ்வாமி அருளிய கீதாஸார உபன்யாஸ தொகுப்பை அந்த ஸ்வாமியின் சிஷ்யராய் "***அருளிச்செயல் வல்லான்***", "***ஸ்ரீ ஸூக்தி சதுரர்***" என்று பல விருதுகள் பொருள் விளக்கம் பெற்றவராய் விளங்கும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்ரீமதுபயவே. ***வி.கே.ஸ்ரீநிவாஸாசார்யஸ்வாமி*** எழுதி, **ஸ்வாமியின் நூற்றாண்டில்** வெளியிடுவது சாலச்சிறந்ததாகும்

அடியேனுக்கு தமிழாசிரியரான இவர், அடியேன்பால் கொண்ட அபிமானத்தால் இந்நூலைப்படித்து பெற்ற இன்பத்தை – அனுபவத்தை அணிந்துரையாக எழுத நியமித்தார். பொருளல்லாத அடியேனைப் பொருளாக்கி நியமித்த கட்டளையைச் சிரமேற்கொண்டு ஸ்ரீபகவத் கீதா ஸாரத்தைப் பலமுறை படித்து இன்பமெய்தினேன். முந்தைய வெவ்வேறு உபன்யாஸ தொகுப்புகளில் குறிப்பிடாத பல அர்த்த–விஷேசங்கள் இந்நூலில் அமைந்ததைக் காணமுடிகிறது. அவர்தம் வாய்மொழியில் அவர்தம் போதனா சக்தியை அறியமுடிகிறது. இந்நூலில் ஆளவந்தார், எம்பெருமானார், வேதாந்த தேசிகர் மற்றும் பல ஆசார்யர்களின் ஸ்ரீஸூக்திகள், வில்லிபுத்தூரார், கம்பர் பாடல்கள் மேலும் அழகூட்டுகிறது. அதுமட்டுமன்றி ஆளவந்தாரின் கீதார்த்த ஸங்க்ரஹத்தின் பொருளுக்குச்சேர ஸ்வாமியின் உபன்யாஸம் அமைந்தது காணலாம். கீதையைப்பற்றிச் சொல்லும் "**ஸர்வோபநிஷதோ காவ:**" என்ற ச்லோகத்தில் "**கூதீ:**" என்று ஆழ்வார்களைக் கூறுவதாகச் சொல்லுவர். அதற்கு ஏற்ப ஸ்வாமி ஆழ்வார்கள் கீதையைப்பற்றி சொன்ன இடமெல்லாம் தொகுத்து அளித்துள்ளார்.

முதல் அத்தியாயத்தில் "**தர்ம க்ஷேத்ரே**" என்ற ச்லோகத்தில் இரண்டு கருத்துக்களைக்காட்டி அதில் திருதராஷ்ட்ரனுக்கு இரண்டாவது கருத்திலுள்ள ஊற்றத்தை உரைப்பர். அதேசமயத்தில் துரியோதனனின் நிலைமையைச் சொல்லும் வகையில் துருணோசார்யர் – துருபதன் வரலாற்றை விரிவாகச் சுவைபட கூறுவது காணலாம்.

இரண்டாவது அத்தியாயத்தில் "**ந த்வேவாஹம்**" என்ற ச்லோகத்தை விரித்துப் பொருள் கூறும்போது ஆதிசங்கரர் பக்ஷமான ஆத்மாக்களுக்குள் பேதம் இல்லை என்கிற பக்ஷத்தைக் கண்டித்து, ஸ்வாமி எம்பெருமானார் ஜீவாத்மா மூன்று காலத்திலும் இருக்கும் பொருள் என்ற ஸித்தாந்தத்தை விரிவாக விளக்குவது ரஸகனமாயிருக்கும்.

நான்காம் அத்தியாயத்தில் "**நியதம் குரு**" என்ற ச்லோகத்தில் "**அகர்மண:**" என்ற பதம் இரண்டு இடத்தில் வந்தத்தின் பொருளை அழகாக விளக்குவது நெஞ்சைவிட்டு அகலாது.

ஏழாம் அத்தியாயத்தில் "**சதுர்விதா பஜந்தே மாம்**" என்ற ச்லோகத்தில் கண்ணன் நான்கு வகையான பக்தியைச் சொன்னதை,

ஸ்வாமி எம்பெருமானார் மூன்று வகையாகக் காட்டுகிறார். இதில் அசித்தைப்பற்றிவரும் (ஆர்த்தன், அர்த்தார்த்தீ) ஆனந்தத்தால் முதலிரண்டையும் சேர்த்து ஒன்று என்றும், பரிசுத்த ஜீவாத்ம (ஜிஜ்ஞாஸு) அனுபவம், பரமாத்ம (ஞானி) அனுபவம் என இரண்டையும் சேர்த்து மூன்று என்றும் உரைப்பது ஸ்வாமியின் மதிநுட்பத்தை எடுத்துக்காட்டுவதாகும். அதே சமயத்தில் "**உதாரா:**" என்ற சொல்லின் பொருளை நம்பிள்ளை, தேசிகர் ஆகியோரின் ஸ்ரீஸூக்திகளைக் காட்டி எம்பெருமான் நினைவைச் சொல்லுவது இன்சுவையாயிருக்கும். சங்கர பாஷ்யத்தில் எம்பெருமான் அந்தர்யாமியாயிருக்கும் இருப்பை "**நாSன்யோ ஹேது: வித்யதே ஈஸனாய**" என்ற வேதவாக்யத்–துக்குச்சேர "**ஈச: நியமநசீல: நாராயண:**" என்று ஆதிசங்கரர் சொன்ன உரையை ஸ்வாமி அநுபவித்தது குறிப்பிடத்தக்கதாகும்.

எட்டாம் அத்தியாயத்தில் "**ப்ரஹ்ம**" சப்தத்தின் அர்த்தத்தை ப்ரகரணத்துக்கு ஏற்றவாறு சொல்லவேண்டும் என்ற நியதியைக் காட்டுவது அழகு. ஆழ்வார்கள் பாடலின் மீதுள்ள ஈடுபாட்டை வெளிப்படுத்தும் வகையில் "**அனன்ய**" சப்தத்துக்குரிய பாசுரங்களை எடுத்து இயம்புவது அனுபவிக்கத்தக்கதாகும்.

ஒன்பதாம் அத்தியாயத்தில் மனுஷ்யத்வே பரத்வத்தைத் தெரிவிக்கும் வகையில் ஸ்ரீபாகவதம், மூமுட்சுப்படி, திருப்பாவை ஆறாயிரப்படி உரை முதலானவற்றைக்கொண்டு பரத்வஸௌலப்யத்தை நிறுவுகிறார். வணக்கத்தின் இலக்கணத்தை சாஸ்த்ரமறிந்து செய்யவேண்டும் என்று அறிவுறுத்துகிறார். சங்கர பாஷ்யத்துக்கு மங்களாசரணம் செய்யாமைக்குரிய காரணத்தை நம்போல்வார் அறிய பாமதி வ்யாக்யானத்தைக் காட்டுவர். மேலும் அசூயா என்ற சப்தத்தின் பொருளைக்கூறி "**குணேஷு தோஷாவிஷ்கரணம் அசூயா**" என்று அதன் இலக்கணத்தைக் காட்டி அதற்கு ஏற்ப வில்லிபாரதத்தில் கண்ணனிடம் சிசுபாலன் அசூயைப்படுவதை மிக அழகாக எடுத்துரைப்பர்.

பத்தாம் அத்தியாயத்தில் இந்திரியங்களின் கொடுமையைச் சொல்லும்போது ஸ்வாமியின் பரந்துபட்ட இலக்கிய அறிவால் பரிபாடல் காட்டும் கருட கர்வபங்கக் கதையை நயமாகச் சொல்லுவது காணலாம். மேலும் கண்ணன் சொன்ன "**அஜ்ஞானஜந்தம:**" என்ற சொல்லால் விஷயப்ராவண்யத்தின் ப்ராபல்யத்தைக்காட்டி, அதனைப்போக்க ஜீவாத்மாவிடம் உள்ள

அன்பு நீரை ஒரே மடை செய்து பாய்ச்ச வேண்டும் என்று சுவைபட உரைப்பர். இதனை விளக்கும் வகையில் பிள்ளை உறங்காவில்லி–தாஸர் கதையைக் குறிப்பிடுவர்.

இந்த அத்தியாயத்தில் "**பரம் ப்ரஹ்ம**" என்ற ச்லோகம் தொடக்கமாக "**வக்துமர்ஹஸி**" என்ற ச்லோகம் ஈறாக அர்ச்சுனன் வெகுவாகக் கண்ணனைக் கொண்டாடின இடம் இது என்று இந்த ஸ்வாமி நுட்பமாக எடுத்துக்காட்டுவது குறிப்பிடத்தக்கதாகும்.

பன்னிரெண்டாம் அத்தியாயத்தில் "**அப்யாஸேஅப்யஸமர்த்தோஸி**" என்ற ச்லோகத்தின் கீதாபாஷ்யத்தில் ஈடுபட்ட இந்த ஸ்வாமி "**மத்கர்ம**" என்ற சொல்லுக்குரிய பொருளின் இனிமையை அற்புதமாக விளக்குவது காணலாம்.

பதினான்காம் அத்தியாயத்தில் "**பரம் பூய:**" என்ற ச்லோகத்துக்கு விரிவான பாஷ்யமுள்ளதைக்காட்டி "**பரம்**" என்ற சொல்லுக்குரிய பொருளையும் "**பூய:**" என்ற சொல்லின் பொருளையும் பொருந்தவைக்கும் திறன் அற்புதமாயிருக்கும்.

ஆத்ம க்ஷேமத்துக்காக கீதை பிறந்தது என்பதை பதினைந்தாம் அத்தியாயத்தில் தர்மபுத்ரர் அபிமானம் மற்றும் வசுதேவர் அறியாமை முதலான வரலாறு மூலமாக அறிவுறுத்துவது காணலாம்.

இங்ஙனே ஸ்வாமியின் உபன்யாஸ பொன்மொழிகள் ***கரும்பு கணுதோறும் இனிக்குமா போலே*** இந்நூல் முழுவதும் சுவையாகி, இப்போது படிப்போர் மனதுக்கு மணற்கேணி போல் அமுதம் சுரக்கும்.

இப்படிப்பட்ட அனுபவத்தைக் கொடுத்து அடியேன் ஸத்தை பெறச்செய்த ஸ்ரீ.உ.வே.ஸ்ரீநிவாஸாசார்ய ஸ்வாமி திறத்து அடியேன் தலையல்லால் கைமாறிலேன்.

*மதுரகவி தாஸன்*
**மா. வரதராஜன்.**

# நன்றியுரை

கீர்த்தி மூர்த்தி, ந்யாய வேதாந்த வித்வான் *ஸ்ரீ.உ.வே.காரப்பங்காடு வேங்கடாசார்ய ஸ்வாமி*யிடம் பலகாலம் கூடவே இருந்து அவரது உபன்யாசங்களையெல்லாம் கேட்டதன் பலனாக மதுரை கூடலழகர் சன்னிதியில் 1965ல் நடைபெற்ற ஸ்வாமியின் பகவத் கீதா உபன்யாசத்தை அடியேனால் அப்படியே எழுத முடிந்தது. ஸ்ரீவைஷ்ணவ சம்ப்ரதாயத்தின் அவதார புருஷராக விளங்கிய நம் ***ஸ்வாமியின் நூற்றாண்டு விழா*** மஹோத்ஸவத்தை முன்னிட்டு அதை புத்தகமாக ஆக்க எண்ணினேன்.

அதற்குப் பேருதவியாக "***வைணவ இலக்கிய மாமணி***", பேராசிரியர் *ந.சுப்புரெட்டியார்* அவர்கள், அணிந்துரையும் வழங்கி வரியடையவே பிழைத்திருத்தமும் செய்து உதவியுள்ளார். அன்னாருக்கு என்றென்றும் என் நன்றியைத் தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்.

மேலும், திருமலை திருப்பதி வெங்கடேஸ்வரா பல்கலைகழக தமிழ்த்துறைப் பேராசிரியரான *ஸ்ரீ.உ.வே. டாக்டர் மா.வரதராஜன்* ***ஸ்வாமி*** அடியேன் திறத்துக் கொண்ட அன்பால், புத்தகத்தை மீண்டும் வரியடையவே பிழைத்திருத்தம் செய்து அணிந்துரையும் வழங்கிச் சிறப்பித்துள்ளார். அன்னாருக்கும் அடியேனது க்ருதஜ்ஞதையைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

திருவேங்கடத்தெம்பெருமானின் திருவருளால் இப்புத்தகம் சிறப்புடன் அமைய நிதி வழங்கிய **TTD** அதிகாரிகளுக்கு என் நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறேன்.

மேலும், இப்புத்தகத்தை மிக நேர்த்தியான முறையில் அச்சிட்டுக் கொடுத்து பேருதவி புரிந்த பெங்களூர் நவபாரத் பிரஸ் உரிமையாளர் *ஸ்ரீமான்.ஸ்ரீதர்* அவர்களுக்கு என்றென்றும் நன்றி தெரிவிக்கக் கடமைப்பட்டுள்ளேன்

இப்புத்தகத்தை ஸ்வாமியின் நூற்றாண்டு விழாவில் வெளியிட உதவிய அனைவர் திறத்தும் அடியேன் தலையல்லால் கைம்மாறிலேன்.

***வி.கே. ஸ்ரீநிவாஸாசாரியார்.***

| பொருளடக்கம் | பக்கம் |
|---|---|
| i. முகவுரை | - I |
| ii. அணிந்துரை - 1. டாக்டர் ந.சுப்பு ரெட்டியார், சென்னை | - IV |
| iii. அணிந்துரை - 2. ஸ்ரீ.உ.வே.டாக்டர் மா.வரதராஜன், திருப்பதி | - VI |
| iv. நன்றியுரை | - X |
| முதல் அத்தியாயம் - அர்ஜுனன் மனோநிலையும் அடைக்கலமும் | - 1 |
| 2ம் அத்தியாயம் - உயிர் அழியாமையும் பற்றற்ற ஞான யோக-அடிப்படையும் | - 17 |
| 3ம் அத்தியாயம் - பற்றற்ற கர்ம யோகம் (தன் கடமை) | - 27 |
| 4ம் அத்தியாயம் - தன் மஹிமையும் பக்தர்களின் பேதமும் | - 34 |
| 5ம் அத்தியாயம் - கர்ம யோகத்தின் எளிமையும் ப்ரம்மஞானமும் | - 41 |
| 6ம் அத்தியாயம் - யோகாப்யாஸ பயிற்சி முறைகளும் பரமாத்ம-யோகியின் பெருமையும் | - 45 |
| 7ம் அத்தியாயம் - தன் உண்மை நிலையும் பக்தர்களின் சிறப்பும் | - 49 |
| 8ம் அத்தியாயம் - பக்தர்கள் அறிய வேண்டிய விஷயங்கள் | - 58 |
| 9ம் அத்தியாயம் - தன் உண்மை நிலையும் மேன்மையும் | - 68 |
| 10ம் அத்தியாயம் - பகவத் குணங்களும் பக்தி வளர்ச்சியும் | - 78 |
| 11ம் அத்தியாயம் - விஸ்வரூப தர்சனமும் உபாய பக்தியும் | -103 |
| 12ம் அத்தியாயம் - பக்தனின் பெருமையும் உபாயத்தின் சிறப்பும் | -119 |
| 13ம் அத்தியாயம் - உடல் நிலையும் அது வருவதற்கு காரணமும் | -134 |
| 14ம் அத்தியாயம் - முக்குணங்களும் அவற்றைக்கட்டுப்படுத்தலும் | -144 |
| 15ம் அத்தியாயம் - ஆத்மாக்கள் பிரிவும் புருஷோத்தம வித்யையும் | -155 |
| 16ம் அத்தியாயம் - தேவாசுரப் பிரிவு | -168 |
| 17ம் அத்தியாயம் - சாஸ்த்ரமும் அதன் எதிர்ப்புக்களும் | -180 |
| 18ம் அத்தியாயம் - பற்றறுதலும் பக்தி ப்ரபத்தி முக்திகளும் | -189 |

⌘ ⌘ ⌘ ⌘ ⌘ ⌘

# பகவத் கீதா சாரம்

## முதல் அத்தியாயம்

ஶ்ரிய: பதியான எம்பெருமான் கோயில் கொண்டு எழுந்தருளியிருக்கும் தலங்கள் பல உண்டு. அவற்றுள் மிக முக்கியமான தலம் மதுரை ஸ்ரீ கூடலழகர் சன்னிதியாகும். ஆழ்வார்களுக்குள் பெரியாழ்வார் என்பவர் ஒருவர். அவர் "*திருப்பல்லாண்டு*" என்ற பிரபந்தம் அருளிச் செய்தது இத்தலத்தில் தான். "*வேதத்திற்கு ஓம் என்னுமது போல் உள்ளதுக்கெல்லாம் சுருக்காய்*" என்றருளிச் செய்தபடி சீர்மை பெற்ற பிரபந்தம் அது. "*மங்களானாம் ச மங்களம்*" என்று சொல்லப்படக் கூடிய பகவானுக்கே திருப்பல்லாண்டு பிரபந்தத்தால் மங்களாசாசனம் செய்த தலமாகும் இது. இப்படிப்பட்ட தலத்தில் எழுந்தருளியிருக்கிற எம்பெருமானால் அருளிச் செய்யப்பட்ட கீதையை பதினெட்டு பகுதிகளில் சொல்லும்படியான வாய்ப்பு ஏற்பட்டிருக்கிறது.

இரண்டாம் அத்தியாயத்தில்

**"அசோச்யாநந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே |**
**கதாஸூநகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா: ||"**

(2-11)

என்பது முதல், பதினெட்டாம் அத்தியாயத்தில்

**" ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ |**
**அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: || "**

(18-66)

என்கிற ச்லோகம் முடிய "*கீதா சாஸ்திரம்*" என்றும்,

**" தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: |**
**மாமகா: பாண்டவாச்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ||"**

(1-1)

என்கிற முதல் அத்தியாயம் முதல் ச்லோகம் முதல் "*அசோச்யாநன்வசோசஸ்த்வம்*" என்கிற ச்லோகத்திற்கு முந்தினதான

**" தமுவாச ஹ்ருஷீகேச: ப்ரஹஸந்நிவ பாரத |**
**ஸேநயோருபயோர் மத்யே விஷீதந்தமிதம் வச: || "**

(2-10)

என்கிற இரண்டாம் அத்தியாயத்தின் 10வது ச்லோகம் முடிய முகவுரை என்றும் ஒரு நிர்வாகம்.

**"ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா: |**
***ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ||"***

(2-12)

என்கிற இரண்டாம் அத்தியாயத்தின் 12வது ச்லோகம் முதல்

***" ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ |***
***அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: ||"***

(18-66)

என்கிற 18ம் அத்தியாயத்தின் 66வது ச்லோகம் முடிய "***கீதா சாஸ்திரம்***" என்றும், "*நத்வேவாஹம் ஜாது நாஸம்*" என்கிற 2ம் அத்தியாயத்தின் இந்த 12வது ச்லோகத்திற்கு முன்புள்ள 11 ச்லோகங்களும் முதல் அத்தியாயமும் கீதா சாஸ்திர ஆரம்பம் என்றும் ஒரு நிர்வாகம். பின் கூறிய இந்த நிர்வாகம் தான் ஸ்ரீ இராமானுஜ பக்ஷமாகும்.

கீதை என்பது பெரிய அமுதக் கடல். அதில் புகுந்து உண்மையை முழுவதும் உணர்பவர் யாரும் இல்லை. அதன் உண்மையை உள்ளபடி உணர்ந்தவன் எம்பெருமான் தான் என்று கூறுவார்கள். அது முற்றிலும் உண்மையான விஷயம். இராமானுஜனுடைய அர்த்தத்தை இராமானுஜன் தான் உண்மையாக உணர்ந்தவன் என்று ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் சொல்வதுண்டு. பலராமனுடைய தம்பி கண்ணனுக்கு இராமானுஜன் என்று திருநாமம். திருவல்லிக்கேணி பார்த்தசாரதிப் பெருமாளே ஸ்ரீபெரும்பூதூரில் ஸ்ரீவைஷ்ணவ ஆசார்யர்களுக்குள் கொண்டாடப்படுகிற இராமானுஜராக அவதரித்ததாகச் சொல்வதுண்டு. இதற்கு ஆதாரம் குருபரம்பரையில் காணலாம். ஆகவே, இராமானுஜன் தான் இராமானுஜனாக அவதரித்தான் என்று கூறுவதால் அவன் திருவுள்ளம் அவனுக்குத்தான் தெரியும். இந்த இராமானுஜனைப் பரமபதத்தில் எப்பொழுதும் பகவானுக்குத் தொண்டு செய்து போரும் திருவனந்தாழ்வானாகவும் கூறுவது உண்டு. உலகத்தில் பக்தி மார்க்கம் தழைத்தோங்கு-வதற்காகவே அவர் அவதாரம் செய்து, பக்தி நெறியைப் பரவச் செய்தவர் என்றும் சொல்லுவர். நான் ஒரு ஸ்ரீவைஷ்ணவன். வ்யாக்யானம் செய்தவர் ஸ்ரீவைஷ்ணவர்களுக்குள்ளே தலைவர். அந்த அபிமானத்தாலே நான் சொல்கிறேன் என்று யாரும்

எண்ணக்கூடாது. வ்யாக்யானத்தை பக்ஷபாதமில்லாமல் நடு நிலைமையில் நின்று கவனித்தால், உண்மை அனைவருக்கும் புலப்படும்.

"*தர்மக்ஷேத்ரே*" என்ற முதல் ச்லோகம் முதல், "*ந த்வேவாஹம் ஜாது நாஸம்*" என்கிற ச்லோகத்திற்கு முன்புள்ள "*அசோச்யாநந்வசோசஸ்த்வம்*" என்கிற ச்லோகம் வரை, கீதை ஆரம்பம் என்று சொன்னோம் அல்லவா? அதன் அர்த்தத்தைச் சுருக்கமாக இப்பொழுது பார்க்கலாம். வியாசர் சஞ்ஜயனுக்கு திவ்ய கண்ணையே கொடுத்திருக்கிறார். அவருடைய அநுக்கிரஹத்தாலே திவ்ய கண் பெற்று, யுத்தத்தில் எது எது நடக்கிறதோ அதை அதை அப்படியே திருதிராஷ்டிரனுக்கு எடுத்துச் சொல்லும்படி சஞ்ஜயனுக்கு வ்யாஸருடைய அநுக்ரஹம் ஏற்பட்டிருக்கிறது. மேலும் திருதிராஷ்டிரனும் சஞ்ஜயனும் ஒரே ஆசிரியரிடம் வித்யாப்யாஸம் செய்தவர்கள். இப்படிப்பட்ட சஞ்ஜயனைப் பார்த்து திருதிராஷ்டிரன் முதன் முதலில்

**"தர்மக்ஷேத்ரே குருக்ஷேத்ரே ஸமவேதா யுயுத்ஸவ: |**
***மாமகா: பாண்டவாச்சைவ கிமகுர்வத ஸஞ்ஜய ||"***

(1-1)

என்று கேள்வி கேட்கிறான்.

ஏ! சஞ்ஜயனே, யுத்தத்தில் ஆசையுடையவர்களான என்னைச் சேர்ந்தவர்களான (என்னுடைய பிள்ளைகளான) துர்யோதனாதியர் நூற்றுவரும், பாண்டுவின் பிள்ளைகளான ஐவரும் (பாண்டவர்களும்) தர்மக்ஷேத்ரமான குருக்ஷேத்திரத்தில் கூடினார்களே, அங்கு என்ன செய்தார்கள்? என்பதே இதன் கருத்து.

திருதிராஷ்டிரன் என்ன கருத்துடன் கேள்வி கேட்கிறான் என்பது இங்கு ஆராய்ச்சி. பலர் சென்று புஜிக்கும் போஜன சாலையில் பலரும் புகுகிறார்கள். அவர்களைக் குறித்து, போஜனம் விரும்பி அங்கு சென்றார்களே!, அவர்கள் என்ன செய்தார்கள்? என்று ஒருவன் கேட்டால் அங்கு அவர்கள் போஜனம் செய்தார்கள் என்று சொல்லாமல் வேறு என்ன சொல்ல முடியும்?

என் பிள்ளை துரியோதனன் முதலானோர்கள் கெட்ட எண்ணம் உடையவர்கள். தூதர்கள் பல சமயம் வந்து சமாதானத்தை வேண்டின போதிலும் யுத்தத்தைத் தான் விரும்பினார்கள். அயோத்தியில் பிறந்தவனுக்கு இராம பக்தி விளையுமாப்போலே, நிலமிதியாலே, பாபிகளான அவர்களுக்கும்

(என் பிள்ளைகளுக்கு) நல்ல புத்தி உண்டாகி, ஏதாவது பாண்டவர்களுக்குக் கொடுத்து யுத்தத்திலிருந்து விலகி விட்டார்களா? என்பது திருதிராஷ்டிரனுடைய ஒரு அபிப்பிராயம்.

தர்மபுத்ரர்கள் இயற்கையாகவே தர்மத்தில் ஊன்றினவர்கள். அவர்களும் நியாயமாக யுத்தம் செய்ய வந்தவர்கள்தாம். ஆனாலும் அப்படிப்பட்ட பாண்டவர்களும் யுத்தத்தில் நடக்கும் கோரமான சம்பவங்களை நினைத்து இரக்கம் மேலிட்டு யுத்தத்திலிருந்து விலகி விட்டார்களா? என்பது இரண்டாவது அபிப்பிராயம். இவ்விரண்டு அபிப்பிராயங்களில் இரண்டாவது கருத்தில்தான் (போரிலிருந்து விலகல்) திருதிராஷ்டிரனுக்கு ஊற்றம் அதிகம் என்று தெரிகிறது. அதனால் யுத்த பூமிக்குச் சென்றவர்கள் என்ன செய்கிறார்கள்? என்று அவன் கேட்கிறான்.

இனி, முகவுரை என்று சொன்ன கீதையின் ஆரம்பப் பகுதியில் அர்ஜுனனது நிலை, துரியோதனனது நிலை என்ற இரண்டு நிலைகள் நன்றாகக் கூறப்பட்டிருக்கின்றன. இது 58 ச்லோகங்களின் ஸாரமாகும்.

*"நீர்மையில்நூற்றுவர்வீய ஐவர்க்குஅருள்செய்துநின்று*
*பார்மல்குசேனையவித்த பரஞ்சுடரைநினைந்தாடி*
*நீர்மல்குகண்ணினராகி நெஞ்சம்குழைந்துநையாதே*
*ஊன்மல்கிமோடுபருப்பார் உத்தமர்கட்குஎன்செய்வாரே"*

திருவாய்மொழி -3-5-7

என்ற இப்பாசுரத்தில் நம்மாழ்வார் துரியோதனாதிகளை, "*நீர்மையில் நூற்றுவர்*" என்றருளிச் செய்தார். இவ்விடத்தில் தர்ம புத்ராதிகட்கு நீர்மை குணம் இருப்பதால் பகவான் அவர்களை ரக்ஷிப்பதற்குக் காரணமாயிருந்ததென்றும், துரியோதனாதிகட்கு நீர்மைக் குணமில்லாததால், பார்த்தசாரதி அவர்களை அழிக்க நேர்ந்தது என்றும், "*நீர்மையில் நூற்றுவர் வீய*" என்ற தொடரிலிருந்து அறியப்படுகிறது. முதல் அத்தியாயத்தில் இவ்விருவரது நிலையையும் முக்கியமாகக் காணலாம்.

யுத்த பூமிக்கு வருவதற்கு முன்பு துரியோதனன் நிலை வேறு. வந்த பிறகு இரு கட்சியையும் கண்களாலே கண்டவுடன் அவன் புத்தி வேறுபட்டு இருக்கிறது. இக்கருத்தை மேலே காணபோம். சிறிய விஷயத்தைக்கூட நன்றாகக் கவனித்துப் பொருள் சொல்வது

தான், மகான்கட்கு லக்ஷணம். இவ்விருவருடைய நிலையையும் கீதா ச்லோகங்களில் ஊன்றிப் பார்த்து ஸ்வாமி இராமாநுஜர் மிக அழகாக ஒரு அர்த்தம் அருளிச் செய்திருக்கிறார். துரியோதனன், முதலில் பீஷ்மர், துரோணர் முதலானவர்களைத் தனக்கு உதவியாக மிகவும் நம்பிக் கொண்டிருந்தவன். அவன் யுத்த பூமிக்கு வந்த பிறகு இரு சேனைகளையும் கண்ணாறக் கண்டு, துரோணாசாரியாரை நோக்கி,

**" பச்யைதாம் பாண்டுபுத்ராணாம் ஆசார்ய மஹதீம் சமூம் |**
**வ்யூடாம் த்ருபதபுத்ரேண தவ சிஷ்யேண தீமதா ||"**

(1-3)

என்று தொடங்கி

**" அத்ர சூரா மஹேஷ்வாஸா பீமார்ஜுந ஸமா யுதி |**
**யுயுதாநோ விராடச்ச த்ருபதச்ச மஹாரத: ||"**

(1-4)

**" அபர்யாப்தம் ததஸ்மாகம் பலம் பீஷ்மாபிரக்ஷிதம் |**
**பர்யாப்தம் த்வித மேதேஷாம் பலம் பீமாபிரக்ஷிதம் ||"**

(1-10)

என்று கூறியிருக்கிறான். இங்கு துரியோதனனுடைய கருத்தை இன்னதென்று பார்க்க வேண்டும்.

"*திருஷ்டத்யும்னனால் அணி வகுக்கப்பட்ட பாண்டவர்களுடைய சேனையையும் அங்குள்ள சில வீரர்களையும் நன்கு கவனிக்க வேண்டும். நம்முடைய சேனையையும் நன்கு கவனிக்கவேண்டும். நம் சேனையில் பீஷ்மர் சேனாதிபதியாக இருக்கிறார். அவர் கிழவர். அவரை நாம் தான் ரக்ஷிக்க வேண்டும்*" என்பது துரியோதனனுடைய கருத்து. இங்கு "*அபர்யாப்தம்*" என்கிற இந்த ச்லோகத்திற்கு சுவாமி மிகவும் ஊன்றிப் பார்த்து அர்த்தம் அருளிச் செய்திருக்கிறார். நாம் எல்லோரும் கண் பெற்றவர்கள். பாம்பும் கண் பெற்றிருக்கிறது. நாம் எப்படிப் பார்க்கிறோம். பாம்பு எப்படிப் பார்க்கிறது என்பதைக் கவனிக்க வேண்டும். எல்லோருடைய பைகளிலும் கீதைப் புத்தகம் இருந்தாலும், மகான்கள் பார்க்கிற பார்வையே வேறு. சுவாமி இராமாநுஜருடைய அர்ச்சா விக்ரஹத்தைச் சேவித்தாலே அவர் பார்வையிலிருந்து, அவர் க்ரந்தங்களை எப்படிப் பார்த்திருப்பர் என்று தெரியும்.

***" பார்த்தான்அறுசமயங்கள்பதைப்ப * இப்பார்முழுதும்***
***போர்த்தான்புகழ் கொண்டு புன்மையினேனிடைத்தான்புகுந்து****
***தீர்த்தான்இருவினைதீர்த்து அரங்கன்செய்யதாளிணையோடு***
***ஆர்த்தான் * இவைஎம்இராமாநுசன்செய்யும்அற்புதமே "***

இராமாநுச நூற்றந்தாதி - 52

என்ற பாசுரத்தில் திருவரங்கத்தமுதனார், ஸ்வாமியை "*பார்த்தான் அறுசமயங்கள் பதைப்ப*" என்றருளிச் செய்தார். "*அபர்யாப்தம் ததஸ்மாகம்*" என்ற இவ்வாக்கியத்தில் "*தத்*" என்கிற பதத்திற்கு ஸ்வாமி மிக அழகாகப் பொருள் கூறினார். "*தத் - ஆகையாலே*" என்பது அவருடைய உரையாகும். "*நம்முடைய சேனை பீஷ்மரால் ரக்ஷிக்கப் பட்டிருக்கிறது. ஆகையினால் நம்முடைய சேனை வலிமை குன்றியதாகும்*" என்று இங்கு துரியோதனன் கருத்தை ஸ்வாமி அருளிச் செய்திருக்கிறார். பீஷ்மாசாரியார் யுத்தம் செய்வதற்கு ஒத்துக்கொண்டு வந்தவுடனே துரியோதனனுக்கு இவ்வெண்ணம் ஏற்பட்டதாகத் தெரிகிறது. "*பீஷ்மராலே ரக்ஷிக்கப்பட்ட நம் சேனை எதரி சேனையை அழிப்பதற்குப் போதாததாகும். பீமனாலே ரக்ஷிக்கப்பட்ட (பாண்டவர்கள் சேனையைக் காட்டி) இந்தச் சேனையோ நம்மை அழிக்கப் போதுமானது*" என்று தன் வருத்தத்தை, துரோணரை நோக்கி இப்படித் தெரிவிக்கிறான் துரியோதனன். இங்கு "*பீஷ்மாபிரக்ஷிதம், பீமாபிரக்ஷிதம்*" என்ற இரண்டு தொடரையும் ஊன்றி நோக்கினால், மேற்கூறிய கருத்து நன்கு விளங்கும். மேலும், இங்கு துரியோதனன் துரோணாசாரியரை நோக்கி "*நம் சேனை பீஷ்மரால் ரக்ஷிக்கப்பட்டது, பாண்டவ சேனை பீமனால் ரக்ஷிக்கப்பட்டது*" என்று மேற்கூறிய கருத்தைக் கூறியதற்கும், "*வ்யூடாம்த்ருபத புத்ரேண தவ சிஷ்யேண தீமதா!*" என்று த்ருபத மகாராஜாவின் பிள்ளையான த்ருஷ்டத்யும்னன் துரோணாசாரியருக்கு சிஷ்யனாயிருந்து, பாண்டவர் சேனைக்குச் சேனாதிபதியாக இருக்கிறான் என்று கூறுவதற்கும் ஒரு அபிப்பிராயம் உண்டு. இங்கு துரோணாசாரியாருடைய வரலாறு சிறிது தெரிய வேண்டும். துரோணாசாரியரும், த்ருபத மகாராஜாவும் ஒரே ஆசிரியரிடத்தில் கல்வி பயின்றவர்கள். இருவரும் இளமையில் கல்வி பயில்கின்ற பொழுது மிக்க நேசத்துடன் பயின்றார்கள். அப்பொழுது த்ருபதன் துரோணரை நோக்கி,

***"என் ஐ வாளம் எய்தியானே இறைவன் ஆனால்
உன்னை ஆளவைப்பேன் உலகில் பாதி என்றான்"***

வாரணாவதச் சருக்கம் - 39

என்று கூறியபடி, தான் அரசனான பிறகு பாதி ராஜ்யத்தை துரோணருக்குக் கொடுத்து அவரை ஆளவைப்பதாகத் துருபதன் கூறியிருக்கிறான். அப்படியே துருபதனும் தலைவனானான். துரோணரும் திருமணம் செய்து கொண்டார். அவருக்குக் குழந்தையும் பிறந்தது. அக்குழந்தைக்குப் பாலூட்ட ஆவின் பால் கிடைக்காமல் வருந்தினார். வறுமையால் தாய்ப்பாலும் அக்குழந்தைக்குக் கிடைக்கவில்லை.

***"கந்த மகவை யீ ன்ற காளகண்ட ளருளால்
வந்த மகவுஇம் மகவும் வ றுமை வளர வளர்ந்தான்
இந்த மகவும் ஐயாண்டு இளமை அதியா தெனலால்
தந்த மகவை நோக்கித் தாயும் பெருகத் தளர்ந்தான்"***

வாரணாவதச் சருக்கம் - 42

என்ற வில்லியின் பாடலால் மேற்கூறிய துரோணரின் நிலை விளங்கும். இந்நிலையில் தன் குழந்தைக்குப் பசுவின் பால் தருவதற்காக இளமை நண்பனான துருபதனிடம் சென்று பசு வாங்கி வருவதற்காகப் புறப்பட்டுப் போனார். அவனோ பாதி அரசு தருவதாகக் கூறியிருக்கிறானல்லவா! துருபதனிடம் சென்று தன் நிலையை விளக்கி ஆவின் பால் வேண்டும் என்று நா நடுங்கக் கேட்கிறபொழுது, *"நீ யார்?"* என்று துரோணரை நோக்கி துருபதன் கேட்டான். அச்சொற்கேட்ட துரோணர் நடுங்கி *"நான் உன் நண்பன்"* என்றார். அப்பொழுது அரசன், *"நான் அரசன். நீ முனிவன். உனக்கும் நமக்கும் என்ன தொடர்பு உண்டு?"* என்று கேட்டான். அப்பொழுது துரோணர் கோபங்கொண்டு, *"மன்னா! நீ சொன்ன சொல்லை மறந்தாய், பாதி ராஜ்ஜியம் எனக்குத் தருவதாகச் சொன்ன வாய்மையை நீ காப்பாற்றவில்லை. நானோ மறக்க மாட்டேன். நிச்சயமாக என்னிடம் நீ இளமையில் சொன்னபடியே உன் ராஜ்ஜியத்தில் பாதியைப் பெறுவேன். யுத்தத்தில் உன்னைத் தேருடன் கட்டிக் கவர்ந்து வருவேன். இதை நன்றாக அறிந்து கொள்"* என்று சொல்லிவிட்டு அங்கிருந்து அகன்றார். இவ்வரலாற்றை வில்லிபுத்தூரார் மிக அழகாக உரைத்தார்.

"மாவின் பாலையுந்தி மரபுக்குரிய மைந்தன்
ஆவின் பால்கண்டு அறியான்; அதனால் வருந்தி அந்தக்
கோவின் பால்எய்தலும் கோமான், "யார் நீ" என்ன?
நாவின் பாலால் நடுங்கி நான்உன் நண்பன் என்றேன்"

வாரணாவதச் சருக்கம் - 43

"மன்னன் யான், நீ முனிவன், மரபால் எனக்கும் உனக்கும்
என்ன நண்பு உண்டு என்ன ஏசி நகை செய்திகழ்ந்தான்
அன்ன துருபன் தன்னை அவையில் அரசர் கேட்பச்
சொன்ன வாய்மை நீயே சோர்ந்தாய், யானோ சோரேன்"

வாரணாவதச் சருக்கம் - 44

"புகன்ற படி நீ ஆளும் புவியும் பாதி கொள்வேன்
இகன்ற சமரில் உன்னை இரதத்துடனே கவர்வேன்
அகன்ற மெய்ம்மை உடையாய்! அறிதி என்றேன் என்று
சுகன்றன் ஞானம் பெற்ற துரோணன் சொல்லக்கேட்டான்"

வாரணாவதச் சருக்கம் - 45

இங்ஙனம் துரோணர் தாம் சொன்னபடியே அர்ஜுனனுக்கு வில்வித்தை கற்றுக் கொடுத்து அவனிடம் காணிக்கையாக அவன்மூலம் துருபதனை வென்று தேரில் கட்டிக் கொண்டு வந்தார்.

"தகப்படும் சராசனத் தனஞ்சயன் கைவாள் வெரீஇ
அகப்படும் துராதிபன்றன் அந்தவில்லின் நாணினான்
மிகப்படும் தடங்கொள் தேர்மிசைப் பிணித்து விசையுடன்
நகப்படும் செயற்கைசெய்து குருவின் முன்னர் நணுகினான்"

வாரணாவதச் சருக்கம் - 80

என்று கூறுவர் வில்லிபுத்தூரார்.

அப்பொழுது துரோணர் துருபதனைப் பார்த்துச் சில சொற்கள் கூறி உயிர் வாழும்படி அவனை அனுப்பினார்.

"முறுவல் கொண்டு கண்டசாப முனியும் நாண எம்மை நீ
உறுவதொன்றும் உணர்கலாது உரைத்த புன்சொல் அறிதியே?
மறுவில் அந்தணாளன் யானும்; மன்னன் நீயும்; வாசவன்
சிறுவன் வென்று உனைப்பிணித்த சிறுமை என்ன பெருமையோ!"

வாரணாவதச் சருக்கம் - 81

*"அன்றெ னக்கு நீயி சைந்த வவனி பாதி யமையுமன்று*
*இன்று னக்கு நின்ற பாதி யான்வ ரைந்து தருகுவன்*
*குன்றெ னக்கு விந்தி லங்கு கொந்த வாகு வீரனே!*
*உன்ற னக்கு வேண்டு மென்ன வுயிரும் வாழ்வு முதவினான்"*

வாரணாவதச் சருக்கம் - 82

இங்ஙனம் துரோணரால் சொல்லப்பட்டு, உயிர் பெற்றுச் செல்லுகிற துருபத மகராஜன் அவமானத்தால் வருந்தி, துரோணரைப் பழிக்குப் பழி வாங்க எண்ணினான். அர்ஜுனனுடைய வில் திறமையை எண்ணி அவனுக்குப் பரிசளிக்கவும் கருதினான். தன் நகர் சென்று குருக்களை நோக்கி துரோணரின் தலை துணிக்க ஒரு மகனும் அர்ஜுனனின் வீரத்தோளைத் தழுவ ஒரு மகளும் தனக்குப் பிறக்க வேண்டும் என்று வேண்டினான்.

*"மறுகில் பணிலம் தவழ்முழன*
*வளநா டுடையான் எதிர்வணங்கி*
*குறுகிப் புரிவெங்கலைக்கோட்டு*
*முனியே போலும் முனிவரரைத்*
*தறுகண் குருவின் தலைதுணிக்கத்*
*தகவோர் மகவும் தனஞ்சயன் தோள்*
*உறுகைக்கு ஒருபூங் கன்னியையும்*
*பெறுவான் வேண்டி உத்திரந்தான் "*

வாரணாவதச் சருக்கம் - 84

அம்முனிவர்களும், புத்திரக் காமேட்டி யாகம் இயற்றி அந்த யாகத்திலிருந்து ஒரு வீரனைத் தோற்றுவித்தார்கள்.

*"வலையம் பிறழ முடிதயங்க*
*மணிக்குண்டலம்பே ரழகுதிப்பச்*
*சிலையும் கையும் மெய்யும் வயம்திகழ்*
*போர்வயிரக் கவசமுமாய்க்*
*கொலைவெஞ்சிங்கக்குருளையொ*
*லங்குன்றின் புறத்துக் குதிப்பதுபோல்*
*தலைவன் களிக்கத் தடந்தேர்மேல்*
*தலைவன் ஒருவன் தலைப்பட்டான் "*

வாரணாவதச் சருக்கம் - 87

என்று கூறியபடி,

இங்ஙனம் துருபதனுக்கு யாகத்தில் தோன்றியவனே த்ருஷ்ட்யும்னன் எனப்பட்டான். அவன் துரோணரிடம் சென்று வில்வித்தை கற்றான். துரோணரும் இவனால் நமக்கு மரணம் ஏற்படப்போகிறது என்று அறிந்தும் அவனுக்கு வில்வித்தையைக் கற்றுக் கொடுத்தார். உண்மை வீரன் ஒருவனால் தனக்கு மரணம் நேர வேண்டும், அவ்வீரன் இவனல்லால் பிறரில்லை என்று கருதியே இவனுக்கு விற்கலை நுணுக்கம் யாவும் கற்பித்தார்.

*"கரணம் மருவுந்திலங்கு திறத்தலை*
*சொல்லவன்பால் கண்வருந்தோன்*
*சரணமலர் தன்தலைக் கொண்டு*
*"தனுநூல் எனக்குத் தருக" என்றான்*
*"மரணமிவனால் தனக்கு"*
*என்பதுணர்ந்தும் குருவும் மனதளித்தான்*
*அரணியிடத்தில் செறிந்தன்றோ*
*அதனைச் செகுப்பதுமம்மா"*

வாரணாவதச் சருக்கம் - 93

என்று வில்லி நயம்பட உரைத்தார்.

இங்ஙனம் துரோணருடைய வரலாற்றை நோக்குகிற பொழுது த்ருஷ்டத்யும்னனால் அவருக்கு மரணம் நேர்ந்திருக்கிறது என்பது புலனாகிறது. அந்த த்ருஷ்டத்யும்னன் இப்பொழுது பாண்டவர்களுக்கு சேனாதிபதியாக நின்று கொண்டிருக்கிறான். இப்படியிருக்க த்ருஷ்டத்யும்னனால் ரக்ஷிக்கப்பட்டிருக்கிற பாண்டவ சேனையை வெல்ல நம் சேனை போதாது என்றும் கூறலாம். அங்ஙனம் கூறாமல் *"பீமா பிரக்ஷிதம்"* என்று துரியோதனன் சொல்வதற்கு என்ன பொருத்தம் என்று சுவாமி இராமாநுஜர் இங்கு ஆராய்ந்திருக்கிறார்.

பீமனுக்கு நல்ல சூக்ஷ்ம பலம் கிடையாது. முரட்டு பலம், முரட்டு சுபாவம் உண்டு. அவனைத் தாயான குந்தி பிரசவிக்கிற பொழுது ஒரு குன்றில் பிரசவிக்கிறாள். அக்குழந்தை குன்றில் விழுந்தபோது அக்குன்று பொடிப்பொடியாய் உதிர்ந்திருக்கிறது என்பது அவனது இளமைக் கதை. அத்தகைய வீரம் இளமையிலேயே இருந்ததால் இப்பொழுது அவன் வீரம் சொல்லுந்தரமன்று. மேலும், துரியோதனன், திரௌபதி துயில் உரியப்படுகிற பொழுது தன் தொடையைத் தட்டிக்காட்டி அவமதித்திருக்கிறான். அதைக்கண்ட பீமன்,

*"துரியோதன் திரௌபதியைச் சுட்டி எந்தத் தொடையைத் தட்டிக் காட்டினானோ அத்தொடையை என் கதையால் அடித்து அவனைக் கொல்வேன்"* என்று சபதம் செய்திருக்கிறான். இப்பொழுது துரியோதனன், அன்று பீமன் சொன்ன சபதத்தையும் அவன் உடல் வலிமையையும் நினைத்து நடுங்கிக் கிழட்டுப்-பீஷ்மராலே ரக்ஷிக்கப்பட்டிருக்கிற நம்முடைய சேனை என்னைக் கொல்வதற்குச் சபதம் செய்திருக்கிற பீமனால் ரக்ஷிக்கப் படுகிற பாண்டவ சேனையிடத்திலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்ள எப்படி முடியும்? என்ற கருத்தோடு *"பீமாபிரக்ஷிதம்"* என்று துரியோதனன் கூறியிருக்கிறதாகக் கருத்து புலனாகிறது. மேலும், *"சிகண்டியின் கண்ணில் பட்டால் உடனே பாணத்தைக் கீழே போட்டுவிடுவேன்"* என்று பீஷ்மர் முன்னெச்சரிக்கை செய்தே தான் சேனாதிபதியாக இருக்க ஒப்புக்கொண்டிருக்கிறார். சிகண்டியைக் கொன்றுவிட்டால் பீஷ்மரைக் கொல்ல ஆளில்லை என்று எண்ணி துரியோதனன் பீஷ்மரை சேனாதிபதியாக இருக்கும்படி சம்மதித்தி-ருக்கிறான். தர்ம புத்திரர் விரோதிகள் கையில் சிகண்டியைக் காட்டித் தராமல் பீஷ்மருக்கு முன்பு சிகண்டியை நிறுத்தி அவர் கையிலிருந்து வில்லைக் கீழே போடப்பண்ண-வேண்டும் என்று நினைக்கிறார். *"பாபியான நம்முடைய எண்ணத்தைக் காட்டிலும் தர்மபுத்திரருடைய எண்ணம் கைகூடும்"* என்றும் இங்கு துரியோதனன் மனத்தில் தோன்றுகிற எண்ணமாகும். மேலும் பீஷ்மர் தம் உள்ளன்புடன் பாண்டவர்கள் க்ஷேமமாயிருக்க வேண்டுமென்று தம் ஆசீர்வாதத்தை அங்குப் பண்ணுகிறார். செஞ்சோற்றுக் கடன் கழிக்கும் கடமைக்குச் சேர நின்று இவர்கள் பக்கமிருந்து யுத்தம் செய்ய சம்மதித்து இருக்கிறார். இக்கருத்துக்களையெல்லாம் எண்ணிப்பார்த்து துரியோதனன் துரோணரை நோக்கி, பீஷ்மரால் ரக்ஷிக்கப்-படுகின்ற நம்முடைய சேனை பீமனால் ரக்ஷிக்கப்படுகின்ற பாண்டவ சேனையிடமிருந்து நம்மை எப்படி ரக்ஷிக்கப்-போகின்றது? என்று அழுது பேசியிருக்கின்றான். இக்கருத்து,

**"தஸ்ய ஸஞ்ஜநயந் ஹர்ஷம் குருவ்ருத்த: பிதாமஹ: |**
**ஸிம்ஹநாதம் விநத்யோச்சை : சங்கம் தத்மௌ ப்ரதாபவாந் ||"**
(1-12)

என்ற ச்லோகத்தில், *"குரு வ்ருத்த: பிதாமஹ:"* (வயது முதிர்ந்தவர்-பாட்டனார்) என்றதால் வெளியாகும். *"ஸிம்ஹ நாதம் விநத் யோச்சை: சங்கம் தத்மௌ பிரதாபவான்"* என்று பீஷ்மர்

துரியோதனனுடைய இந்த மனக்கலக்கம் தீர்ந்து அவன் தெளிவடைவதற்காகவே சங்க நாதத்தை ஊதினார் என்று தெரியவருகிறது. இதுகாறும் கூறிய துரியோதனன் நிலையை ஆராய்ந்து பார்க்கிறபொழுது தர்ம புத்ராதிகளை, இந்த யுத்தத்தில் நம்மால் பொடி படுத்த முடியாதே என்று துரியோதனன் கவலைப்படுவதாகத் தெரிய வருகிறது. இனி அர்ஜுனன் நிலையைக் காண்போம்.

துரியோதனாதிகள் பந்துக்கள் என்று சொல்லத் தகுந்தவர்களேயில்லை. வேதாந்தம்,

**"மாதா, பிதா, ப்ராதா, நிவாஸ: சரணம் ஸுஹ்ருத்கதிர் நாராயண:"**
என்றும்,

***"சேலேய் கண்ணியரும் பெரும் செல்வமும் நன்மக்களும்
மேலாத் தாய் தந்தையும் அவரே இனி ஆவாரே"***

(திருவாய்மொழி -5-1-8)

என்றும் கூறியிருப்பதால் பகவானே எல்லாவித பந்துவாகவும் இருக்கிறவன். இப்படியிருக்க பந்துவல்லாத துரியோதனாதிகளை பந்துக்களாகக் கருதி அவர்கள் திறத்தில் அர்ஜுனன் மிகவும் இரக்கங்கொண்டு யுத்தத்திலிருந்து பின் வாங்குகிறான். நெருப்பை வைப்பவன், பிறர் மனைவியைப் பரிபவப்படுத்துகிறவன் முதலிய இவர்களை பகவான் "*ஆததாயிகள்*" என்று கூறி அவர்களை அவசியம் கொல்லவேண்டும் என்று நியமித்திருக்கிறான். இப்படியிருந்தும் இங்கு அர்ஜுனன், பகவான் நியமனப்படி நடக்காமல் மிக்க இரக்கங்கொண்டிருக்கிறான் என்பதைப் பார்க்கிறபொழுது அர்ஜுனனுடைய நீர்மை வெளியாகிறது. க்ஷத்ரியனுக்கு நீர்மை மட்டும் இருப்பது குணமாகாது. தக்க இடங்களில் கோபத்தையும் காட்டவேண்டும். இது க்ஷத்ரிய தர்மம். ஸ்ரீராமபிரானுடைய கல்யாண குணங்களை அருளிச்செய்கிற வால்மீகி, "*கோ ஜிதக்ரோத:*" என்றும் "*கஸ்ய பிப்யதி தேவாஸ்ச ஜாத ரோஷஸ்ய ஸம்யுகே*" என்றும் வெளியிட்டிருக்கிறார்.

***"ஆழிசூ ழுலகமெல்லாம் பரதனே யாள நீபோய்த்
தாழிருஞ் சடைகள் தாங்கித் தாங்கரும் தவமேற்கொண்டு
பூழிவெங் கானம் நண்ணிப் புண்ணியத் துறைகளாடி
ஏழிரண் டாண்டில் வாவென்று இயம்பினன் அரசன் என்றாள்"***

அயோத்தியா காண்டம் - கைகேயி சூழ்வினைப்படலம்-111

என்று கைகேயி ஸ்ரீராமபிரானைப் பார்த்து கூறுகிற பொழுது அப்பொழுதலர்ந்த செந்தாமரையினை வென்ற திருமுகத்துடையவனாகி,

***"மன்னவன் பணியன்றாகின், நும் பணி மறுப்பனோ? என்***
***பின்னவன் பெற்ற செல்வம் அடியனேன் பெற்றதன்றோ?***
***என் இனி உறுதி அப்பால்? இப் பணி தலைமேல் கொண்டேன்;***
***மின் ஒளிர் கானம் இன்றே போகின்றேன், விடையும் கொண்டேன்"***

அயோத்தியா காண்டம் - கைகேயி சூழ்வினைப்படலம்-114

என்று கூறி கோபமில்லாதவனாகி வனத்துக்கு எழுந்தருளியிருக்கிறான்.

திருமங்கையாழ்வாரும், *"சிற்றவை பணியால் முடிதுறந்தானைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே"* ( திருமொழி 2-3-1 ) என்று அருளிச் செய்திருக்கிறார்.

அதே இராமபிரான், லக்ஷ்மணன் சக்தி ஆயுதத்தால் அடிபட்டுக் கிடக்கிற பொழுது,

**"அத்ய ராமஸ்ய ராமத்வம் பஸ்யந்து மம ஸம்யுகே ||**

வா.ரா.யுத்த கா - 101 - 55

**த்ரயோ லோகா: ஸகந்தர்வா: ஸதேவா: ஸர்ஷிசாரணா: |**
**அத்ய கர்ம கரிஷ்யாமி யல்லோகா: ஸசராசரா: ||**

வா.ரா.யுத்த கா - 101 - 56

**ஸதேவா: கதயிஷ்யந்தி யாவத்பூமிர்தரிஷ்யதி |**

வா.ரா.யுத்த கா - 101 - 57

என்று கோபமிட்ட வழக்காகி எல்லோரும் நடுங்கும்படி யுத்தம் செய்திருக்கிறான். இவ்வரலாற்றைப் பார்த்தால் இராமபிரானிடம் இரக்கமும் சீற்றமும் இரண்டும் சேர்ந்து அவை குணமாகப் பிரகாசித்திருக்கின்றன என்பது பிரசித்தம். இவ்வாறு இல்லாமல் அர்ஜுனன் கேவல இரக்கத்தை மட்டும் கைக்கொள்வதால் அது குணமாகக் கூறுவதற்கில்லை. மேலும் தான் இரங்குவது நியாயம் என்று கருதி கண்ணனைப் பார்த்து,

**"தஸ்மாந் நார்ஹா வயம் ஹந்தும் தார்த்தராஷ்ட்ராந் ஸ்வபாந்தவாந் |**
**ஸ்வஜநம் ஹி கதம் ஹத்வா ஸுகிந: ஸ்யாம மாதவ ||"**

(1-37)

**"ஆசார்யா: பிதர: புத்ரா: ததைவ ச பிதாமஹா: |**
**மாதுலா: ச்வசுரா: பௌத்ரா: ச்யாலா: ஸம்பந்திநஸ்ததா ||"**
(1-34)

**" ஏதாந்ந ஹந்துமிச்சாமி க்நதோऽபி மதுஸூதந |**
**அபி த்ரைலோக்யராஜ்யஸ்ய ஹேதோ: கிம் நு மஹீக்ருதே ||"**
(1-35)

**" கதம் பீஷ்மமஹம் ஸங்க்யே த்ரோணம்ச மதுஸூதந |**
**இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதந ||"**
(2-4)

**" குருநஹத்வா ஹி மஹாநுபாவாந்**
**ச்ரேயோ போக்தும் பைக்ஷ்மபீஹ லோகே |**
**ஹத்வாऽர்த்த காமாம்ஸ்து குருநிஹைவ**
**புஞ்ஜீய போகாந் ருதிரப்ரதிக்தாந் || "**
(2-5)

என்று கூறிக் கடைசியில்,

**"கார்ப்பண்யதோஷோபஹத ஸ்வபாவ:**
**ப்ருச்சாமி த்வாம் தர்மஸம்மூடசேதா: |**
**யச்ச்ரேய: ஸ்யாந் நிச்சிதம் ப்ரூஹி தந்மே**
***சிஷ்யஸ்* தேஹம் சாதி மாம் த்வாம் ப்ரபந்நம் || "**
(2-7)

என்று சரணாகதி பண்ணியிருக்கிறான்.

கீதா சாஸ்திரம் ஆத்ம க்ஷேமத்திற்காகத் தான் அவதரித்திருக்கிறது. இஹலோக க்ஷேமத்திற்காக ஏற்பட்டதில்லை. "*இதுதான் மகான்கள் போகிற வழி*". "*ச்ரேய:*" என்கிற சப்தம் ஆத்ம க்ஷேமத்தையே குறிக்கும். ராஜ்யம் கிடைக்க யுத்தம் செய்ய வேண்டும். யுத்தம் செய்து வென்று ராஜ்யம் கிடைத்தால் போகம் கிடைக்கும். இது பற்றிக் கேள்வியும் இல்லை. பதிலும் இல்லை. "*ஸோ அம்ருதத்வாய கல்பதே*" என்று சுருதி மோக்ஷத்தைக் கூறியிருக்கிறது. "*ப்ரஸ்தானத்ரயம்*" (பகவத் கீதை, உபநிஷத், பிரும்ம சூத்திரம்) என்ற க்ரந்தங்களை ஆசார்யனிடத்தில் முறையாகக் கேட்க வேண்டும். இதை மும்மதஸ்தர்களும் ஏற்றுக் கொண்டிருக்கிறார்கள்.

சிஷ்யன், இங்கு அர்ஜுனன் கூறியது போல, "*யச்ரேயஸ் யாத் தன் மே ப்ரூஹி*" என்று ஆசார்யனிடம் கேட்கவேண்டும். இவ்வாறு கேட்பதற்கு ஆசார்யன் எது உயர்ந்த தத்துவமாக

இருக்கிறதோ அதை சிஷ்யனுக்குக் கூறுவன். இவ்வாறே அர்ஜுனனாகிய சிஷ்யனுக்கு அதை உபதேசித்திருக்கிறான் கண்ணன். அவன் உபதேசித்த சமாதானத்தைப் பார்க்கிற பொழுது இது உலக க்ஷேமத்தைக் கூற வந்ததில்லை, ஆத்ம க்ஷேமத்தையே கூற வந்ததாகும் என்பது நன்கு புலனாகும்.

4வது அத்தியாயத்தில்

**"இமம் விவஸ்வதே யோகம் ப்ரோக்தவா னஹமவ்யயம் |**
**விவஸ்வாந் மநவே ப்ராஹ மநு ரிக்ஷ்வாகவேSப்ரவீத் ||"**

(4-1)

என்று பகவான் அருளிச் செய்திருக்கிற வசனங்களை நோக்கினால் ஆத்ம க்ஷேம சாஸ்திரம் என்பது நன்றாகத் தெரியும். இவ்வாறு கூறாமல் இம்மைப் பயனையே கீதை சொல்கிறது என்றால் இந்த க்ரந்தத்திற்கு மூன்று மதாசார்யர்களும் வ்யாக்யானம் பண்ணுவார்களா?

கண்ணனும்,

**"யம் ஹி ந வ்யதயந்த்யேதே புருஷம் புருஷர்ஷப |**
**ஸமது:க்கஸுகம் தீரம் ஸோSம்ருதத்வாய கல்பதே ||"**

(2-15)

**"ஆப்ரஹ்ம புவனால்லோகா: புனராவர்த்திநோSர்ஜுன |**
**மாமுபேத்ய து கௌந்தேய புனர்ஜந்ம ந வித்யதே ||"**

(8-16)

**"மந்மநா பவ மத்பக்தோ மத்யாஜீ மாம் நமஸ்குரு |**
**மாமே வைஷ்யஸி யுக்த்வைவ-மாத்மாநம் மத்பராயண: ||"**

(9-14)

**"ஸர்வ தர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ |**
**அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: ||"**

(18-66)

என்று கூறியிருப்பதால் ஆத்மக்ஷேம சாஸ்த்ரம் என்பது ஸித்தமாகும். தர்ம புத்ரர் கண்ணனைப் பார்த்து, *"உலகத்தில் உன்னிடம் பக்தி பண்ணுகிறவர்கள் ஏன் கஷ்டப்படுகிறார்கள்?"* என்று கேட்டார். அதற்கு கண்ணன் *"யஸ்ய அனுக்ரஹம் இச்சாமி தஸ்ய வித்தம் ஹராம்யஹம்"* என்று பதில் தருகிறான். இதனால் ஆத்ம

க்ஷேமத்தையே பகவான் சிறந்ததாகத் திருவுள்ளம் பற்றியிருக்கிறான் என்று ஸ்பஷ்டமாகத் தெரிகிறது.

ஆகவே, துரியோதனன் நிலையில், பாண்டவர்களுடைய வீரத்தைப் பார்த்து அவர்களைக் கொல்ல முடியவில்லையே என்று அவன் வருந்துகிறதையும், அர்ஜுனன் நிலையில், பந்துக்களைக் கொன்று ராஜ்யமாள்வது நியாயமில்லை என்று இவன் இரக்கம் கொள்கிறதையும் பார்த்தோம். இப்படி இரங்கத்தகாத இடத்தில் இரக்கம் கொள்கிற அர்ஜுனனை நோக்கி ஆத்ம க்ஷேமத்தை தருகிற வேதாந்த சாஸ்திரத்தை உபதேசித்திருக்கிறான் பகவான். இதுவே கீதையில் முதல் அத்தியாயம் தொடங்கி இரண்டாம் அத்தியாயத்தில், "*அசோச்யான் அந்வ சோசஸ்த்வம்*" என்கிற ச்லோகத்திற்கு முன்புள்ள ச்லோகம் வரையும் கூறப்பட்டிருக்கிற சாரமாகும்.

"அஸ்தாந ஸ்நேஹகாருண்ய தர்மாதர்மதியாSSகுலம் |
பார்த்தம் ப்ரபந்நமுத்திச்ய சாஸ்த்ராவதரணம் க்ருதம் ||"

என்பது கீதார்த்த சங்கிரஹ முதல் ச்லோகம் ஆகும்

முதல் அத்தியாயம் முற்றும்.

# இரண்டாம் அத்தியாயம்

பகவான் ஸ்ரீபார்த்தசாரதி அர்ஜுனனைக் குறித்து அருளிச்செய்த கீதா சாஸ்திரம் பதினெட்டு அத்தியாயங்களைக் கொண்டது. "*ந த்வேவாஹம் ஜாது நாசம் ந த்வம் நேமே*" என்கிற ச்லோகத்திற்கு முந்தின ச்லோகமான "*அசோச்யாந்ந்வசோசஸ்த்வம்*" முடிய முகவுரை என்றும், இந்த ச்லோகம் தொடங்கி "*கீதா சாஸ்திரம்*" என்றும் கீழே கூறப்பட்டது.

அர்ஜுனன் தனக்குரிய தர்மத்தை அதர்மமாக நினைத்து போரிலிருந்து (நிவ்ருத்தி) பின் அடைகிற சமயத்தில் "*எனக்கு எதைச் செய்தால் நன்மை உண்டாகுமோ அதைச் சொல்வாயாக*" என்று பகவானைப் பார்த்துக் கேட்கிற பொழுது பகவான் கீதா சாஸ்திரத்தை வெளியிட்டிருக்கிறான் என்று தெரிகிறது. இரண்டாம் அத்தியாயத்தில்,

**"ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா: |**
**ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ||**

(2-12)

என்கிற ச்லோகம் முக்கியமானது. இந்த ச்லோகார்த்தத்தை விஸ்தாரமாக அனுபவிக்க வேண்டும். இந்த சாஸ்திரம் ஆத்ம க்ஷேமத்தைக் குறிக்கச் சிறந்த சாஸ்திரம். ஒருவனுக்குத் தான் செய்த பாபமடியாக நோய் வருகிறது. தகுந்த வைத்யனிடம் காட்டுகிறபொழுது அவன் நோய் தீர மருந்து கொடுக்கிறான். மருந்து தின்பதற்குக் கசப்பாயிருக்கிறது. அதனால் சிரமம் ஏற்படுகிறது. ஆனாலும் கசப்புத் தெரியாமலிருக்க வெல்லம் முதலிய அபிமத (இஷ்ட) வஸ்துக்களில் கலந்து கொடுக்கிறார்கள். வெல்லம் நோய்க்குப் பரிகாரத்தைச் செய்வதில்லை. மருந்து தான் பரிகாரத்தைச் செய்கிறது. இவ்வாறே, "*மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணன்*" எனப்படுகிற சர்வேச்வரன் நம்முடைய பிறவி நோய் தீருவதற்கு மருந்து போல ஹிதத்தை இந்த சாஸ்திரத்தில் கொடுத்திருக்கிறான். "*கடுத்தின்னாதானைக் கட்டி பூசித்தின்பிப்பாப் போலே*" என்று தமிழ் இலக்கணம் கூறும்.

சிலர் மருந்தை வெல்லத்தை வைத்துக் கொடுக்காமல் நேருக்கு நேர் கொடுத்தாலும் புஜித்து விடுவர்கள். அதுபோல பகவானும் இங்கு நேருக்கு நேர் ஹிதத்தை ஒரு விதமாய் அருளிச் செய்திருக்கிறான் என்றும் கொள்ளவேண்டும். வெல்லம் முதலிய அபிமத வஸ்துக்களில் கலந்து கொடுப்பது போலவே இங்கும் எம்பெருமான் ஹிதத்தை அபிமத வஸ்துக்களாகிற கர்மாத்யுபாயங்களில் கலந்து ஹிதமாகிற மருந்தைக் கொடுத்திருந்தாலும் நம்முடைய அஜ்ஞான அசத்திகளைப் பார்க்கிறபொழுது இதுவும் சிரமமாகத்தான் தெரிகிறது. நம் புத்திக்கு சிரமம் ஏற்படுவதாக இருந்தாலும் நாம் ஊற்றத்துடன் கவனித்துக் கேட்போமேயானால் அது நம்முடைய ஆத்ம க்ஷேமத்தில் பர்யவசிக்கும் (முடிவடையும்). இனி விஷயத்தைக் கவனிப்போம்.

அர்ஜுனன் நிலையை கவனிக்கிறபொழுது, அவனை அறிவுள்ளவன் என்று ச்லாகித்துச் சொல்வதற்கும் இல்லை, மூடன் என்று பழித்துச் சொல்வதற்கும் இல்லை. அவனுடைய வார்த்தைகளைக் கவனிக்கிறபொழுது, தெளிவற்றவன் என்று கருதுவதற்கும் இடம் தருகிறது. *"எதைக்கண்டு சோகிக்கத் தகாதோ அதைக்கண்டு சோகிக்கிறாய்! சிறந்த அறிவுள்ளவன், சரீரத்தைப்பற்றியும் ஆத்மாவைப்பற்றியும் கவலைப்படுவதில்லை"* என்று பகவான் அர்ஜுனனை நோக்கிக் கூறுகிற,

**"அசோச்யாநந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே |**
**கதாஸூநகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா: ||"**

(2-11)

என்ற ச்லோகத்தில் *"நாநுசோசந்தி பண்டிதா:"* என்பது கவனித்தற்குரியது. வெள்ளரிப் பழத்திற்குப் பூண்கட்டுவது போல, இந்த சரீரம் நன்றாயிருக்க வேண்டுமென்று அதற்காக நாம் சிலவற்றைச் செய்தாலும் இதைக் காப்பாற்ற முடியாது. அப்படியிருக்க சரீரம் அழிகிறதைப்பற்றி, ஏ! அர்ஜுனா! நீ கவலைப் படுகிறாயே, என்ன பயன்?. பீஷ்மர், துரோணர் முதலியோர்களை நீ அழிக்காமற் போனாலும் அவர்களுடைய சரீரம் அழியக் கூடியதுதான். சரீரத்தின் உள்ளிருக்கும் ஆத்மா அழியக் கூடியதில்லை.

**"நித்யாத்மாஸங்ககர்மேஹா கோசரா ஸாங்க்ய யோக தீ: |**
**த்விதீயே ஸ்திததீலக்ஷா ப்ரோக்தா தந்மோஹசாந்தயே ||"**

இது இரண்டாம் அத்தியாயத்தின் சங்கிரஹ ச்லோகம்.

இதன் அர்த்தத்தைச் சுருக்கமாகப் பார்ப்போம். முதன் முதலில் நம்முடைய அனுபவத்தைக் கவனிக்க வேண்டும். மகாபாரதத்தில் *யக்ஷப்ரச்னம்* என்பது ஒன்று. அதில்,

**"கோ மோததே கிமாஸ்சர்யம் க:பந்தா கா ச வார்த்திகா |**
**வத மே சதுர:ப்ரச்நாந் ம்ருதா ஜீவந்து பாந்தவா: ||"**

என்று தர்மபுத்திரரைப் பார்த்து யக்ஷன் கேட்கிறான். இந்த ச்லோகத்தில் "*கிமாச்சர்யம்*" என்பது ஒரு கேள்வி. இதற்கு தர்மபுத்திரர் பதில் சொல்கிற பொழுது,

**"சேஷாஸ்தாவரம் இச்சந்தி கிமாச்சர்யம் அத:பரம்"**

என்று கூறியிருக்கிறார். எண்ணிறந்த ஜீவன்கள் பிறக்கிறார்கள். இறக்கிறார்கள். ஆனாலும், "*பிறக்கிறவர்கள் பிறந்து கொண்டிருக்கிறார்கள், இறக்கிறவர்கள் இறந்து கொண்டிருக்கிறார்கள், நாம் ஸ்திரமாக இருக்கிறோம்*" என்று சிலர் எண்ணுகிறார்களே இதுதான் உலகத்தில் ஆச்சரியம் என்றார் தர்மபுத்திரர். இங்கு "*சேஷாஸ்தாவரம் இச்சந்தி*" என்பதைக் கவனிக்க வேண்டும். இங்கு "*சேஷா*" என்பதற்கு "*ப்ரேத வாஹகா*" என்பது அர்த்தம். அவர்கள் தங்களை, "*ஸ்தாவரம் இச்சந்தி*" நிலையை உடையவர்களாகக் கருதுகிறார்கள் என்று கூட ரசமாக அர்த்தம் சொல்வதுண்டு. ஒருநாள் மயானத்திற்குப் போனால் வைராக்யம் உண்டாகும். நித்தியம் போகிறவர்களுக்கு வைராக்யம் உண்டாகாது.

ஆத்ம க்ஷேமம் வேணும் என்று எண்ணுகிறவனுக்கு முதல்படி எதுவென்றால், "*சரீரத்தைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டது, அது நித்யமானது*" என்கிற உண்மை அறிவே முதல் படியாகும். "*சரீரம் அழியும் பொருள், அது ஆத்மாவைக் காட்டிலும் வேறுபட்டது, அநித்யமானது*" என்றும் அறியவேண்டும். இவ்வாறு பகுத்தறிவதையே "*ஞானம்*" என்று இந்த சாஸ்திரத்தில் சொல்லப்படுகிறது.

"*குலந்தாங்கு சாதிகள் நாலிலும்*" (திருவாய்மொழி-3-7-9) என்று ஆழ்வாரும் அருளிச் செய்திருக்கிறார். பிரம்மசர்யம் முதலியன நான்கு ஆச்ரமங்கள். இன்ன ஆச்ரமத்தில் இந்த வர்ணத்தில் இருப்பவன் என்று சாஸ்திரம் சொல்கிறபடி பலத்தில்

விருப்பமில்லாமல் செய்கிற காரியத்திற்குக் "*கர்ம யோகம்*" என்று பெயர். இப்படிப் பலத்தில் விருப்பம் இல்லாமல் சாஸ்திரம் சொல்கிறபடி அனுஷ்டிப்பதே "*கர்ம யோகம்*" என்பதை சங்கிரக ச்லோகத்தில் ஆளவந்தார், "*அஸங்க கர்மேஹா*" என்று அருளிச்செய்தார். ஒருவன் நெடுகின காலத்தில் தனக்குரிய கர்மங்களைச் சரிவரச் செய்வானேயானால் அதனால் சித்தம் சுத்தியடைகிறது. சித்தத்திற்குச் சுத்தியாவது ஒன்றில் விருப்பு வெறுப்பில்லாமல் செய்வதே ஆகும். இப்படிப்பட்ட சுத்தமான மனதில் ஆத்மாவை தியானிப்பது "*ஸ்திதப்ரக்ஞதை*" என்று சொல்லப்படும்.

இந்த அத்தியாயத்தில், அர்ஜுனனுடைய கலக்கம் அறுவதற்காக பகவான், ஆத்ம நித்யத்வம், பலத்தில் விருப்பமில்லாமல் கர்ம யோகத்தைச் செய்தல், யோகத்தால் ஆத்மாவை ப்ரத்யக்ஷீகரித்தல் முதலிய விஷயங்களை அருளிச் செய்திருக்கிறான். இந்த அத்தியாயத்தின் ஸாராம்சம் இதுதான். இனி இவ்வர்த்த விசேஷங்களை கீதா ச்லோகங்களில் காணலாம்.

"*பௌன: புண்யம் அலங்கிருதி:*" என்று திரும்பத் திரும்பச் சொல்வதை அலங்காரமாகக் கூறியிருப்பதால் குற்றமாக எடுத்துக் கொள்ளக்கூடாது.

**"ந த்வேவாஹம் ஜாது நாஸம் ந த்வம் நேமே ஜநாதிபா: |**
**ந சைவ ந பவிஷ்யாம: ஸர்வே வயமத: பரம் ||"**

(2-12)

என்ற ச்லோகம் ஆத்ம நித்யத்துவத்தைக் கூறுகிறது. இறந்த காலம், எதிர்காலம், நிகழ்காலம் என்று காலம் மூன்று வகையில் உண்டு. மூன்றாவதாகச் சொல்கிற நிகழ்காலம் என்பதை இரண்டு காலங்களுக்குள் அடக்கி இதை ஒரு காலமாகத் தனித்துக் கூறாத பட்சமும் உண்டு. இந்த ச்லோகத்தில் அர்ஜுனனைப் பார்த்து, "*ஏ! அர்ஜுனா! நீ, நான், இங்குள்ள மற்ற அரசர்கள் எல்லோரும் இறந்த காலத்தில் இருந்தவர்கள். நாம் எல்லோரும் இனிமேல் வருங்காலத்திலும் இருக்கப் போகிறவர்கள*" என்று கூறியிருக்கிறான். இப்படி இந்த ச்லோகத்தில், "*எல்லோரும் முன்பு இருந்தோம், மேல் இருக்கப்*

*போகிறோம்*" என்றதால் எல்லோரும் எப்பொழுதும் இருக்கிறவர்கள் என்று ஆத்ம நித்தியத்துவம் தேறிற்று.

கீதையில் முக்கியமாகக் கவனிக்க வேண்டியது, ஸங்கேதமாகக் குறிக்கப்படுகிற சொற்களுக்கு இன்னதுதான் அர்த்தம் என்பதாகும். மாதிரிக்கு ஒன்று பார்க்கலாம். "*யோகம்*" என்ற சொல் பல இடங்களில் வரும். இந்தச் சொல்லிற்கு இன்னது தான் பொருள் என்பதை அந்தந்த இடத்திற்குச் சேர அறிய வேண்டும். இது மாதிரி "*நித்யம்*" என்ற சொல்லுக்கும் கீதையில் இடங்களுக்குத் தகுந்தாற்போல் பொருள் சொல்ல வேண்டியிருக்கிறது. நம் போன்றவர்களில் ஒருவர் "*நித்யம்*" என்ற சொல்லைச் சொல்லுகிறபோது இதற்குப் பொருள் என்ன என்று கேட்டால் ஒருவிதமாக நாம் சொல்லுவோம். நமக்குச் சரியான பொருள் போலத் தோன்றும். ஆனால் அதன் உண்மையான பொருள் எல்லோருக்கும் தெரியாது. "*காலத்ரய வர்த்தித்வம் நித்யத்வம்*" என்று அதற்குப் பரிஷ்காரம் செய்திருக்கிறார்கள். அதாவது மூன்று காலத்திலும் இருக்கும் பொருள் எதுவோ அது நித்தியமானது என்று அர்த்தம். அந்த நித்யத்வத்தை பகவான் இந்த ஜீவாத்மாவுக்கு அருளிச்செய்திருக்கிறான். நான், நீ, இவர்கள் நாம் எல்லோரும் "*அஹம், த்வம், இமே, ஸர்வே, வயம்*" என்று இப்படி இந்த ச்லோகத்தில் கூறியிருக்கிறார். இந்தச் சொற்போக்கை ஊன்றிப் பார்த்தால் ஜீவாத்மாவுக்கும், பரமாத்மாவுக்கும் வேற்றுமை உண்டு என்பது நன்றாகத் தெரிகிறது. இது ஸ்பஷ்டமான விஷயம். "*ஆத்மா ஒன்றுதான் உண்டு, ஆத்மாக்களுக்குள் பேதம் இல்லை*" என்பது ஆதி சங்கராசாரியார் பக்ஷம். "*இந்த ச்லோகத்தில் பேதம் ஸ்பஷ்டமாக இருப்பதால் பேதம் தான் சித்தாந்தம் என்பது இராமாநுஜ பக்ஷம்* ".

"*ஸ்வாபாவிகம்*", "*ஔபாதிகம்*" என்று இரண்டு சொற்கள் உண்டு. இவ்விரண்டு சொற்களுக்கும் பொருள் நன்றாகத் தெரிய வேண்டும். ரோஜா புஷ்பத்திற்கு பரிமளம் இயற்கையாக (ஸ்வபாவமாக) இருக்கிறது. அதை ஜலத்தில் சேர்த்தால் ஜலம் ரோஜா வாசனையாக ஆகிறது. ஜலத்திற்கு ரோஜாவின் பரிமளம் வந்ததே அது செயற்கையாகும். இயற்கையாக இருக்கும் பரிமளத்திற்கு "*ஸ்வாபாவிகம்*" என்றும், ஒன்றினுடைய சம்பந்தத்தால் வருகிற குணத்திற்கு "*ஔபாதிகம்*" என்றும்

தெரிந்து கொள்ள வேண்டும். இங்கு மேற்சொல்லப் போகிற விஷயத்தை நன்றாகக் கவனிக்க வேண்டும். மண்டபத்தில் பல தூண்களிருக்கின்றன. ஒரு தூணைக் காட்டிலும் மற்ற தூண் வேறுபட்டதாயிருக்கிறது. "*இந்தத்தூணைக் காட்டிலும் அந்தத் தூண் வேறுபட்டது*" என்று சொல்லுகிற பேதத்தை (வேற்றுமையை) ஸ்வாபாவிக பேதம் என்று கூறுவர்.

"*ஆகாசம்*" என்கிற ஒரு தத்துவம். மடத்திற்குள் இருக்கிற பொழுது "*மடாகாசம்*" என்றும், (குடம்) கடத்திற்குள் இருக்கிற பொழுது "*கடாகாசம்*" என்றும் சொல்கிறோம். இங்கு மடாகாசத்தைக் காட்டிலும் கடாகாசம் வேறுபட்டது என்று சொல்கிற இந்த பேதத்தை "*ஔபாதிக பேதம்*" என்று கூறுவர். மடம், கடம் இவ்விரண்டும் சிதைந்த பிறகு, இரண்டாகாசமும் ஒன்றாய்ச் சேர்ந்துவிடுகிறது. "*நத்வேவாஹம்*" என்கிற இந்த ச்லோகத்தில் கூறப்பட்ட பேதம் ஸ்வாபாவிக பேதமா? ஔபாதிக பேதமா? என்று விசாரிக்கப்படுகிறது. ஸ்ரீ இராமாநுஜர் "*ஸ்வாபாவிக பேதம்*" என்று அருளிச்செய்து இருக்கிறார். சங்கரர் "*ஔபாதிக பேதம்*" என்று அருளிச் செய்திருக்கிறார். இங்கு ஒரு விஷயம் முக்கியமாகக் கவனிக்க வேண்டும். விசிஷ்டாத்வைதம் சொல்வதாக இருந்தால் அத்வைதத்தைச் சொல்லாமல் சொல்ல முடியாது. அத்வைதத்தைச் சொல்வதாக இருந்தால் விசிஷ்டாத்வைதத்தைச் சொல்லாமலேயே சொல்லி விடலாம். அதனால் இரண்டையும் ஒருவிதமாகச் சொல்கிறேன். மோக்ஷ காலத்தில் ஜீவாத்மா பரமாத்மாவிற்கு பேதம் எப்படிச் சொல்லப்பட்டிருக்கிறது என்பதை கீதையில் பார்ப்போம்.

**"இதம் ஜ்ஞாந-முபாச்ரித்ய மம ஸாதர்ம்ய மாகதா: |**
**ஸர்கேSபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச ||"**

(14-2)

இந்த ச்லோகம் மோக்ஷ காலத்தில் ஜீவன் இருக்கும் இருப்பைத் தெரிவிக்கிறது. "*கீழே சொன்ன ஞானத்தைப் பற்றிக் கொண்ட ரிஷிகள் என்னை ஒத்தவர்களாக என்னை வந்தடைகிறார்கள். சிருஷ்டி காலத்தில் அவர்கள் உண்டாகிறார்களில்லை. பிரளய காலத்தில் அழிகிறார்களும் இல்லை*" என்று இந்த ச்லோகத்தில் அருளிச் செய்திருப்பதைக் கவனித்தால் ஆத்மா பலவாகவும் நித்யமாகவும் இருக்கிறது என்பது தெரிகிறது.

**"அவிநாசி து தத்வித்தி யேந ஸர்வமிதந் ததம் |
விநாசமவ்யயஸ்யாஸ்ய ந கச்சித் கர்த்துமர்ஹதி ||"**

(2-17)

என்ற இந்த ச்லோகத்திலும் ஆத்ம நித்யத்வத்தை அருளிச் செய்திருக்கிறான் பகவான். ஒரு ச்லோகத்தில் சுருக்கமாக முதலில் விஷயத்தைக் கூறுவான். பின்பு அதையே பல ச்லோகங்களால் விரித்துக் கூறுவான். இந்த முறையில் இந்த அத்தியாயத்தில் இந்த ச்லோகத்தால் ஆத்ம நித்யத்துவத்தைச் சுருங்கக் கூறி,

**"நைனம் சிந்தந்தி சஸ்த்ராணி நைநம் தஹதி பாவக: |
ந சைநங் க்லேதயந்த்யாபோ ந சோஷயதி மாருத: ||"**

(2-23)

**"அச்சேத்யோயமதாஹ்யோயமக்லேத்யோS சோஷ்ய ஏவ ச |
நித்ய: ஸர்வகத: ஸ்தாணுரச்லோSயம் ஸநாதந: ||"**

(2-24)

**"அவ்யக்தோSயமசிந்தயோSயமவிகார்யோSயமுச்யதே |
தஸ்மாதேவம் விதித்வைநம் நாநுசோசிதும் அர்ஹஸி ||"**

(2-25)

என்ற பல ச்லோகங்களால் விவரித்திருக்கிறான். பஞ்ச பூதங்களில் நிலம், நீர், தீ, காற்று, ஆகாயம், (*ப்ருத்வி, அப்பு, தேஜஸ், வாயு, ஆகாசம்*) என்று கூறப்பட்ட ஒன்றைக் காட்டிலும் ஒன்று சூக்ஷ்மமாயிருப்பதால் ஸ்தூலமான மண்ணில் அதைக் காட்டிலும் சூக்ஷ்மமான ஜலம் உட்புகுந்து அதைக் கரைத்து விடுகிறது. ஜலத்தைக் காட்டிலும் அக்னி சூக்ஷ்மமாயிருப்பதால் அக்னி ஜலத்தில் பிரவேசித்து ஜலத்தைச் சூடாக்குகிறது. வெந்நீர் தவலையில் அக்னி நுழையும்படி அத்தனை சூக்ஷ்மமாய் இருப்பதால் தான் அந்தத் துவாரத்தின் வழியாக அக்னி புகுந்து ஜலத்தைச் சூடாக்குகிறது. இப்படி ஒன்றொன்றையும் பார்த்துக் கொள்ளவேண்டியது. அசேதனப் பொருள்களில் காரணம் சூக்ஷ்மமாயிருக்கும். காரியம் ஸ்தூலமாயிருக்கும். உதாரணம்: *விதை சூக்ஷ்மமாக இருக்கிறது. மரம் ஸ்தூலமாக இருக்கிறது.*

**"பூமி ரோபோநலோ வாயு: கம் மனோ புத்தி ரேவ ச |
அஹங்கார இதீயம் மே பிந்நா ப்ரக்ருதி ரஷ்டதா ||"**

(7-4)

**"அபரேய மிதஸ்த் வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் |
ஜீவ பூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ||"**

(7-5)

என்ற ச்லோகங்களில் பகவான் சேதனாசேதனங்களைப் பற்றி அருளிச் செய்திருக்கிறான். ஸ்தூலத்தில் சூக்ஷ்மம் பிரவேசிக்கும். சூக்ஷ்மத்தில் ஸ்தூலம் பிரவேசிக்காது. ஜீவ தத்துவம் அதி சூக்ஷ்மமாக இருப்பதால் பஞ்ச பூதத்தாலும் (பஞ்ச பூதங்களும் ஸ்தூலமாயிருப்பதால்) அழிக்க முடியாததாயிருக்கிறது. "*ஏ அர்ஜுனா! பீஷ்மாதிகளுடைய ஆத்மாவை நீ எய்கிற பாணம் பிரவேசித்து அழிக்காது, அவ்வாத்மா நித்யமானது*" என்ற இவ்விஷயத்தைத்தான், "*அவிநாசி து தத்வித்தி*" (2-17) என்ற இச்ச்லோகத்தில் தெரிவிக்கிறான். இதைத் தான் சங்கிரகச் ச்லோகத்தில் "*நித்யாத்மா*" என்று ஆளவந்தார் அருளிச்செய்தார். இனி "*அஸங்கக்ர்மேஹா*" என்ற அடுத்த விஷயத்தைக் கவனிப்போம்.

"*அஸங்க கர்மானுஷ்டானம்*" என்பது, பதிவ்ரதா ஸ்திரீ பர்தாவுக்கு சிஷ்ருஷையையே பலமாகக் கருதி பர்த்துரு சிஷ்ருஷை எப்படிச் செய்வாளோ அப்படியே பலத்தில் விருப்பமில்லாமல் சாஸ்திரம் சொல்கிறபடி தனக்குரிய அநுஷ்டானங்களைச் செய்வதாகும். இப்படி நெடுகின காலத்தில் கர்மயோகத்தைச் செய்கிறபோது சித்தம் சுத்தியடைகிறது. இவ்வாறு சுத்தமான ஹ்ருதயத்தில் ஜீவாத்மாவைச் சிந்திக்கும் சிந்தனை "*ஸ்திதப்ரக்ஞதை*" எனப்படும். அப்படிச் சிந்திக்கிறவன் "*ஸ்திதப்ரக்ஞன்*" என்று சொல்லப்படுகிறான்.

**"ஸ்திதப்ரஜ்ஞஸ்ய கா பாஷா ஸமாதிஸ்தஸ்ய கேசவ |**
**ஸ்திததீ: கிம் ப்ரபாஷேத கிமாஸீத வ்ரஜேத கிம் ||"**
(2-54)

என்று பகவானைப் பார்த்து அர்ஜுனன் கேள்வி கேட்டான்.

இதற்குப் பதில், பகவான் நான்கு ச்லோகங்களால் அருளிச் செய்கிறான். இதுதான் "*ஞானயோக*"மாகும். அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு அபிப்ராயமானது, கர்மயோகத்தால் மனச்சுத்தி பெற்று அந்த மனதில் ஆத்மாவை தியானம் பண்ணுகிறானே அவனுடைய அறிவு, பேச்சு, சிந்தனை, இவை எப்படியிருக்கும்? என்பது அவனுடைய கேள்விக் கருத்து. இதன் பதில் தான் "*ஸ்திதப்ரக்ஞதை*" என்று சொல்லப்படுகிறது. இது ஆழ்வாரால் "*நுண்ணறிவு*" ( திருவாய்மொழி-6-10-8, 3ம் திருவந்தாதி -11 ) என்ற இடத்தில் கூறப்பட்டிருக்கிறது.

இக்கேள்விக்கு பதில் அளிக்கிறது, கீழ் வரும் ச்லோகங்கள்.

**"ப்ரஜஹாதி யதா காமாந் ஸர்வாந் பார்த்த மநோகதாந் |**
**ஆத்மந்யேவாத்மநாதுஷ்ட: ஸ்திதப்ரக்ஞஸ்ததோச்யதே ||"**

(2-55)

**"து:க்கேஷ்வநுத்விக்நமநா: ஸுகேஷுவிகத-ஸ்ப்ருஹ: |**
**வீதராகபயக்ரோத: ஸ்திரதீர்-முநிருச்யதே ||"**

(2-56)

**"ய: ஸர்வத்ராநபிஸ்நேஹ: தத்தத் ப்ராப்ய சுபாசுபம் |**
**நாபிநந்ததி ந த்வேஷ்டி தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்ட்டிதா || "**

(2-57)

**"யதா ஸம்ஹரதே சாயம் கூர்மோऽங்காநீவ ஸர்வச: |**
**இந்த்ரியாணீந்த்ரியார்த்தேப்யஸ்-தஸ்ய ப்ரஜ்ஞா ப்ரதிஷ்டிதா ||"**

(2-58)

இந்த நான்கு ச்லோகங்களும் நான்கு வகையாக இருக்கின்றன. "*யதாஸம்ஹரதே சாயம் கூர்மோங்காணீவ ஸர்வச:*" என்ற ச்லோகம் பஞ்சேந்திரியங்களை அடக்கி அப்யாசம் செய்ய வேண்டும் என்பதைக் கூறுகிறது. ஆசையும், ஆசைப்பட்ட பொருளை அடைவதற்கு முயற்சியும் இருக்கிற பட்சத்தில் மோட்சமில்லை என்பதுதான் கிருஷ்ண சித்தாந்தம். "*ய:ஸர்வத்ராநபி:ஸ்நேஹ:*" என்கிற ச்லோகம் சுபாசுபங்களாகிற இரண்டு அவஸ்தைகளிலும் சமமாக இருக்க வேண்டும் என்கிறது.

<u>"ப்ரஜஹாதி யதா காமான் ஸர்வான் ........" என்ற ச்லோகத்தின் பொருள் பின்வருமாறு :</u>

பிரஹலாதன் பகவத் பக்தன். அவனை ஸர்ப்பங்கள் தீண்டுகிற போது தன்னையும் அறியாமல் கிடந்தான் என்று ரிஷி கூறியிருக்கிறார். அங்கு "*நவிவேத ஆத்மனோ காத்ரம்*" என்று வசனம் காணக்கிறது. இதற்கு ஆசார்யர்கள் அர்த்தம் சொல்கிற போது தன்னையும் தன் சரீரத்தையும் அறியாதவனானான் என்று பொருள் கூறினார்கள். பிரஹலாதன் எப்படியிருந்தானோ அது போல ப்ரும்ஹத்தை த்யானம் செய்கிறவனும் இருக்கவேண்டும். இப்படி ஆத்ம சிந்தனை நெடுகி இதர விஷயங்களிலிருந்து நன்கு விடுபட்டால் அவனே "*ஸ்திதப்ரக்ஞன்*" என்று சொல்லப்படுகிறான். ச்லோகத்தின் பொருள்களைத் தொடர்ச்சியாகக் காணலாம்.

**"ஏஷா ப்ராஹ்மீஸ்திதி: பார்த்த நைநாம் ப்ராப்ய விமுஹ்யதி |**
**ஸ்தித்வாऽஸ்யாமந்தகாலேऽபி ப்ரஹ்ம நிர்வாணம் ருச்சதி ||"**

(2-72)

என்பது கடைசி ச்லோகம். தர்ம சாஸ்திரங்களில் ஒரு விஷயம். *"ஐம்பது வயது வரையாவது இஷ்டப்படி இருந்து விட்டு அதற்கு மேலாவது ஆத்ம க்ஷேமத்தில் ஈடுபடு"* என்று கூறப்பட்டிருக்கிறது. கண்ணன் அப்படிக் கூடக் கூறாமல் அந்திமக் காலத்திலாவது ஒரு நாளாவது ஆத்ம க்ஷேமத்திற்காக ஈடுபடு என்கிறான். இந்த அத்தியாயத்தின் அர்த்தம் தான் மேல் நான்கு அத்தியாயத்தில் விரிவாகச் சொல்லப்பட்டிருக்கிறது. *"மாளுமோரிடத்திலும் வணக்கொடு மாள்வது வலமே"* (திருவாய்மொழி-1-3-8) என்ற ஆழ்வார் அருளிச்செய்திருக்கிறார். *சாகிறபொழுது மல்லார்ந்து சாகாமல் குப்புற விழுந்து செத்தால் அதைக்கூட எம்பெருமான் தன்னை வணங்கினதாக எடுத்துக் கொள்கிறான்* என்றார் ஆழ்வார். *"அந்த காலே"* என்ற இடத்தில் *"ஏ! அர்ஜுனா! நான் சொல்லியபடி தினந்தோறும் நடந்தால் எனக்கு மிக மகிழ்ச்சிதான், அப்படி இல்லாமற் போனாலுங்கூட கடைசியிலாவது நான் சொல்லியபடி நீ நட"* என்றுகூடக் கருத்துத் தெரிகிறது. அர்ஜுனன் சரீராத்ம விவேகமில்லாமல்,

**"கதம் பீஷ்மமஹம் ஸங்க்யே த்ரோணம்ச மதுஸூதந |**
**இஷுபி: ப்ரதியோத்ஸ்யாமி பூஜார்ஹாவரிஸூதந ||"**

(2-4)

என்று பேசினான். இதற்குப் பகவான் சமாதானம் பண்ணுகிற போது ஆத்ம நித்யத்வத்தை விஸ்தாரமாக இந்த அத்தியாயத்தில் அருளிச் செய்திருக்கிறான்.

**இரண்டாம் அத்தியாயம் முற்றும்.**

# மூன்றாம் அத்தியாயம்

சரீரத்தைக் காட்டிலும் ஆத்மா வேறுபட்டது என்று முதலில் உணரவேண்டும். அந்தந்த வர்ண ஆச்ரமத்திற்குச் சேர பலத்தில் ஆசையில்லாமல் கர்மங்களை அனுஷ்டிக்க வேண்டும். அதனால் பாபங்கள் போகும். மனம் சுத்தி அடையும். சுத்தமான மனதில் ஆத்மாவைத் தியானம் பண்ணுகிற போது ஆத்மாவை நன்கு பார்க்க முடிகிறது. இங்ஙனம் ஆத்ம ப்ரத்யக்ஷம் ஏற்பட்ட பிறகு அது நெடுகிச் செல்கிற போது ஆத்மாவுக்கும் ஆத்மாவான பரமாத்மாவை அனுபவிக்கிறான் என்று கீழத்தியாயத்தில் கூறப்பட்டது.

இந்த அத்தியாயத்தின் முதலில் அர்ஜுனன் கண்ணனைப் பார்த்து,

**"ஜ்யாயஸீ சேத் கர்மணஸ்தே மதா புத்தீர் ஜனார்த்தந |**
**தத் கிம் கர்மணி கோரே மாம் நியோஜயஸி கேசவ || "**

(3-1)

**"வ்யாமிச்ரேணேவ வாக்யேந புத்திம் மோஹயஸீவ மே |**
**ததேகம் வத நிச்சித்ய யேந ச்ரேயோ ஹமாப்நுயாம் ||"**

(3-2)

என்று வினவியிருக்கிறான்.

ஹே கிருஷ்ணா ! எனக்கு"*கர்மானுஷ்டானத்தைச் செய்*" என்று கட்டளையிடுகிறாய். ஆத்மாவைக் கண்கூடாகப் பார்ப்பதற்கு ஞானம்தான் காரணமாகச் சொல்லப்படுகிறது. அதனால் அந்த ஞானம்தான் சிறந்தது என்று உன் மனதிலேயே ஞானத்தின் பெருமை தோன்றுகிறது. இப்படி-யிருக்கிற என்னை மட்டும் இந்த கோரமான கர்மயோகத்தில் ஏன் ஏவுகிறாய்? என்பது அர்ஜுனனின் கேள்வியின் பொருளாகும். இந்திரியம் ப்ரவ்ருத்தித்துச் செய்யும் செய்கையே கர்ம யோகமாகும்.

"கூர்மோங்கானீவ ஸர்வச: - *ஒருமையுடன் ஆமைபோல் ஐந்தடக்கல்*" என்று இந்திரியங்களை அடக்கிச் செய்வதே ஞான யோகமாகும். இவ்விரண்டையும் பார்க்கிறபோது ஒன்றுக்கொன்று முரணாக இருக்கிறதே. இவ்விஷயம் என் புத்தியைக் கலங்கச் செய்கிறது. இவ்விரண்டினுள் எந்த ஒன்று

நன்மையைத் தருமோ அதை நிச்சயித்து எனக்குச் சொல்ல வேண்டும் என்று அர்ஜுனன் தன் அபிப்பிராயத்தை வெளியிடுகிற போது பகவான் இதற்குச் சமாதானத்தை மேல் வரும் ச்லோகங்களால் கூறியிருக்கிறான். *"புத்திம் மோஹயஸீவமே"* என்றதால் பகவான் பேச்சையே அர்ஜுனன் ஒருவிதமாகக் குற்றம் சொல்வதுபோல் தோன்றுகிறது. இப்படிச் சொன்ன போது நீ கர்மயோகத்தைத்தான் செய்யவேண்டும் என்று மேல் பல ச்லோகங்களால் வற்புறுத்திக் கூறுகிறான்.

**"லோகேऽஸ்மின் த்விவிதா நிஷ்டா புரா ப்ரோக்தா மயாநக |**
**ஜ்ஞாநயோகேந ஸாங்க்யாநாம் கர்மயோகேந யோகிநோம் ||"**

(3-3)

***"ந கர்மணா-மனாரம்பாந்-நைஷ்கர்ம்யம் புருஷோऽச்நுதே |***
***ந ச ஸந்ந்யஸநாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி ||"***

(3-4)

இவ்விரண்டு ச்லோகங்களும் ஒரு விஷயத்தைச் சொல்கிறது.

***"ந ஹி கச்சித் க்ஷணமபி ஜாது திஷ்டத்யகர்மக்ருத் |***
***கார்யதே ஹ்யவச:கர்ம ஸர்வ: ப்ரக்ருதிஜைர் குணை: ||"***

(3-5)

என்று தொடங்கி வேறு விஷயம் சொல்லப்பட்டிருக்கிறது.

ஒரு கோபுரத்திற்கு ஏழு தட்டுக்கள் உண்டு. அதில் ஏறவேண்டும் என்பவன் முதல் தட்டிலிருந்து படிப்படியாகத் தான் கடைசித் தட்டுக்கு ஏறவேண்டும். இதுமாதிரி கர்ம யோகத்தைச் செய்துதான் ஞானயோகத்திற்குப் போக வேண்டும் என்று அர்ஜுனனை நோக்கி பகவான் கூறுகிறான். இங்கு அர்ஜுனன் கேள்வியை மீண்டும் அநுவாதம் செய்து நினைவுபடுத்திக் கொள்ளவேண்டும். அதாவது கர்மயோகமும் ஞானயோகமும் ஒன்றுக்கொன்று முரணாக இருப்பதால் ஞான யோகத்திற்குக் கர்மயோகம் எப்படி முதல்படியாக இருக்க முடியும்? என்பது அர்ஜுனனுடைய அபிப்பிராயமாகும். அவனவனுடைய நிலைமைக்குச் சேர யோகங்களை அனுஷ்டிக்க வேண்டும். அர்ஜுனனுடைய நிலைமைக்குச் சேரப் பார்த்தால் கர்மயோகம்தான் சரியானது என்று பகவான் சொல்கிறான். இவ்வாறு அர்ஜுனன் கேட்ட கேள்விக்குப் பகவான் சொன்ன சமாதானம் எப்படிச் சமாதானமாக ஆகிறது? என்று கேள்வி

உண்டாகலாம். இங்குதான் நம் ஸ்வாமி அருளிச் செய்திருக்கிற சமாதானம் மிகவும் ஆச்சரியமாக இருக்கிறது. அர்ஜுனன் கர்ம யோகத்தை இந்திரியம் ப்ரவ்ருத்தித்துச் செய்யக்கூடியது என்றும், ஞானயோகம் இந்திரியத்தை அடக்கிச் செய்யக் கூடியது என்றும் கருதி முரண் என்று கூறியிருக்கிறான். அவன் நினைக்கிறபடி இல்லாமல் கர்மயோகமும் இந்திரியத்தை அடக்கிச் செய்யக் கூடியதுதான் என்பது இங்கு சித்தாந்தமாகச் சொல்லப்படுகிறது. கர்மானுஷ்டானம் என்பது இந்திரியங்களை அடக்கும் முறை தானேயொழிய அர்ஜுனன் கூறுகிறபடி ப்ரவ்ருத்தித்துச் செய்கிற முறையில்லை. கர்ம-யோகம் இந்திரியங்கள் ப்ரவ்ருத்தித்துச் செய்யக்கூடியதாகத் தோன்றினாலும் இந்திரியங்களை நிவ்ருத்தியடையச் செய்வதற்கே காரணமாகும். குதிரைக்குக் கண்பட்டை போட்டபோது அடங்கியிருக்கிறது. அதை எடுத்துவிட்டால் எதையும் பார்க்கிறது. அது மாதிரி எதையும் செய்யக்கூடிய இந்திரியங்களை அவ்வாறு தம் இஷ்டப்படி விடாமல் அடக்கிக்குறிப்பிட்டு ஒரோரு செயலிலே நிறுத்துவது இந்திரியத்தை அடக்கும் முறையேயாகும். (*கற்றுக்கறவை. மல்லிகைகமழ் ப்ரவேசம் கடைசியில்*) இங்கு பரதாழ்வானுடைய சரித்திரத்தை நினைவுபடுத்திக் கொள்ள வேண்டும். பரதன் கைகேயியைப் பார்த்து, "*இராமன் எதற்காகக் காட்டுக்குப்போனான்*" என்று கேட்டபோது உண்மையை அவனிடம் கைகேயி சொல்கிறாள். அந்த வார்த்தை தன் செவியிலே படுவதற்குள்ளாக தன் காதைப் பொத்திக்கொண்டான். இதனால் எல்லாவற்றையும் காது கேட்கக்கூடாது என்பது குறிக்கப்படுகிறது. இப்படி பட்டி திரியும் இந்திரியங்களை வெளி விஷயங்களில் போகவொட்டாமல் தடுப்பதற்குக் கர்மயோகம் காரணமாக இருப்பதால் "*கூர்மோங்கனீவ ஸர்வச:*" என்று இந்திரியங்களை அடக்கிச் செய்யும் ஞானயோகத்திற்குக் கர்மயோகம் ஏன் காரணமாக இருக்கக்கூடாது? நான் சொன்ன விஷயத்தின் கருத்தை நீ புரிந்து கொள்ளாமல் "*வ்யாமிச்ரேணேவ வாக்யேண புத்திம் மோஹயஸீவமே*" என்று என் பேச்சையே பரிகாசம் செய்து கூறுகிறாயே, இந்திரியங்களை நன்றாக அடக்குகிற போதுதானே ஞானயோகம் உண்டாகிறது. இப்படி நன்றாக அடக்குவதற்கு முன்பு, பட்டித்திரியும் இந்திரியங்களைக் கொஞ்சம் கொஞ்சமாகத்தானே அடக்க வேண்டியிருக்கிறது?. கர்மயோகம் இவ்வாறு கொஞ்சம் கொஞ்சமாக

இந்திரியங்கள் அடங்குவதற்கு உபயோகமாய் இருக்கிறதல்லவா? குலசேகராழ்வார் பட்டித்திரியும் இந்திரியங்களுக்கு வகுத்த விஷயத்தைக் காட்டிக் கொடுக்கிறபோது,

> **"ஜிஹ்வே ! கீர்த்தய கேசவம் முராரிம் சேதோ பஜ ஸ்ரீதரம் !**
> **பாணித்வந்வ ! ஸமர்ச்சயாச்யுதகதா: ச்ரோத்ரத்வய ! த்வம் ச்ருணு |**
> **கிருஷ்ணம் லோகய லோசநத்வய ! ஹரேர்கச்சாங்க்ரியுக்மாலயம் !**
> **ஜிக்ர க்ராண ! முகுந்தபாததுலஸீம் மூர்த்தந்நமாதோக்ஷஜம் ||"**

(முகுநதமாலை - 16)

என்று செவி, வாய், கண், மூக்கு, கை, கால் முதலிய உறுப்புக்களை பகவத் விஷயத்தில் ஈடுபடுத்தி இவ்விதம் அடக்கியிருக்கிறார். இவ்விதம் இந்திரியங்களை வகுத்த விஷயங்களில் செலுத்துவதால் இந்திரியங்கள் அடங்குவதுடன் "*தர்மேண பாபம் அபனுததி*" என்கிறபடியே பாபமும் ஒருவிதமாகக் கழிகிறது ("*வாயவனையல்லது வாழ்த்தாது*"- முதல் திருவந்தாதி-11).

1. *பலத்தில் விருப்பமில்லாமல் கர்மானுஷ்டானம் செய்தல்*
2. *பகவத்ப்ரீதி*
3. *பாபக்ஷயம்*
4. *ரஜஸ். தமஸ் நீங்கல்*
5. *ராகத்வேஷம் நீங்கல்*
6. *சித்தம் கலங்காமலிருத்தல்*

இங்ஙனம் கூறப்படுகின்ற வரிசையில் ஆறாவது படிக்கூடில் இருக்கிறவன்தான் ஞானயோகத்தை இச்சிக்கலாம்.

> **"ந கர்மணா மநாரம்பாந் நைஷ்கர்ம்யம் புருஷோऽச்நுதே |**
> ***ந ச ஸந்ந்யஸநாதேவ ஸித்திம் ஸமதிகச்சதி* ||**

(3-4)

என்ற ச்லோகத்தின் பொருள் பின்வருமாறு :

ஒருவன் தனக்குரிய தர்மத்தை ஆரம்பிக்கவேயில்லை. ஆரம்பத்திலேயே விட்டுவிடுகிறான். அவனுக்கும் ஞானயோகம் செய்யமுடியாதது. நிஷ்காம்யம் என்பது தனக்குரிய தர்மத்தைச் செய்து அதிலிருந்து வந்த ஞானமாகும். கர்மாநுஷ்டானத்தைச் செய்வதில்லை. செய்து பாதியில் விட்டுவிடுவது. இப்படிப்-பட்டவனுக்கு என்ன ஞானயோகம் வரும்? நீயோ யுத்தபூமிக்கு வந்தபடியால் கர்மத்தை ஆரம்பித்தவன். இப்பொழுது இடையில்

விட்டபடியாலே கர்மத்தை விட்டவனுமாகிறாய். இப்படியிருக்கிற உனக்கு ஞானயோகத்திலே எப்படி அந்வயம் கூடும். இவ்வாறு பொருள் கூறினால் சரித்திரத்திற்கும் பொருத்தமாக இருக்கும். ஞானயோகத்தில் இறங்கினாலும் கூட கர்மயோகத்தைச் செய்து கொண்டுதான் இருக்க வேண்டும். குர்வத் ரூபங்களான இந்திரியங்கள் ஒருபொழுதும் வெறுமனே இல்லாமல் ஏதேனும் காரியங்களில் செயல்பட்டுக் கொண்டிருக்கும். இத்தகைய இந்திரியங்களுக்கு வகுத்த விஷயத்தைக் காட்டிக் கொடுக்க வேண்டியிருத்தலாலே கர்மயோகம் அவச்யமானது தான்.

**"நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: |**
***சரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்யேதகர்மண: ||"***

(3-8)

இது முக்கியமான ச்லோகம். இந்த ச்லோகத்தில் இரண்டு "*அகர்மண:*" என்ற பதம் இருக்கின்றன. முதல் "*அகர்மண:*" என்பதற்கு ஞானயோகம் என்று அர்த்தம். இரண்டாவதற்கு கர்மாவை விட்டு விடுதல் என்று பொருள். சரீர சம்பந்தத் தோடு கூடியிருக்கிற ஜீவாத்மாவுக்கு எது விடமுடியாமல் சகஜமாக செய்யக்கூடியது என்று பார்த்தால் கர்மயோகம் தான். ஞானயோகம் இல்லை. சரீரத்திற்கு "*ப்ரக்ருதி*" என்று பெயர். தங்கத்தால் செய்த ஆபரணத்தை "*தங்கம்*" என்று கூறுவது போல ப்ரக்ருதியால் அமைந்திருப்பதால் "*ப்ரக்ருதி*" என்று பேர் பெற்றது என்பர். "*அகர்மண:*" என்பது, கர்மாவில் வேறுபட்டதாயும் கர்மாவோடு ஒத்ததாயுமிருக்கிற ஞானமாகும். "*நாத்யஸ்நதஸ்து யோகோஸ்தி*" (6-16) என்ற ச்லோகத்தால் தூக்கம், ஆகாரம், செயல் இவற்றை யோகிக்கு சிக்ஷிக்கப் போகிறான் பகவான். ஞானயோகிகளுக்கும்-கூட அன்ன பானாதிகள் வேண்டும். அதற்காக பகவதாராதனை செய்து அந்தப் பிரசாதத்தை புஜிக்க வேண்டும் என்று கூறியிருப்பதால் கர்மயோகம் அவச்யம் வேணும் என்பதாயிற்று. பகவானுடைய ப்ரீதியைத் தவிர வேறொன்றையும் கருதாமல் செய்யக் கூடியதுதான் கர்மமாகும். "*மாகர்மபலஹேதுர்பூ:*" (2-47) என்பதைத் தான் மூன்றாவது அத்தியாயத்தில் சில ச்லோகங்களால் விவரணம் பண்ணுகிறான். அறிவு, விருப்பம், முயற்சி, செயல் அனுபவித்தல், என்பனவற்றை முறையே ஜானாதி, இச்சதி, யததே, கரோதி, புங்கதே என்று ஞான கார்யமாக இத்தனை க்ரமங்களைக் கூறுவார்கள். இதை

அனுசரித்துப் பார்க்கின்ற- பொழுது கர்த்ருத்வம் யாரைச் சேர்ந்தது என்று விசாரிக்க வேண்டியிருக்கிறது.

"*கர்த்தா சாஸ்த்ரார்த்தவத்வாத்*" என்ற ப்ரும்ம சூத்திரத்தில் வியாசர் (ஜீவாத்மாவுக்கு) கர்த்ருத்வத்தை ஸ்பஷ்டமாகச் சொல்லியிருக்கிறார். நற்காரியங்களைச் செய்யாமல் இருக்கலாம். அதனால் குற்றமில்லை. நற்காரியங்களைச் செய்கிறபோது அவற்றைச் செய்கிறவன் "*நான் தான்*" என்றால் அது விஷத்துடன் கூடிய அம்ருதமாகும். செய்கிறவனைச் செய்கிற-வனாகக் கூறினால் என்ன குற்றம் என்று கேட்டால் அவன் செய்கிறவனாக இருந்தால் குற்றமில்லை. செய்யாதவனாயிருக்கிற அவனைச் செய்கிறவனாகக் கூறினால் எப்படிப் பொருந்தும்?. அந்தந்தக் காரியம் செய்வதற்கு ஸத்வம் முதலிய குணங்கள் காரணமாயிருக்கின்றன. இந்திரியங்கள் காரணமாய் இருக்கின்றன. அவைதாம் செய்கின்றனவேயொழிய, இவன் செய்கிறவனில்லை.

**"ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மாணி ஸர்வச: |**
**அஹங்கார விமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே ||"**

(3-27)

சரீரத்தை விலக்கி ஜீவனை மட்டும் பார்த்தால் ஜீவன் ஒருவன் போல இருக்கிறவன். ஜீவதத்வம் இங்ஙனம் ஒரே விதமாக இருக்கச் செய்தேயும் ஒரு ஜீவன் செய்வதுபோல மற்றொரு ஜீவன் செயல்களைச் செய்வதில்லை. ஆத்மா ஒன்றுபோல இருந்தாலும் அதனதன் சரீரத்திலுள்ள குணாகுணங்களால் இப்படி வித்யாசம் தெரிகிறது. இதனால் தன்னைக் கர்த்தா என்று எண்ணக்கூடாது "*நிலத்தியல்பால் நீர் திரிந்தற்றாகும்*" (திருக்குறள்-452) என்பதுபோல குணாகுணங்களால் தூண்டப்பட்டு கர்த்ருத்வத்தைச் செயற்கையாக அடைந்து இருப்பவன் ஜீவன். இயற்கையாக இவனுக்குக் கர்த்ருத்வம் கிடையாது. இராவணன் துஷ்டனாயிருப்பதற்கும் விபீஷணன் தர்மாத்மாவாக இருப்பதற்கும் காரணம் அவரவர் குண விஷேசங்கள் தாம்.

***"குலம் ஒன்று உயிர் பல தம் குந்தத்தாலிட்ட***
***கலம் ஒன்று காரியமும் வேறாம் "***

(ப்ரமேயசாரம் - 2)

என்ற பாடல், "*உயிர் ஒரு விதமாய் இருந்தாலும் அதனுடைய கர்மானுகுணமாக செயல் முதலியன வேறுபட்டுள்ளன*" என்பதற்கு உதாரணம்.

**"*மயி ஸர்வாணி கர்மாணி ஸந்ந்யஸ்ய அத்யாத்ம சேதஸா |*
*நிராசீர்-நிர்மமோ பூத்வா யுத்யஸ்வ விகதஜ்வர: ||*"**
(3-30)

நல்ல மந்திரியினால், ராஜா நல்லவனாகயிருக்கிறான். கெட்ட மந்திரியினால், ராஜா கெட்டவனாக இருக்கிறான் என்று சொல்வதுபோல, குணாகுணங்களுடைய சம்பந்தத்தால் கர்த்ருத்வ சக்தி ஜீவனிடமிருக்கிறது. அந்த குணங்கள் இவனை நல்லவனாகவும், கெட்டவனாகவும் ஆக்குகின்றன. இதனால் கர்ம யோகத்தைச் செய்கிற போது, நான் செய்கிறவனில்லை; குணங்கள் செய்கின்றன என்று குணங்களில் ஆரோபித்து சோகத்தை விட்டு கர்ம யோகத்தைச் செய்வாயாக.

**"அஸக்த்யா லோகரக்ஷாயை குணேஷு ஆரோப்ய கர்த்ருதாம் |
ஸர்வேச்வரே வா ந்யஸ்யோக்தா த்ருதீயே கர்மகார்யதா ||"**

என்று ஆளவந்தார் இந்த அத்தியாயத்தை சங்கிரஹித்து அருளிச் செய்தார்.

**மூன்றாம் அத்தியாயம் முற்றும்.**

# நான்காம் அத்தியாயம்

முந்தின அத்தியாயத்தில், அகர்த்ருத்வா அனுஸந்தானம் பற்றி ஸாரமாகப் பார்த்தோம்.

**"ப்ரஸங்காத் ஸ்வஸ்வபாவோக்தி: கர்மணோsகர்மதாஸ்ய ச |**
**பேதஜ்ஞாநஸ்ய மாஹாத்ம்யம் சதுர்த்தாத்யாய உச்யதே ||"**

(சங்கிரக ச்லோகம்)

ஸ்ரீபார்த்தசாரதி நான்காவது அத்தியாயத்தில் ஸாரமாக நான்கு பொருள்களை அருளிச் செய்திருக்கிறான். மோக்ஷம் வேணுமென்று விரும்புகிறவன் செய்வது ஞானயோகம். கர்மயோகம் பதின்மூன்று வகையாகப் பிரித்துச் சொல்லப் படுகிறது. அதற்கு அங்கமாக உள்ளது ஞானயோகம்.

*"முதல் அத்தியாயத்தில் பகவான் தன்னைப் பற்றி முக்கியமாகச் சொல்லவில்லை; ஜீவாத்மாவைப் பற்றித் தான் சொல்லியிருக்கிறான்"* என்பது ஸ்ரீராமானுஜரின் அபிப்பிராயம். ஏழாவது அத்தியாயம் தொடங்கித் தான் பகவான் தன்னைப் பற்றிச் சொல்கிறான்.

**" யோகினாமபி ஸர்வேஷாம் மத்கதேனாந்தராத்மனா |**
**ச்ரத்தாவான் பஜதே யோமாம் ஸமே யுக்ததமோமத: ||"**

(6-47)

சுவாமி தேசிகன் *ரஹஸ்ய க்ரந்தங்களில்* காட்டிய ஒரு உதாரணம் மனதில் பட்டால் இந்த அர்த்தம் நன்கு விளங்கும்.

**"நித்யோ நித்யாநாம் சேதந: சேதநாநாம் ஏகோ பஹூநாம் |**
**விததாதி காமாந் தேஷாம் சாந்தி: ஸாஸ்வதீநேதரேஷாம் ||"**

கிழிச் சீறையைப் பார்த்துத்தான் அதனுள் இருக்கும் நிதியைப் பார்க்கவேண்டும். அது மாதிரி ஜீவனைப் பார்த்துப் பிறகு தான் ஜீவனுக்குள் இருக்கும் பரமாத்மாவைக் காண வேண்டும். நிதி வைக்கும் கிழிச்சீறை போல இருக்கும் ஜீவனைப்பற்றிக் கூறி *"ஸ்ம்ருதஸ்ய உபேக்ஷா அனர்ஹத்வம் பிரசங்க:"* என்றபடி ப்ராசங்கிகமாக இங்கு தன்னைப் பற்றிக் கூறுகிறான். அர்ஜுனனுக்கு ஆத்மா நித்யன், பஹு என்றதைச்

சொல்ல வேண்டி வந்தது. இதற்கு, "*நத்வே வாஹம்*" என்ற ச்லோகத்தில் தன்னை உதாரணமாகக் காட்டினான் .

**"அபரம் பவதோ ஜந்ம பரம் ஜந்ம விவஸ்தே: |**
**கதமேதத் விஜாநீயாம் த்வமாதௌ ப்ரோக்தவாநிதி ||"**

(4-4)

கிருஷ்ணா! என்னுடன் கூட நீயும் பிறந்திருக்கிறாய். இப்படியிருக்கிற நீ, "*நான் வெகுகாலத்துக்கு முன்னமே சொல்லியிருக்கிறேன்*" என்றாயே, என் காலமும் உன் காலமும் ஒன்று. விவஸ்வான் காலம் முற்பட்டது. அவனுக்கு நீ சொன்னதாகச் சொல்லுகிறாயே! இப்பொழுது இதை நான் எப்படித் தெரிந்து கொள்வது? என்று கலங்கின அர்ஜுனனைத் தேற்றியிருக்கிறான். அர்ஜுனனுடைய அபிப்பிராயம் என்ன என்பது ஸ்வாமியைத் தவிர வேறு யாரும் சொல்லவே இல்லை. மேலும் அர்ஜுனனுக்குக் கிருஷ்ணன் பரமாத்மா என்பது நன்கு தெரியும். அதை நன்கு 10ம் அத்தியாயத்தில் சொல்லுகிறான்.

ஸ்ரீவசனபூஷணத்தில் லலிதை என்பவளுடைய சரித்திரம் கூறப்பட்டிருக்கிறது. *அதாவது விதர்ப்ப ராஜாவினுடைய மகளாயும் காசி ராஜாவினுடைய மனைவியுமான லலிதை என்பவள் மற்ற முன்னூறு ராஜ பத்நிகளைக் காட்டிலும் பகவானிடத்தில் பக்தி உடையவளாய் இருக்கிறாள். தினமும் தவறாது திருவிளக்கு சமர்ப்பிக்கும் கைங்கர்யத்தில் மிகவும் ஊற்றத்துடன் இருக்கிறாள். இதை நோக்குகிற மற்ற ஸ்திரீகள். எங்களுக்கெல்லாம் ஏற்படாத பக்தியும் கைங்கர்யமும் உனக்கு உண்டாகக் காரணம் என்ன? என்று கேட்கிறார்கள். அதற்கு லலிதை தன் பூர்வ ஜென்ம உணர்வோடு இருப்பதால் இதற்குக்* காரணமான தன் கதையை எடுத்துச் சொல்கிறாள். பூர்வ ஜென்மத்தில் நான் ஒரு எலியாய்ப் பிறந்திருந்தேன். விதர்ப்ப அரசன் கோயில் கட்டி கார்த்திகை தீபம் எல்லாம் விசேஷமாக நடத்தி வருகிற போது. அணையும் தருவாயில் இருக்கிற ஒரு விளக்கிலிருந்து திரியைக் கொண்டு போவதற்காக வாயில் திரியைக் கவ்விப் புறப்பட்டேன். அப்பொழுது ஒரு பூனை என்னைப் பிடித்துக் கொண்டது. பயத்தினால் என் முகம் ஆடுகிற பொழுது அந்தத் திரி நன்றாக எரிய ஆரம்பித்தது. அணைய இருக்கின்ற விளக்கு நன்றாக எரியத் தொடங்கியது. இந்தச் சிறு புண்ணியத்தினால் இந்த ஜென்மாவில் எனக்கு இந்த பாக்கியம்

ஏற்பட்டிருக்கிறது என்று கூறியிருக்கிறாள். லலிதை என்கிற ஒரு பெண்ணுக்கு உள்ள சக்தி கண்ணனுக்குக் கிடையாதா? சிறிது புண்ணியம் பண்ணியவர்களுக்கே ஜென்மாந்தர விஷயம் தெரியும்படி இருக்கிறதே! இது கிருஷ்ணனுக்கு எப்படி முடியும்? என்று அர்ஜுனன் சந்தேகிக்கிறான் என்று கூறமுடியாது. இங்கு ஸ்வாமி போயிருக்கிற வழி, அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு பகவான் என்ன பதில் சொல்கிறான் என்று பார்த்து, அதிலிருந்து அர்ஜுனன் கருத்தை ஸ்வாமி அழகாக வெளியிட்டிருக்கிறார். சம்பிரதாயத்தில் இது பெரிய விஷயம். ஆழ்வாரும் எம்பெருமானும் கலந்து பரிமாறுகிற பொழுது ஆழ்வார் ஈடுபடுவது எம்பெருமானுடைய ஆத்ம ஸ்வரூபத்திலா? ஆத்ம குணத்திலா? திருமேனியிலா? என்று வினா வருகிறது. இப்படியே ஆழ்வாரை எம்பெருமான் விரும்புகிறபோதும் வினா உண்டு. ஆழ்வாரும் எம்பெருமானது திருமேனியில் தான் அதிக ஆசை காட்டுகிறார். எம்பெருமானுக்கும் ஆழ்வார் திருமேனியில் தான் அதிக ஆசை. அத்வைதிகளுக்கு திருமேனியும், திருமேனி குணங்களும், ஆத்ம குணங்களும் சத்தியமாக இல்லாததால், அவற்றில் அவர்கட்கு ஊற்றமில்லை.

உத்தம நாயக, நாயகிகளுக்கு அன்பு இருந்தால், அந்த அன்பு சரீரத்தில் தானே இருக்கிறது. இந்த அத்தியாயத்தில் இந்த இடம் சம்பிரதாய அர்த்தத்தை ஸ்தாபனம் பண்ண வேண்டிய இடமாக இருத்தலால் ஸ்ரீ பாஷ்யகாரர் அற்புதமாக இந்த அர்த்தத்தை இங்கு அருளிச் செய்கிறார்.

"*சரீரஸ்ய - சரீரம்*" போனபோது தான் சுகதுக்கங்கள் போகும். இந்த வேத வாக்கியத்தின் கருத்து அர்ஜுனனுக்கு நன்கு தெரியும். சரீரத்துடன் இருக்கிற போது இன்ப துன்பங்கள் உண்டு. அது கழிந்து போனதும் தான் மோக்ஷம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. அந்த பரமாத்மா எவனுடைய சரீரத்தைப் போக்குகிறானோ அவனுக்கே மோக்ஷம் உண்டு என்றால் அந்த சரீர சம்பந்தம் உண்மையா? பொய்யா? இந்திர ஜாலமா? இதன் உண்மை என்ன? என்று அர்ஜுனன் கேட்டிருக்கிறான் என்று ஸ்வாமி விளக்கியிருக்கிறார்.

**"ஸ பவானசரத் கோரம் யத் தப: ஸுஸமாஹித: |**
**தேன கேதயஸே நஸ்த்வம் பரசங்காம் ப்ரயச்சஸி ||"**

(பாகவதம் 2ம் ஸ்கந்தம் - 5ம் அத் - 7)

ஒரு சமயம் நாரதர் பிரம்மாவைக் கிட்டி, *"நீர் படைக்கிறதைப் பார்த்தால் நீர்தான் பரதேவதை என்று தோன்றுகிறது, நீர் தவம் செய்வதைப் பார்த்தால் உமக்கும் மேலான தெய்வம் ஒன்று உண்டு என்று தோன்றுகிறது, இதன் உண்மை என்ன?"* என்று கேட்ட பொழுது பிரம்மா நாராயணனுடைய மேன்மையை

**"நாராயணபரா வேதா தேவா நாராயணாம் கஜா: |**
**நாராயணபரா லோகா நாராயணபரா மகா: ||"**

(பாகவதம் 2ம் ஸ்கந்தம் - 5ம் அத் - 15)

**"நாராயணபரோ யோகோ நாராயணபரம் தப: |**
**நாராயணபரம் ஞானம் நாராயணபரா கதி: ||"**

(பாகவதம் 2ம் ஸ்கந்தம் - 5ம் அத் - 16)

**"தஸ்யாபி த்ருஷ்டுரீஷஸ்ய கூடஸ்தஸ்ய அகிலாத்மன: |**
**ஸ்ருஜ்யம் ஸ்ருஜாமி ஸ்ருஷ்டோஹம் ஈக்ஷயைவ அபிசோதித: ||"**

(பாகவதம் 2ம் ஸ்கந்தம் - 5ம் அத் - 17)

இது முதலான ச்லோகங்களால் உபதேசித்தார். அதே போல அர்ஜுனன் க்ருஷ்ணனிடம் கேட்கத் தன் உண்மையைப் பற்றி அர்ஜுனனுக்கு பகவான் எடுத்துச் சொல்கிறான். இராமாவதாரத்தில் இவ்வாறு ஒருவன் கேட்டால் அவன் தன் மேன்மைகளைச் சொல்லிக் கொள்ள மாட்டான். கண்ணன் தன் பெருமை பேசிக் கொள்வதில் விட்டுக் கொடுக்க மாட்டான். அதனால் தான், தன் பெருமைகளையெல்லாம் அர்ஜுனனுக்கு சொல்லுகிறான். இதை ஸ்வாமி அழகாகக் கூறியிருக்கிறார்.

அர்ஜுனனுடைய கேள்வி - *"உனக்கு மேலானவன் ஒருவன் இல்லாததால் உனக்கு சரீரம் ஒருவன் கொடுத்தது என்று சொல்வதற்கில்லை, சரீரமோ கேவலம் என்று தெரிகிறது, இப்படிப்பட்ட சரீரம் உனக்கு இருந்ததென்றால் அது எப்படிப் பொருந்தும்? எங்களுக்காவது கர்மா என்று ஒன்றைச் சொல்லலாம், உனக்கு அப்படிச் சொல்ல முடியாதே"* என்பது கேள்வி. ஜீவாத்மாவின் நித்தியத்வத்திற்கு உதாரணம் கொடுக்கிற போழ்து தன்னைக் கூறிக்கொண்டான். *"ந த்வேவாஹம்"* என்ற இடத்தில் இது ஸ்பஷ்டம். இங்கு தன் சரீரத்திற்கு உதாரணம் கூறுகிறபோது *"தவ ச"* என்று ஜீவாத்மாவை உதாரணமாகக் கூறியிருக்கிறான். இங்கு ஓர் அழகான அர்த்தம். *"நீயும் பிறந்து*

*நானும் பிறக்க வேணுமோ"* என்று. இங்கு எம்பெருமான் அர்ஜுனனுடைய சரீரத்தை த்ருஷ்டாந்தமாகக் கூறுகிறது, அர்ஜுனனுக்குத் தன்னுடைய ஜென்மாவின் ஸத்யத்தை ஸ்தாபித்துச் சொல்லுவதற்காக. இங்கு ஜென்மா ஸத்யம் என்று இருந்தால்தான் இந்த கேள்விகளுக்கு இடம் உண்டு. இது மித்யை என்றிருந்தால் இந்தக் கேள்விக்கும் பதிலுக்கும் அர்த்தமேயில்லை. மேல் தன் அவதாரத்தின் உண்மைகளைக் கூறும் இடங்களில் காணலாம். குப்பையில் கிடந்தாலும் மாணிக்கம், மாணிக்கம்தான் என்பது சம்பிரதாய அர்த்தங்கள்.

**"ஜந்ம கர்ம ச மே திவ்யமேவம் யோ வேத்தி தத்வத: |**
**த்யக்த்வா தேஹம் புநர்-ஜந்ம நைதி மாமேதி ஸோऽர்ஜுந: ||"**

(4-9)

<u>இந்த ச்லோகத்துக்கு விஸ்தாரமான பொருள்:</u>

இராமாவதார சரித்திரத்தில்,

**"ப்ருச்சாமி கிஞ்சன யதா கில ராகவத்வே**
**மாயாம்ருகஸ்ய வஸகோ மனுஜத்வமௌக்த்யாத் |**
**சீதாவியோகவிவஸோ ந ச தத்கதிஜ்ஞ:**
**ப்ராதாஸ்ததா பரகதிம் ஹி கதம் ககாய " ||**

(அதிமாநுஷஸ்தவம் - 17)

என்ற ச்லோகம் இதன் விளக்கம் ஆகும்.

சீதாப்பிராட்டி, மானைப் பிடித்துத் தா என்றபோது மாயமான் பின் தெரியாதவன் போல் சென்றாய். சீதையைப் பிரிந்து துயரில் ஆழ்ந்த போது ஜடாயுவுக்கு மோக்ஷம் கொடுத்தாயே அது எப்படி?

**"கர்மண்யகர்ம ய: பச்யேத் அகர்மணி ச கர்ம ய: |**
**ஸ புத்திமாந் மநுஷ்யேஷு ஸ யுக்த: க்ருத்ஸ்ந கர்ம க்ருத் || "**

(4-18)

இது கஷ்டமான ச்லோகம்.

பிராமணனுக்கும், பிராமண ஸ்திரீக்கும் பிறந்ததாலே மட்டும் பிராமணனாக இருக்க முடியாது. உபநயன சம்ஸ்காரம் ஆன பிறகுதான் ப்ராம்ஹண்யம் உண்டாகிறது. "*த்யாத்வா தேவம் ஜபேன்மனும்* " என்றபடி ஜபிக்க வேண்டும். ஜபம் என்றால் தெய்வத்தை மனதில் த்யானம் செய்து

கொண்டு மந்திரத்தை உச்சரிக்க வேண்டும். பிறர் காதில் படாதபடி ஜபிக்க வேண்டும்.

**"கிம் கர்ம கிம் அகர்மேதி கவயோऽபி அத்ர மோஹிதா: |**
**தத் தே கர்ம ப்ரவக்ஷ்யாமி யத்ஜ்ஞாத்வா மோக்ஷ்யஸேऽசுபாத் ||**

(4-16)

கிருஷ்ணனுக்குத் தன்னிடம் நல்ல பஹுமானம். மற்றப் பேருக்குத் தெரியாது தான். "*நான் தெரிந்தவன், உனக்குச் சொல்லப் போகிறேன்*" என்கிறான். இவ்வளவு பீடிகை போட்டுக் கொண்டதால் சொல்லப்போகிற விஷயம் மிகவும் கஷ்டம் என்று தோன்றுகிறது. கர்மானுஷ்டானத்தைச் செய்கிற போது இரண்டு அம்சம். அகர்மா என்றால் ஞானம் என்று பொருள். பரமாத்மாவை த்யானம் செய்து கொண்டு மந்திரத்தை ஜபிக்கிறது போல, "*பகவானுக்குச் சரீரமானவன் நான்*" என்ற ஞானத்தோடு கர்மாவைச் செய்ய வேண்டும். ஒரு பதிவிரதா ஸ்திரீ ஒருவனுக்கே உரியவள் என்ற எண்ணமும் சுச்ருஷையும் இருப்பதுபோல (*எண்ணம் ஆதாராதிசயத்திற்கு ஹேது*) அவனுக்குத் தன்னைச் சரீரமாக த்யானம் செய்து கொண்டும் அவனுக்கே உரியது இந்த ஆத்ம வஸ்து என்று எண்ணிக் கொண்டும் அவன் மனது மகிழும் படியான கர்மாவைச் செய்ய வேண்டும். இவனுக்குத் தான் மோக்ஷம் உண்டு. கர்மா என்பது செயல்.

செயலைச் செய்கிறபோது ஞானத்தைப் பார்க்க வேணும். ஞானத்தில் இருக்கும் போது கர்மாவைச் செய்ய வேணும் என்று இங்கு பகவான் கூறுகிறான். செயலும் ஞானமும் எப்படி ஒன்றாகும்?

ஒரு கதை:-

தேசாந்தரம் போன குழந்தையை அடைய இரண்டு ஜோஸ்யர்களிடம் தண்ணீர்க் கரையில் தண்ணீர்க் குடத்துடன் நின்று ஒருத்தி பிரஸ்னை கேட்கிறாள். அப்பொழுது குடம் விழுந்து உடைகிறது. ஜோஸ்யர்கள் இருவருக்கும் தர்க்கம் ஏற்படுகிறது. குடம் உடைந்ததால் பிள்ளை போய்விட்டான் என்கிறான் ஒருவன். குடத்து நீர் குள நீரோடு சேர்ந்ததால் தேசாந்திரம் போன பிள்ளை வீட்டிற்கு வந்துவிட்டான் என்கிறான். பிள்ளையும் அப்படியே வந்திருக்கிறான். இரண்டாவது ஜோஸ்யன் கூறுவது போன்றது இராமானுஜ பாஷ்யம்.

செயலை ஞானமாகச் சொல்வதற்கு இவ்வுதாரணம் சொல்லப்பட்டது. பத்னி சுச்ருஷையில் அன்பும் ஆதரவும் இருக்கிறது. அன்பும் ஆதரவும் இருந்தால் சுச்ருஷை இருக்கும். இது இரண்டும் ஒன்றோடொன்று பொருந்துவது. இதுபோல கர்மானுஷ்டானமும் ஆத்ம ஞானமுமாகும். இந்த நிலையில் பலத்தை விரும்பாமல் கர்மாவில் ஊன்றாமல் ஞானத்தில் இருக்கிறான். ஆகவே கர்மாவை ஞானமாகவே சொல்லலாம். இந்தக் கர்மயோகம் மூன்று விதமாகச் சொல்லப்படுகிறது. அவற்றில் ஒன்று இருந்தாலும்கூட போதும். பகவானுக்குச் சரீரம் என்று நினைக்கிறது ஞானயக்ஞம். இந்திரியங்களால் செய்கிறது கர்மயக்ஞம். இது கர்மம். ஞான யக்ஞத்தில் முடிவடையப் போகிறது. ஆகையால் கர்மாவை ஞானம் என்று சொல்லிவிடலாம்.

**நான்காம் அத்தியாயம் முற்றும்.**

# ஐந்தாம் அத்தியாயம்

எது ஜீவாத்மாவைக் கண்கூடாகக் காண ஸாதனமோ அது சிறந்தது. அந்த ஞான யோகத்தில் என்னை ஏன் நீ ஏவவில்லை? ஏன் கடுமையான கர்ம யோகத்தில் ஏவுகிறாய்? என்று அர்ஜுனன் கூறுவதை

**"ஜ்யாயஸீ சேத் கர்மனஸ் தே மதா புத்திர் ஜனார்தந |**
**தத் கிம் கர்மாணி கோரே மாம் நியோஜயஸி கேசவ ||"**

(3-1)

என்ற ச்லோகத்தினால் மூன்றாம் அத்தியாயத்தில் பார்க்கலாம். இதற்கு உத்தரமாக பகவான் அருளிச் செய்யும் போது சரீரத்தோடு கூடியிருக்கிற சமயத்தில் சுலபமாகக் கர்மாவைச் செய்யமுடியும் என்பதை

**"நியதம் குரு கர்ம த்வம் கர்ம ஜ்யாயோ ஹ்யகர்மண: |**
**சரீரயாத்ராபி ச தே ந ப்ரஸித்த்யே-தகர்மண: || "**

(3-8)

என்று கூறியிருக்கிறான். ஞானயோகம் செய்கிறவனுக்கும் சரீரம் நன்றாய் இருக்க வேண்டும். கர்மாவைக் காட்டிலும் ஞானம்தான் சிறந்தது என்று நான்காம் அத்தியாயத்தில் கூறியிருக்கிறான்.

**"ச்ரேயாந் த்ரவ்யமயாத்-யஜ்ஞாத் ஞாயனஜ்ஞ: பரந்தப |**
**ஸர்வம் கர்மாகிலம் பார்த்த ஜ்ஞான பரிஸமாப்யதே ||"**

(4-33)

என்றதால் ஞானமே சிறந்தது என்றும் தெரிகிறது. நாம் செய்கிற கர்மாவெல்லாம் ஞானத்தில்தான் முடிவடைகிறது. கர்மா, ஞானத்துக்கு சாதகமாயிருத்தலால் ஞானமே சிறந்தது. ஓர் இடத்தில் ஞானத்தைக் காட்டிலும் கர்மா சிறந்ததென்றும், மற்றோரிடத்தில் கர்மாவைக் காட்டிலும் ஞானம் சிறந்தது என்றும் கூறுதல்லால் முரண்பாடு போல தோன்றும். இதை மிக அழகாக ஸ்வாமி ஸமர்த்தனம் செய்து வெளியிட்டிருக்கிறார். அதைப் பார்க்கலாம்.

*"ஸர்வ கர்மாகிலம் பார்த்த ஞானே பரிஸமாப்யதே"* என்பதை ஆராய்ந்தால், *"கர்மண்யகர்மயபச்யேத் அகர்மணி ச கர்ம ய:"* என்பதின் அர்த்தமும் மனதில் படும். அதாவது வக்கீல் பட்டம் வாங்குவதற்கு முன்பு அவன் முயற்சி செய்கிற போதே வக்கீல் என்று வ்யவகரிப்பது போல எல்லாக் கர்மாக்களும் ஞானத்தில் முடிவடைவதால் கர்மாவே ஞானம் என்ற வ்யவஹரிக்கலாம் என்று கூறப்படுகிறது. ஆகவே அங்கும் ஞானத்தின் சிறப்புத் தான் கூறப்பட்டது. இங்கும் ஞானத்தின் சிறப்புத்தான் கூறப்படுகிறது என்று கூறிவிட்டால் விரோத மில்லை. தேசப்ராப்தி, பரிசுத்த ஆத்ம ப்ராப்தி, பகவத் ப்ராப்தி, இந்த மூன்றுமே மோக்ஷமாக வேதாந்த தேசிகனால் சொல்லப்பட்டிருக்கிறது. *"ஸர்வேச்வரன் ப்ராப்யனானால் அர்ச்சிராதிகதியோடு தேசவிசேஷத்தோடு வாசியற ப்ராப்யாந்தர்கதமிறே (7-10 ப்ரவேசம்)"*.

பரமாத்மாவை அடைவதற்கு வழியை ஏழாம் அத்தியாயத்தில் *பக்தி*, *ப்ரபத்தி* என்று கூறப்படப்போகிறது. பக்தி மார்க்கத்தைக் காட்டிலும் ப்ரபக்தி மார்க்கம் சுகரம் சைக்ரீயம் என்று கூறப்பட்டிருக்கிறது. 2ம் அத்தியாயத்தில் ஒரு மார்க்கம் காட்டப்பட்டது. அதாவது ஜீவாத்ம ஞானம், கர்மயோகம், மனச்சுத்தி, இத்யாதிகள், இவை அங்கு விஸ்தாரமாகக் காணலாம். அது ஆத்ம சிந்தனம் என்று கூறப்படும். இது பக்தியோகம் போல கஷ்டம். இப்பொழுது சொல்லுகிற வழி பகவானுக்குச் சரீரம் என்று ஆத்மயாதாத்ம்ய ஞானத்தைச் சதா சிந்தனை பண்ணிக் கொண்டு அர்ச்சனாதிகள் செய்வது. இது ஒருவிதமான கர்மயோகம். இதில் ஜீவாத்மாவை சீக்கிரமாகக் காண்கிறான். இது ப்ரபக்தி யோகம் போன்றது.

***"ஸந்ந்யாஸம் கர்மணாம் க்ருஷ்ண புனர்யோகஞ்ச சம்ஸஸி |***
***யச்ச்ரேய ஏதயோரேகம் தன்மேப்ருஹி ஸுநிச்சிதம் ||"***

(5-1)

இங்கு ஸந்யாஸ சப்தத்திற்கு அர்த்தம் எது என்பது விசாரம். *"தஸ்மாத் ஸர்வேஷு காலேஷு மாமனுஸ்மர யுத்த்யச!"* என்று கண்ணபிரானே கூறியிருப்பதால் கர்மானுஷ்டானம் யாவதாயுஷ்யம் அவச்யம் அனுஷ்டிக்க வேணும் என்பது சித்தாந்தம். ஆகையால் ஸந்யாஸம் என்ற சப்தத்திற்கு கர்மாவை விடுவது

என்று பொருள் சொல்லக்கூடாது. பகவான் கர்மாவை விடு என்று எங்கு சொல்லியிருக்கிறான்? என்று கேட்கிறார் தேசிகர். இந்த அத்தியாயத்தில் ஸந்யாஸ சப்தத்திற்கு இடத்திற்குச் சேர அர்த்தம் சொல்லவேண்டும். முதல் ஸந்யாஸ சப்தத்திற்கு இரண்டாம் அத்தியாயத்தில் சொன்ன கர்மயோகம் என்று பொருள். "*கர்மயோகஸ்ய*" என்று சங்கிரஹ ச்லோகத்தில் சொன்னதற்கு மூன்று, நான்கு அத்தியாயத்தில் சொன்ன பரமாத்மாவிற்குச் சரீரம் ஜீவன் என்று எண்ணி எண்ணிச் செய்கிற கர்மயோகம் என்பது கருத்து. "*நித்திய ஸந்யாஸி*" என்கிற பதம் இரண்டாவது சொன்ன கர்மயோகத்தைக் காட்டுகிறது. அகங்காரம் தோஷம் என்பதற்கு "*மதுரா பிந்து மிச்ரமான சாதகும்பமய. கும்பகத தீர்த்த சலிலம் போலே அகங்காரம். அகங்கார மிச்ரமான உபாயாந்தரம்*" என்ற (ஸ்ரீவசனபூஷணம்-122) சூத்திரார்த்தத்தை விவரித்துப் பார்க்கலாம். காஞ்சிபுரத்தில் ஒரு ராஜா கோபுரம் கட்டி இவ்வளவு ரூபாய் செலவாயிற்று, இது நான் கட்டியது என்று அகங்கரிக்க. பெருமாள், இக்கோபுரம் அவனுடையது. நான் இவ்வழியில் செல்ல வேண்டாம், இதை அடைத்துவிடுங்கள் என்று நியமிக்க, அப்படியே கல்திரை சமர்ப்பித்ததும், அது முதல் பெருமாள் வேறு வழியாக எழுந்தருளுவதும் காஞ்சியில் பிரசித்தம், கர்த்ருத்வத்தை குணங்களிடத்தில் வைக்கவேண்டும். பரமாத்மாவிடத்தில் வைக்கவேண்டும் என்று கீழே சொல்லப் பட்டதல்லவா? இங்கு கர்த்ருத்வத்தை இந்திரியங்களிடம் வைக்கவேண்டும் என்று கூறப்படுகிறது.

**"யோ அந்யதாஸந்தம் ஆத்மானம் அன்யதாப்ரதிபத்யதே |**
**கிம்தேந நக்ருதம் பாபம் சோரேண ஆத்மாபகாரிணா ||"**

ஒரு பைசா திருடும் பொழுது அதற்குத் தண்டனை இல்லை. கஜானாவில் ஒரு பைசா போனால் தண்டனை அதிகம். அதேபோல ஸ்வாமியினுடைய சொத்தை அபகரிக்கும் பொழுது அவனுடைய தேஜசுக்குத் தகுந்தாற் போல தண்டனை அதிகமாகிறது. "*மணிவர இவசௌரே:*" என்று ஜீவனை கௌஸ்துபமாகக் கூறப்பட்டிருக்கிறது. இப்படிப்பட்ட சொத்து மிக உயர்ந்தது. சுவாமியோ அறப் பெரியவன். இந்த சொத்தை அவனுக்காக்காமல் தனக்காகினால் இது பெரிய பாபம். நிஷ்காம்யகர்மனுக்கு இந்த பாபம் ஒட்டுவதில்லை என்றபடி. இதை "*ஸர்வபூதாத்மபூதாத்மா குர்வந்நபி ந லிப்யதே*"

என்று கூறப்பட்டது. இவ்விடத்தில் இப்பொருளைக் காணலாம். ஜலத்தில் பிறந்து அங்கேயே வளர்ந்துங்கூட தாமரையில் ஜலம் ஒட்டுவதில்லை. அதுபோல ஒத்திருந்துங்கூட "*நான் செய்கிறவன்*" என்ற எண்ணமில்லாமல் கர்மாவைச் செய்தால் பாபம் ஒட்டாது. பொய் சொலவதற்கும் பரிகாரம் உண்டு. "*நான் செய்கிறவன்*" என்று தன்னைக் கர்த்தாவாக எண்ணுவதற்குப் பரிகாரம் இல்லை. லோகத்தில் மாதா பிதாக்கள் குழந்தை பொய் சொன்னாலோ, திருடினாலோ சிரிப்பார்கள். பகவான் மாதா, பிதா, ப்ராதா என்று சொல்லப்படக்கூடியவன். அவன் சொல்கிறான் "*நான்*" என்பது மிகுந்த தோஷம் என்று. குண வைஷம்யம், ஆகார வைஷம்யம், வ்ருத்தி வைஷம்யம் இவை இருக்கலாம். சரீரம் ஒருவிதத்தில் இருக்கலாம். வேறுவிதத்தில் இருக்கலாம். நாயிடத்தில் ஒரு தொழில், நாய் மாமிசத்தைத் தின்பவனிடத்தில் ஒரு தொழில் இவை எப்படி இருந்தாலும், ஜீவன் எல்லாவிடத்திலும் ஒரே விதமாக இருக்கிறான்.

**"கர்மயோகஸ்ய ஸௌகர்யம் சைக்ரியம் காஸ்ச்சநதத்விதா |**
**ப்ரம்மஜ்ஞான ப்ரகாரஸ்ச்ச பஞ்சமாத்யாய உச்யதே ||"**

இது சங்கிரக ச்லோகம்.

**ஐந்தாம் அத்தியாயம் முற்றும்.**

# ஆறாம் அத்தியாயம்

கர்மானுஷ்டானமானது யோகம் ஏற்படுகிறவரை அவசியம் வேணும். யோகம் ஏற்படுகிறபோது அது ஒரு விதமாக விட்டுப்போகும். எம்பெருமானை அனுபவிக்கிறபோது அவனுக்குச் செய்யும் கைங்கர்யம் விட்டுப்போகும்.

**"ஸ்ருஷ்டஸ்த்வம் வனவாஸாய ஸ்வநுரக்த: ஸுஹ்ருஜ்ஜனே |**
**ராமே ப்ரமாதம் மா கார்ஷீ : புத்ர ப்ராதரி கச்சதி ||"**

(வா.ரா. அயோ.கா - 40 - 5)

என்ற ச்லோகத்தில், பெருமாள் அழகில் கண் வைத்தால் கைங்கர்யம் விட்டுப்போகும் என்று கூறியது போலே, யோகத்தில் இருப்பவனுக்கும் கர்மயோகம் விட்டுப்போகும்.

யோகாப்யாஸம், ஆத்மசிந்தனம் இவை நம்முடைய அனுபவத்திற்கு வருகிற விஷயமில்லை. சொல்லுவதைக் கேட்டுக் கொண்டு போகவேண்டியது தான். விஷய சுகம் நமக்கு நன்கு தெரியும். ஆத்ம சுகம் அவ்வளவு தெரியாது. ஆனாலும் ஒருவிதத்தில் நமக்குத் தெரியும் என்று சுவாமி வ்யாக்யானம் செய்திருக்கிறார்.

<u>விஷய சுகம்</u> :-

நல்ல வஸ்திரம், ஆபரணம், புஷ்பம், தாம்பூலாதிகளால் வரும் சுகமாகும். சுருக்கமாகப் பார்த்தால் ஆத்மாவைத் தவிர வேறு பதார்த்தங்களைப் பெற்று அனுபவித்து ஆனந்திக்க றோமே அதுதான் விஷய சுகம்.

<u>ஆத்ம சுகம்</u> :-

ஆத்ம சுகம் என்பது தன்னைத் தானே அனுபவிப்பதாகும். வீணாகானம் செய்கிறபோது இடையூறு இருந்தால் கானம் ரசிக்க முடியாது. நிசப்தமாக இருந்தால் தான் ரசிக்க முடியும். அதுபோல, மனசு என்கிற தத்துவம் "*புரீததி*" என்கிற நாடியில் புகுந்துவிடுகிறது. அதுதான் தூக்க நிலை ஆகும். அப்பொழுது விஷயானுபவம் கிடையாது. ஆத்மா தனக்குத் தானே அனுபவிக்கிறான். இது நிசப்தமான வீணாகானம் போலே. விஷயானுபவ சுகத்தைக் காட்டிலும் தூங்குகிற காலத்தில் ஏற்படுகிற சுகம் மிக உயர்ந்தது. "*உணர்ந்தவன் சுகமாக உறங்கினேன் என்கையாலே ஆத்மா சுகரூபமாகக் கடவது*" என்பது

தத்வம். நம்போல்வார்க்கு ஆத்ம சுகம் உண்டா? தெரியுமா? என்றால் தூக்க காலத்தில் நமக்கும் ஒருவிதமாகத் தெரியும் என்பது நம் அனுபவத்தால் உணரலாம். பகவான் சொல்கிறபடி எவன் கர்மயோகத்தைச் செய்து வருகிறானோ அவன் ஆத்மாவைத் தவிர வேறு பொருள்களில் ஆசை இல்லாமல் "*நான், எனது*" என்று அகங்கார மமகாரத்தையும் இந்தப் பலன் வேண்டும் என்கிற பல அபிலாஷையையும் துறந்து மனதை ஆத்மாவிடத்தில் செலுத்தி சிந்திப்பானேயானால் அப்பொழுது ஆத்மாவைப் பிரத்யக்ஷமாகப் பார்க்கலாம். காற்றில்லாத இடத்தில் பிரபையோடு கூடின தீபம் எப்படி சலிக்கிறதில்லையோ அதுபோல எந்த இடத்தில் இருக்கிற ஜீவன் சலிக்கிற-தில்லையோ அப்போதுதான் யோகநிலை என்று சொல்லப்-படுகிறது. *தீபம் - ஒளி, சூரியன் - கிரணம், ஆத்மா - ஞானம்.* இங்கு இரண்டு தேஜஸில் ஒன்று தர்மி, ஒன்று தர்மம். ஞானமாகிற தர்மத்தோடு கூடின ஆத்மா தன்னைப் பார்க்கிற போதுதான் சலியாமல் இருக்கும். அந்த தசையில்தான் இவன் ஆத்மா சாக்ஷாத்காரம் செய்பவன் எனப்படுகிறான். ஞானம், ஆத்மாவைப் பார்க்காத காலத்தில் வெளிவிஷயங்களைப் பார்க்கிறது. ஆத்ம சுகத்தைப் பார்த்த பிறகு வெளி விஷயங்கள் எவ்வளவு இன்பகரமாக இருந்தாலும் அவை ஒரு பொருளாகவே தோன்றாது. இதற்கு ஓர் உதாரணம்.

**"ரூபஸம்ஹநநம் லக்ஷ்மீம் ஸௌகுமார்யம் விசேஷத: |**
**தத்ருசு: விஸ்மிதாகாரா: ராமஸ்ய வனவாஸிந: ||"**

(வா.ரா.ஆ.ர.கா.1-13)

என்று பெருமாள் தண்டகாரண்யத்திற்கு எழுந்தருளின போது பெருமாளுடைய அழகில் ஈடுபட்ட ரிஷிகளுடைய நிலையைக் கூறுவது இது. இங்கு இராமனைக் கிட்டின ரிஷிகள் வேறொன்றையும் பார்க்காமல் இராமபிரானையே கண்டு கொண்டிருந்தனர் என்பதை "*தத்ருஶு விஸ்மிதா காரா:*" என்று வான்மீகி கூறினார். கம்பரும்

***"பெண்ணின் நோக்கும் சுவையை பிறர் பிறர்க்கு***
***எண்ணி நோக்கி இயம்பரும் இன்பத்தை***
***பண்ணின் நோக்கும் பராவமுதைப் பசும்***
***கண்ணின் நோக்கினர் உள்ளம் களிக்கின்றார்"*** என்றும்

(அயோத்தியா காண்டம் - கங்கைப்படலம்-11)

**"தோள்கண்டார், தோளே கண்டார், தொடுகழல் கமலமன்ன**
**தாள்கண்டார், தாளே கண்டார்; தடக்கை கண்டாரும் அஃதே;**
**வாள்கொண்ட கண்ணார் யாரே, வடிவினை முடியக்கண்டார்?**
**ஊழ்கொண்ட சமயத்தன்னான் உருவு கண்டாரை ஒத்தார்"**

(பால காண்டம் - உலாவியற் படலம்-19)

என்றும் கூறினார்.

**"யதா தீபோ நிவாதஸ்த்தோ நேங்கதே ஸோபமா ஸ்ம்ருதா |**
**யோகினோ யதசித்தஸ்ய யுஞ்ஜதோ யோகமாத்மந: ||"**

(6-19)

**"யத்ரோபரமதே சித்தம் நிருத்தம் யோகஸேவயா |**
**யத்ர சைவாத்மனாத்மானம் பச்யன்னாத்மனி துஷ்யதி ||"**

(6-20)

**"ஸுகமாத்யந்திகம் யத்தத்புத்திக்ராஹ்யமதீந்திரியம் |**
**வேத்தி யத்ர ந சைவாயம் ஸ்திதச்சலதி தத்வத: ||"**

(6-21)

**"யம் லப்த்வா சாபரம் லாபம் மந்யதே நாதிகம் தத: |**
**யஸ்மின்ஸ்த்திதோ ந து:கேன குருணாபி விசால்யதே ||"**

(6-22)

**"தம் வித்யாத் து:க்கஸம்யோகவியோகம் யோகஸம்ஜ்ஞிதம் |**
**ஸ நிச்சயேன யோக்தவ்யோ யோகோऽநிர்விண்ணசேதஸா ||"**

(6-23)

என்ற ச்லோகங்களினால் இதைப் பகவான் விளக்கினான்.

**"தபஸ்விப்யோऽதிகோ யோகீ ஜ்ஞானிப்யோऽபி மதோऽதிக: |**
**கர்மிப்யச்சாதிகோ யோகீ தஸ்மாத்யோகீ பவார்ஜுந||"**

(6-46)

என்ற ச்லோகம் சொன்னதும் கீதை கேட்டாகிவிட்டது என்ற எண்ணம் அர்ஜுனனுக்கு வந்துவிட்டது. இதையறிந்த பகவான் அர்ஜுனனைப் பார்த்து, *"கீதை முடியவில்லை; இன்னும் இருக்கிறது; ஜீவாத்மாவைப்பற்றிச் சொன்னேன், இனி பரமாத்மாவைப் பற்றிச் சொல்ல வேண்டியிருக்கிறது, அதையும் சொல்லுகிறேன்* என்று

**"யோகினாமபி ஸர்வேஷாம் மத்கதேனாந்தராத்மநா |**
**ச்ரத்தாவாந் பஜதே யோ மாம் ஸ மே யுக்ததமோ மத: ||"**

(6-47)

என்ற ச்லோகத்தால் அருளிச்செய்கிறான். இங்குதான் ஸ்வாமியுடைய விசேஷ ஞானம் பிரகாசிக்கிறது.

**"மனுஷ்யாநாம் மனுஷ்யேஷவொ க்ஷத்ரிய: சூர:**
**நரேப்ய: ராக்ஷஸ: சூர: "**

என்று உதாரணம் கொடுக்கிறார். இங்கு *"நராணாம் நரேஷூவா ராக்ஷஸ: சூர:"* என்று நிர்தாரணேஷஷ்டி வராது. எல்லா யோகிகளைக் காட்டிலும் பரமாத்மாவான என்னை எவன் பஜனம் பண்ணுகிறானோ அவன் பெரியவன் என்பது இங்கு அபிப்பிராயம்.

**"யோகாப்யாஸ விதிர்யோகி சதுர்தா யோகஸாதநம் |**
**யோகசித்தி: ஸ்வயோகஸ்ய பாரம்யம் ஷஷ்டரச்யதே ||"**

என்பது சங்கிரஹ ச்லோகம்.

## ஆறாம் அத்தியாயம் முற்றும்.

# ஏழாம் அத்தியாயம்

ஆறாம் அத்தியாயக் கடைசியில் ஜீவாத்ம யோகத்தைக் காட்டிலும், பரமாத்மயோகம் மிகச் சிறந்தது என்று பகவான் பார்த்தசாரதி அருளிச்செய்திருக்கிறான். இனி ஏழாம் அத்தியாயத்தின் சாரம்.

**"ஸ்வ யதாத்ம்யம் ப்ரக்ருத்யாஸ்ய திரோதி: சரணாகதி: |**
**பக்தபேத: ப்ருபுத்ஸ்ய ஸ்ரைஷ்ட்யம் சப்தம உச்யதே ||"**

என்பது இந்த அத்தியாயத்திற்கு சங்கிரஹ ச்லோகம். 7,8,9,10,11,12 என்று எண்களிட்ட இந்த ஆறு அத்தியாயங்களுக்கும் "*மத்யம ஷட்கம்*" என்று பெயர். இதில் பக்தியைப்பற்றித்தான் அருளிச் செய்திருக்கிறான். பக்தியாவது உயர்ந்தவன் விஷயத்தில் தாழ்ந்தவன் செய்யும் அன்பாகும். "*மஹநீய விஷயே ப்ரீதி: பக்தி:*" என்று பக்திக்கு தேசிகன் லக்ஷணம் செய்திருக்கிறார். எந்த வஸ்துவிற்கு ஒத்த பொருளும் மேலான பொருளுமில்லையோ அதுதான் உயர்ந்த விஷயம். அவனே நாராயணன், கண்ணன் என்று அழைக்கப்படுகிறவன் ஆவான். இவ்விஷயத்தை இடையிடையே பகவான் அருளிச் செய்து கொண்டு போவதைப் பார்க்கலாம்.

**"மய்யாஸக்த மநா: பார்த்த யோகம் யுஞ்ஜன் மதாச்ரய: |**
***அஸம்சயம் ஸமக்ரம் மாம் யதா ஜ்ஞாஸ்யஸி தச்ச்ருணு ||"***

(7-1)

(இதனுடைய கருத்துரை கூறப்பட்டது.) நம்மைப்போல் உள்ள ஜீவாத்மாக்கள் தாழ்ந்தவர்கள்தான். நாராயணனாகிற கண்ணன் மேலானவன்தான். அவன் விஷயத்தில் நாம் செய்யும் ப்ரீதிதான் பக்தியாகும். இதில் முதன் முதலில் பகவானுடைய மேன்மை நம் நெஞ்சில் பட அதன் பிறகு பகவானிடத்தில் பக்தி ஏற்படுகிறது. அதனால் தான் கண்ணன் தன்னைப் பற்றி தன் மேன்மையைப் பற்றி அடிக்கடி சொல்கிறான். "*ஹேமா*" என்று தங்கத்திற்குப் பெயர். பகவான் தங்கத்துக்குரிய சப்தத்தாலேயே சொல்லப்படுவான்.

***"பொன்னானாய் பொழிலேழும்காவல் பூண்ட***
***புகழானாய் இகழ்வாய தொண்டனேன் நான்"***

(திருநெடுந்தாண்டகம்-10)

என்பது திருமங்கை ஆழ்வாருடைய பாசுரம்.

**"அக்கினிதாகே ந மே துக்கம் சேதே ந நிகஷே ந வா
யத்ததேவ மஹத்துக்கம் குஞ்ஜாயா ஸஹ தோலனம்"**

**"ஹேம்நே கேதேந சேதேந தாஹேந கஷநேநவா
ஏததேவ மஹத்துக்கம் குஞ்ஞாயா ஸஹ தோலனம் "**

என்பது நீதி சாஸ்திரம்.

"*தூது போ*" என்று சொன்ன காலத்தில் தூது போயிருக்கிறான். "*தேரோட்டு*" என்று சொன்ன சமயத்தில் தேரோட்டியிருக்கிறான். திருவாய்ப்பாடியில் இருக்கிறபொழுது கட்டுண்டும் அடியுண்டும் இருக்கிறான். இதெல்லாம் பகவான் பொறுத்துக் கொள்வான். ஆனால், "*இன்னான், பகவான் கண்ணனோடு ஒத்தவன்*" என்று சொன்னால் அது பகவான் கண்ணனுக்குப் பொறுக்கவே பொறுக்காது. இது குந்துமணியோடு பொன்னை வைத்துச் சமம் பார்ப்பது போன்றதாகும். இந்த விஷயத்தைக் கீதையில் நன்கு பார்க்க வேண்டும்.

**"மத்த: பரதரம் நான்யத் கிஞ்சிதஸ்தி தனஞ்ஜய |**
***மயி ஸர்வமிதம் ப்ரோதம் ஸூத்ரே மணிகணா இவ ||"***

(7-7)

என்று தன் பெருமையைத் தானே சொல்லிக் கொண்டிருக்கிறான். அர்ஜுனனுக்கு "*திவ்யம் ததாமி தே சக்ஷு: பஸ்ய மே யோகமைச்வரம்*" (11-8) என்று திவ்ய கண்ணைக் கொடுத்துத் தன்னைப் பார்க்கச் சொன்ன காலத்தில் அவன் பெருமையைக் கண்ட அர்ஜுனன்,

**"ந த்வத்ஸமோऽஸ்த்யப்யதிக: குதோऽந்யோ
லோகத்ரயேऽப்யப்ரதிமப்ரபாவ || "**

(11-43)

என்று கூறியிருக்கிறான். உபதேசம் செய்தவன் தனக்கு மேல் ஒருவனும் இல்லை என்றான். உபதேசம் பெற்றுக் கொண்டவன். உனக்கு ஒத்தவனும் மேலானவனும் எவனுமில்லை என்றான். இதுதான் கீதாசாரமாகும். இந்தக் கருத்து முதலில் நம் உள்ளத்தில் பட வேண்டும். இந்த எண்ணம் இல்லாமல் அவனிடம் எவ்வளவு பக்தி பண்ணினாலும் அதனால் பயனே இல்லை. மற்றப் பொருளைக் காட்டிலும் மிகப் பெரியது எதுவோ அதுதான் ப்ரம்மம் என்று ப்ரம்ம சப்தார்த்தத்தில் கூறப்படுகிறது. இந்த சம்பிரதாயத்தில் இந்த அர்த்தத்தை

ஆழ்வார்கள்தாம் நன்கு உணர்ந்தவர்கள். கீதையைப் பற்றி ஒரு ச்லோகம் சொல்வதுண்டு.

**"சர்வோபநிஷதோ காவ: தோக்தா கோபாலநந்தன: |**
**பார்த்தோ வத்ஸ: ஸுதீர் போக்தா துக்தம் கீதாம்ருதம் மஹத் ||**

கீதா மாஹாத்ம்யம் - 6

இங்கு "**ஸுதீ:**" என்று கூறியது, "*ஆழ்வார்களை*" என்று சம்பிரதாயத்தில் அர்த்தம் சொல்வதுண்டு.

***"மெய்ம்மைப் பெருவார்த்தை விட்டுசித்தர் கேட்டிருப்பர்",***

நாச்சியார் திருமொழி-11-10

***"மாயன் அன்று ஓதிய வாக்கதனைக் கல்லார்***
***உலகத்தில் ஏதிலராம் மெய்ஞ்ஞானமில்",***

நான்முகன் திருவந்தாதி-71

***"மாயன் உரைக்கிடக்கும் உள்ளத்தெனக்கு",***

நான்முகன் திருவந்தாதி-50

***"வார்த்தை அறிபவர் மாயவற்கு ஆளன்றி ஆவரோ",***

திருவாய்மொழி-7-5-10

***"அறிவினால் குறைவில்லா அகல்ஞாலத்தவரறிய***
***நெறியெல்லாம் எடுத்துரைத்த நிறை ஞானத்தொருமூர்த்தி",***

திருவாய்மொழி-4-8-6

***"பிணக்கற அறுவகைச் சமயமும் நெறியுள்ளி உரைத்த***
***கணக்கறு நலத்தனன்"***

திருவாய்மொழி-1-3-5

என்று ஆழ்வார்கள் பலவிடங்களிலும் கீதையைப் பற்றிப் பேசியிருக்கிறார்கள்.

பொருள்களை "*சமஷ்டி, வ்யஷ்டி*" என்று இரண்டு விதமாகக் கூறுவார்கள். இதற்குப் பலவிதமாக வேதாந்தத்தில் அபிப்பிராயம் சொல்வதுண்டு. பகவான் நேரடியாகத் தானே படைக்கும் பொருள்கட்கு ஸமஷ்டிப் பொருள்கள் என்றும், பிரம்மா முதலான தேவதைகளுக்கு அந்தர்யாமியாக இருந்து படைக்கும் பொருள்களுக்கு வ்யஷ்டிப் பொருள்கள் என்றும் சொல்வதுண்டு. ஜலத்தில் உப்புக் கட்டியைப் போட்டபோது

உப்பு என்ற பெயரும் அதன் உருவமும் அழிந்து விடுகிறது. ஜலத்தில் போடுவதற்கு முன்பு அதற்கு உருவமும் பெயரும் இருந்தது. ஜலத்தில் போட்ட பிற்பாடு அவை இல்லை. இங்கு ஒரு ஆராய்ச்சி. உப்பு அங்கு இருக்கிறதா? இல்லையா? என்று. நம் சுவாமி *"இல்லை"* என்றும், *"உண்டு"* என்றும் கருத்துச் சொல்லியிருக்கிறார். இல்லை என்பதற்குப் பெயர் வடிவங்களோடு இல்லை என்றும், உண்டு என்பதற்கு உப்புச் சுவையாக இருக்கிறதென்றும் கூறியிருக்கிறார். இவ்விஷயத்தை,

***"ஒன்றும் தேவும் உலகும் உயிரும் மற்றும் யாதுமில்லா***
***அன்று நான்முகன் தன்னொடு தேவருலகோடு உயிர் படைத்தான்"***

திருவாய்மொழி-4-10-1

என்ற திருவாய்மொழியில் நன்கு காணலாம். அவனை விட்டுப் பிரபஞ்சம் தனியாக இருக்கமுடியாது. இந்த ப்ரபஞ்சத்தை *"பராப்ரக்ருதி"* என்றும் *"அபராப்ரக்ருதி"* என்றும் இருவகையாகப் பிரித்து அவ்விரண்டையும் தன்னுடையனவாகச் சொல்லிக் கொள்கிறான் பகவான். *"மேபராப்ரக்ருதி"* *"மேஅபராப்ரக்ருதி"* என்று பகவான் சொல்வதைக் காணவேண்டும்.

**"அபரேயமிதஸ்த்வன்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் |**
**ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ||"**

(7-5)

என்பது கீதா ச்லோகம். *"ம்ருதோ தரித்ர புருஷ:"* என்று லோகத்தில் ஒரு பழமொழி சொல்வதுண்டு. உலகத்தில் எவன் பணக்காரனோ அவனுக்குத்தான் பெருமையுண்டு என்று அர்ஜுனன் எண்ணியிருக்கிறானாகக் கொண்டு அவன் கருத்துக்குச் சேர எல்லாவற்றையும் எடுத்து எல்லாம் தன்னுடைய சொத்து என்று சொல்லி, *"எனக்கு மேல் தலைவன் இல்லை"* என்று தன்னுடைய பெருமையை உணர்த்தி தன்னிடம் ப்ரீதி பண்ணும்படி சொல்லியிருக்கிறான்.

*"அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: ப்ரபவ: ப்ரலயஸ்ததா"* என்று கூறுகிறான். *அஹம் க்ருத்ஸ்நஸ்ய ஜகத: அஹம் க்ருத்ஸ்நஸ்ய ப்ரலய:* என்றதனால், காரண வஸ்து தானே என்று உணர்த்தி-யிருக்கிறான். பிரம்மத்திற்கு லக்ஷணம் சொல்லுகிறபொழுது ஜகத் காரணம் தான் சொல்லப்பட்டிருக்கிறது. *"காரணம் து த்யேய:"* என்பது ப்ரம்மசூத்திரம்.

**"யதோவா இமாநி பூதாநி ஜாமந்தே |**
**யேந ஜாதாநி ஜீவந்தி |**
**யத் ப்ரயந்த்யபிஸம்விசந்தி |**
**தத்விஜிக்ஞாயஸஸ்வ தத் ப்ரம்மேதி" ||**

(தைத்தரீய உபநிஷத் - ப்ருகுவல்லி - 1)

என்பது சுருதி வாக்கியம். ஞானம், சக்தி முதலிய குணங்களை உடைய உயர்ந்த வஸ்து வேறொன்றும் இல்லை. கண்ணன்தான் எல்லாவற்றிற்கும் சேஷியாய் இருப்பதால் எல்லாவற்றிற்கும் காரணமாய் இருப்பதால் என்னைக் காட்டிலும் வேறில்லை. அப்படியே என்னைப்போல் ஞானம் சக்த்யாதி கல்யாண குணங்களில் சிறந்தவன் வேறில்லை என்று குணத்தைப் பற்றியும் சொல்லுகிறான் இங்கு. இது பகவானுடைய மேன்மை சொல்கிற இடம். இவ்விஷயம் உண்மையாக இருக்க வேண்டும். ப்ரம்மம் உயர்ந்தது தான், அதற்குக் குணம் இல்லை, விக்கிரகம் இல்லை என்று சிலர் சொல்கிறார்கள். நம் சுவாமி ப்ரம்மத்திற்குக் குணம் உண்டு, விக்கிரகம் உண்டு என்று சொல்லுபவர். நான்காம் அத்தியாயத்தில் "*கதம் ஏதத் விஜானீயாம்*" என்ற இடத்தில் விக்கிரகம் உண்டு என்று சொல்லியாகிவிட்டது.

**" ஸர்வமேதத் ருதம் மந்யே யந்மாம் வதஸி கேசவ |**
**ந ஹி தே பகவந்! வ்யக்திம் விதுர்தேவா ந தாநவா: ||"**

(10-14)

என்று அர்ஜுனன் சொல்லியிருப்பதால் எல்லாம் சத்யம் என்று தேறிற்று. இங்கு குணங்களைப்பற்றிச் சொல்லவேண்டும். கிருஷ்ணனைப்போல தன் பரத்வத்தை யாரும் சொல்லவே யில்லை. இராமன் கூட இப்படிச் சொல்ல மாட்டான். ச்ருத ப்ரகாசிகாசார்யர் ஓரிடத்தில் ஸகல கல்யாண குணங்களையும் தொகுத்து அழகாக அருளிச் செய்திருக்கிறார். பிரம்மத்திற்கு குணங்கள் ஸ்வாபாவிகம் (*ஸ்வாபாவிகாடநவதிகாதிசய ஞான பல ஐச்வர்ய வீர்ய சக்தி தேஜ:*) "*நாவசைய நாடசையும்*" என்பது பழமொழி. "*அந்தப் பரவிஷ்டஸ்சாஸ்தா ஜனானாம் ஸர்வாத்மா*". எல்லாப் பொருள்களுக்குள்ளிருந்தும் நியமிப்பது என்பது பகவானுக்கு இயல்பு. லோகத்தில் இப்படிப்பட்ட சிறப்பு அம்சம் அமைவது அவனுடைய புண்ய விசேஷமாகும். பகவானுக்கு இது காரணமில்லாமல் ஏற்பட்டிருக்கிற சிறப்பு.

*"நாடன்யோ ஹேது: வித்யதே ஈஸனாய"* என்பது வேத வாக்யம். ***ஈச: நியமநசீல: நாராயண:*** என்று ஆதி சங்கரர் செய்த வ்யாக்யானம் அனுபவிக்கத்தகுந்தது. *"ஸ்வாபாவகி ஞான பல க்ரியாச"* என்று இன்னொரு வேத வாக்கியம். புஷ்பத்திற்குப் பரிமளம் இயல்பா-யிருப்பது போல இக்குணங்களெல்லாம் பகவானுக்கு இயல்பாகும். ஒரு வாக்கியம்! சாஸனத்திற்குக் காரணம் கிடையாதென்றும், வேறொரு வாக்கியம் ஸ்வாபாவிகம் என்றும் சொல்கிறது. *"ஸ்வயாதாத்மியம்"* என்றால் யதாவஸ்தித ஆகாரம் என்று பொருள். குணங்களாலே உத்க்ருஷ்ட வஸ்து இவனைக் காட்டிலும் வேறு கிடையாது என்பதாகும். திருக்கச்சி நம்பிக்கு பேரருளாளன் அருளிச் செய்த ஆறு வார்த்தைகளும், இராமானுஜ சித்தாந்தத்திற்கு மூலம். அதில் *"அஹமேவ பரம் தத்வம்"* என்பது பேரருளாளனின் முதல் வார்த்தை. என்னைக் காட்டிலும் மற்றொன்று கிடையாது. *"மத்தப் பரதரம் நாந்யத்"* என்பது கண்ணன் வார்த்தை. பாகவதத்தில் ஒரு கோபாலனுடைய பாதரக்ஷயைக் கொண்டு வந்த சரித்திரம் உண்டு. இத்தகைய இழிதொழில் செய்தவன், தனக்கு ஒத்தவன் ஒருவன் உண்டு என்றால் அதறகுச் சஹிக்க மாட்டான். ***"கண்ணன் அல்லால் இல்லை கண்டீர்"*** -(திருவாய்மொழி-9-1-10) *மத்தத் பரதரம் கிஞ்சித் அந்யத் நாஸ்தி* - ரத்ன மாலையில் இருக்கும் எல்லா ரத்னங்களுக்கும் ஆதாரம் நூல். அது நுண்ணிய-தாகவும், ஆதாரமாகவும் இருக்கிறது. நூல் ரத்தினங்களைப்-பற்றி இல்லை. இரத்தினங்கள் நூலைப் பற்றி இருக்கின்றன. நூல் போல் பகவான் ரத்தினங்கள் போலே சேதனா-சேதனங்கள் (மற்ற பொருள்கள்). தன்னைப் பற்றி எல்லாம் இருக்கின்றன. பிற பொருளைப் பற்றித் தானில்லை, *"குண்டலீ புருஷ: தண்டீ புருஷ: மதுப்ரத்யயம்"* வருவதற்கும் வராமலிருப்பதற்கும் காரணம் என்னவென்றால் எந்த வஸ்துவானது, எந்த வஸ்துவைக் காட்டிலும் பிரியாது இருக்குமோ அங்கு மதுப்ரத்யயம் வரும். எங்கு விட்டுப் பிரியுமோ அங்கு மதுப்பு வராது. சுக்கிலம் பட இங்கு மதுப்பு வந்திருக்கிறது. அப்ருதக்ஸ்தித விசேஷணம் இது. *குண்டல: புருஷ: தண்ட: புருஷ:* என்று சொல்லக்கூடாது. இது பிரதக்ஷீத விசேஷணம். ப்ரம்மத்திற்கும் ப்ரபஞ்சத்திற்கும், குண்டலத்துக்கும், புருஷனுக்கும்போலே இல்லை. வெண்மைக்கும் வஸ்திரத்துக்கும் போலே இருக்கிறது என்பது தான்

சித்தாந்தம். ஒன்றை விட்டு ஒன்று பிரியாது இருக்கும் பொருள். "*வனானி விஷ்ணு: புவனானி விஷ்ணு: ஜலாதி விஷ்ணு:* என்று கூறுவதெல்லாம் "*சக்லபட*" என்று கூறுவது போல.

> **"ரஸோஹ-மப்ஸு கௌந்தேய ப்ரபாஸ்மி சசி ஸூர்யயோ: |**
> **ப்ரணவ: ஸர்வவேதேஷு சப்த: கே பௌருஷம் ந்ருஷு ||"**
> (7-8)

> **"புண்யோ கந்த: ப்ருதிவ்யாஞ்ச தேஜச்சாஸ்மி விபாவஸௌ |**
> **ஜீவனம் ஸர்வபூதேஷு தபச்சாஸ்மி தபஸ்விஷு ||"**
> (7-9)

> **"பீஜம் மாம் ஸர்வபூதாநாம் வித்தி பார்த்த ஸநாதநம் |**
> **புத்திர்புத்திமதா-மஸ்மி தேஜஸ்-தேஜஸ்விநாமஹம் ||"**
> (7-10)

> **"த்ருபிர்-குணமயைர்-பாவை-ரேபி: ஸர்வமிதஞ்ஜகத் |**
> **மோஹிதம் நாபிஜாநாதி மாமேப்ய: பர-மவ்யயம் ||"**
> (7-13)

> **"தைவீ ஹ்யேஷா குணமயீ மம மாயா துரத்யயா |**
> **மாமேவ யே ப்ரபத்யந்தே மாயா-மேதாம் தரந்தி தே ||"**
> (7-14)

இவற்றால் ப்ரக்ருதி விஷயம் சொல்லப்படுகிறது. "*உள்புறம் வெளிப்புறம் ஆனால் காக்கை நோக்குக பணி போருமிறே*".

> ***"மாக்கேழ் மடநல்லாய்" என்று அரற்றும் சான்றவர்***
> ***நோக்கார்கொல் நொய்யதோர் நுச்சிலை? – யாக்கைக்கோர்***
> ***ஈச்சிற கன்னதோர் தோல்அறினும் வேண்டுமே,***
> ***காக்கை கடிவதோர் கோல்"***

(நாலடியார்- அறத்துப்பால்-தூய் தன்மை - 1)

ப்ரக்ருதியான தான் அயோக்கியமாய் இருந்தும் தன்னிடத்தில் மோஹம் ஏற்படும்படி பண்ணுகிறதே இதுதான் மோஹம். இது மட்டுமல்லாமல் பரமயோக்யமான ஆத்மாவையும் பார்க்கவொட்டாமல் மறைக்கிறது.

> ***"கண்ணபிரானை விண்ணோர் கருமாணிக்கத்தை அமுதை***
> ***நண்ணியும் நண்ணகில்லேன் நடுவேயோர் உடம்பிலிட்டு***
> ***திண்ணம் அழுந்தக்கட்டிப் பலசெய்வன வண்கயிந்தால்***
> ***புண்ணை மறையவரிந்து என்னைப் போரவைத்தாய் புறமே"***

**திருவாய்மொழி-5-1-5**

என்ற பாசுரத்தில், "*நண்ணியும் நண்ணகில்லேன் நடுவே ஓர் உடம்பிலிட்டு*" என்றார் ஆழ்வார். "*பிறப்பறுக்கலுற்றார்க்கு உடம்பும் மிகை*" (திருக்குறள்-345) என்றார் திருவள்ளுவர். "*யவனிகா மாயா ஜகந் மோகினீ*" (சது:ச்லோகீ-1) என்றார் ஆளவந்தார். இந்த மாயையிலிருந்து விடுபடுவதற்கு உபாயம் சரணாகதி தான்.

**"மாமேவ யே ப்ரபத்யந்தே மாயாம் ஏதாம் தரந்தி தே" ||**
(7-14)

என்றான் கண்ணன்.

***"குருவி இழைத்த புந்கூட்டின் பிணையல்***
***உருவி அவிழ்க்கையும் ஒல்லார் - கருவின்***
***அமைத்த பெரூழின் அரும்பிணி வீட்டச்***
***சமைத்த வலியரோ தாம்"***

பாடல் திரட்டு - 46 - ஊழின் வலி

(*மதுரை தமிழ்ச்சங்கம்* ***திருநா.அப்பனைய்யங்கார் ஸ்வாமி*** *இயற்றியது*)

"ஒரு குருவி பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கப் போகிறதில்லை, சர்வ சக்தி கர்மாநுகுணமாகப் பிணைத்த பிணையை அவனே கால்கட்டி அவிழ்த்துக் கொள்ளும் இத்தனை காண் " என்று பிள்ளை திருநறையூர் அறையர் வார்த்தை. நான் பிணைத்த பிணை ஒருவரால் அவிழ்க்கப் போகாது என்னையே கால்கட்டி அவிழ்த்துக் கொள்ள வேணும் என்றான் கண்ணன்.

***"பொல்லா ஆக்கையின் புணர்வினை அறுக்கலறா***
***சொல்லாய் யானுன்னைச் சார்வதோர் சூழ்ச்சியே"***

திருவாய்மொழி-3-2-3

என்றார் ஆழ்வார்.

"*இருக்கிறபோது உடம்போடு இருக்க வேண்டும் என்று ஆசைப்பட்டு உயிர் போகுங்காலத்தில் சொர்க்க நரகாதிகளில் கொண்டு சேர்க்காமல் பரமபதத்தில் உன் திருவடி வாரத்தில் கொண்டுபோய்ச் சேர்க்க வேணும்*" என்று பிரார்த்திப்பவர் திருப்த ப்ரபந்நர் எனப்படுவர். மாயா சம்மந்தத்தைப் பெறுகிற விஷயத்தில் நமக்கு அதிக சாமர்த்தியம் உண்டு. அதிலிருந்து விலகிக் கொள்ள சாமர்த்தியமில்லை.

<u>நோற்றேன் பல்பிறவி</u>:-

பல்பிறவி நோற்றேன். எனக்குப் பல ஜன்மங்கள் உண்டாகும்படியாக (ஆயிற்று) நான் சாதனானுஷ்டானம் பண்ணினேன். நீர் விடாயால் வருந்திய நாய் சிருங்காய் நீர் தேங்கிய பானையில் தலையை விட்டுக்கொண்டு எடுக்க முடியாமல் தவிப்பது போல மாயையில் அகப்பட்டபடி.

இனி பக்த பேதம். அடுத்தது ஞானியினுடைய ச்ரைஷ்டியம்.

**"சதுர்விதா பஜந்தே மாம் ஜநா: ஸுக்ருதினோऽர்ஜுன|**
**ஆர்த்தோ ஜிஜ்ஞாஸுரர்த்தார்த்தீ ஜ்ஞானீ ச பரதர்ஷப ||"**
(7-16)

**"தேஷாம் ஜ்ஞானீ நித்யயுக்த: ஏகபக்திர்விசிஷ்யதே |**
**ப்ரியோ ஹி ஜ்ஞானினோऽத்யர்த்தமஹம் ஸ ச மம ப்ரிய: ||"**
(7-17)

**"உதாரா: ஸர்வ ஏவை தே ஜ்ஞானீ த்வாத்மைவ மே மதம் |**
**ஆஸ்த்தித: ஸ ஹி யுக்தாத்மா மாமேவானுத்தமாம் கதிம் ||"**
(7-18)

**"பஹூநாம் ஜன்மனாமந்தே ஜ்ஞானவான்மாம் ப்ரபத்யதே |**
**வாஸுதேவ: ஸர்வமிதி ஸ மஹாத்மா ஸுதுர்லப: ||"**
(7-19)

ஆர்த்தன், இந்த்ரன் (பலி சக்ரவர்த்தியிடம் ராஜ்யம் பெறப்போனபோது) அர்த்தார்த்தி, துருவன் - இது அபூர்வஸ்தானம், ஜிஜ்ஞாஸு - கேவலன், ஞானி - பகவத் ப்ராப்திகாமன் சதுர்விதா பஜந்தே என்று பகவான் நாலாகச் சொன்னான். சுவாமி மூன்றாக வ்யாக்யானம் பண்ணினார். இதற்கு அபிப்பிராயம் அசித்தைப்பற்றி வரும் ஆனந்தத்தால் முதல் இரண்டையும் சேர்த்து ஒன்றாக்கி, பரிசுத்த ஜீவாத்மா அனுபவம் பரமாத்மா அனுபவம் இரண்டையும் சேர்த்து மூன்றாக்கினார். ஞானியின் பெருமை விவரித்துப் பேசப்பட்டது.

**ஏழாம் அத்தியாயம் முற்றும்.**

# எட்டாம் அத்தியாயம்

*"ஞானீது ஆத்மைவ மே மதம்"* என்ற இடத்தில் சில அர்த்தங்களை அனுபவித்துக் கொள்ளலாம். பகவான் கண்ணன் தன்னை உதாரனாகச் சொல்லிக் கொள்ளவில்லை. ஆர்த்தர் முதலான நான்கு விதமான அதிகாரிகளைக் கீழே சொன்னா-னல்லவா? அவ்வதிகாரிகள் தன்னிடம் பொருள் முதலிய புருஷார்த்தங்களைப் பெற்றுப் போகிற அவ்வதிகாரிகளை உதாரர் என்கிறான். உலகத்தில் கொடுக்கிறவர்களைத் தான் வள்ளல்கள் என்பார்கள். இங்கு பகவானோ வாங்கிக் கொள்பவர்களை வள்ளல்கள் என்கிறான். இது எப்படிப் பொருந்தும் என்று சந்தேகம் உண்டாகும். இவ்விடத்திற்கு ஆசார்யர்கள் அழகான முறையில் சமாதானம் அருளிச்செய்திருக்கிறார்கள். அதாவது கொடுக்கிறவன் இருந்த இடத்திலிருந்து அழியும் பொருளான தர்மத்தைக் கொடுக்கிறான். வாங்கிக் கொள்கிறவனோ கொடுக்கிறவன் இடம் தேடிச் சென்று அழியாத புண்ணியத்தைக் கொடுக்கிறான். இதனால் கொடுக்கிறவனை விட வாங்குகிறவனுக்கு சிறப்பு. இது மேலாக திருஷ்டாந்தம். இங்கு எப்படி என்றால் பகவானுக்குரிய ஸகல ப்ரதத்வம் என்பதைக் கொடுத்து பிரயோஜனங்களைப் பெற்றுப் போகிறார்கள். பெறுகிறவர்கள் பெறாமலிருந்தால் *"ஸகலபலப்ரதன்"* என்கிற சிறப்பு பகவானுக்கு இல்லாமல் போய்விடும் அல்லவா? அதனால் *வாங்கிக் கொள்பவர்கள் வள்ளல்கள்* என்று உதாரணமாகக் கூறப்பட்டார்கள்.

***பற்பநாபன் உயர்வற உயரும் பெருந்திறலோன்***
***எற்பரன் என்னை ஆக்கிக்கொண்டு எனக்கே தன்னைத் தந்த***
***கற்பகம் என்அமுதம் கார்முகில்போலும் வேங்கடநல்***
***வெற்பன் விசும்போர்பிரான் எந்தைதாமோதரனே.***

(திருவாய்மொழி-2-7- 11)

இவ்விடத்தில் பகவானுடைய வள்ளல் தன்மையை நம்பிள்ளை அழகாக நிரூபிக்கின்றார். *ஔதார்யத்தில் பிரசித்தமாய் இருப்பது கல்பக வ்ருக்ஷம். அதில் வியாவ்ருத்தி சொல்கிறது. அர்த்திகளை உண்டாக்கிக் கொடுக்குமது இல்லையிறே அதுக்கு. சில பிரயோஜ-னங்களைக் கொடுக்குமது அல்லது தன்னைக் கொடுக்குமதில்லையிறே அதுக்கு. தான் போக்கியமாய் அது இருக்குமதில்லையே அதுக்கு.*

*"ஸகலபலப்ப்ரதத்வம்"* என்கிற சிறப்பை எனக்குக் கொடுத்து இவர்கள் (ஆர்த்தர் முதலானார்) என்னிடம் நான்கு விதமான புருஷார்த்தங்களையும் கொள்ளுகிறார்களேயன்றி கொடுக்காமல் அவர்கள் என்னிடம் எதையும் கொள்ள வில்லையே. செய்யாமல் செய்த உதவியாய் இருந்தால் **"*வையகமும் வானகமும் ஆற்றலரிது*"** (திருக்குறள்-101) என்று சொல்லலாம். இங்கு அவ்வாறு சொல்லுவதற்கில்லையே என்ற எண்ணத்தால் அவர்களை உதாரர்கள் என்று சொல்லலாம். இங்கு, தேசிகர்,

> **"ஸகல ப்ரதத்வ லக்ஷணம், பரமௌதார்ய மேவஹி,**
> **மம ஸர்வஸ்வம் ; தச்ச ப்ரதிக்ருதீத்ருஸாபேக்ஷம்**
> **ததபாவே! கதம் ஸ்யாதித்யுக்தம் பவதி" |**

என்று தாத்பர்ய சந்திரிகையில் அருளிச்செய்திருக்கிறார்.

சுபாலோபநிஷத்தில், எல்லாம் பகவானுக்குச் சரீரம் என்று சொல்லப்பட்டிருக்கிறது. இங்கு அர்ஜுனனுக்கு ஓர் எண்ணம். உபநிஷத்துக்களில், எல்லாம் உனக்குச் சரீரமாகவும், நீ ஆத்மாவாகவும் சொல்லப்பட்டிருக்கிறதே, அதை மாற்றி, இங்கு *"ஞானிகள் எனக்கு ஆத்மாக்கள்"* என்று சொல்லுவது எப்படி என்று அபிப்பிராயப்படுகிறான். அதற்குப் பதிலாக, *"அது என் அபிப்பிராயம்"* என்று கருத்துப்பட *"மே மதம்"* என்று பகவான் கூறியிருக்கிறான் என்று ரசமாக ஒரு பொருள். வேறு ஒரு பொருளும் உண்டு. நம்மைப் போல்பவர் அன்ன-பானாதிகளால் தரித்திரிக்கிறோமே அதுபோல் இல்லை ஞானிகள். நம்மாழ்வார் இந்த லோகத்தில் சிலகாலம் இருந்திருக்கிறாரே, இதற்கு என்ன காரணம் என்று ஆசார்யர்கள் ஆராய்ந்திருக்-கிறார்கள். நம்மாழ்வார் தரித்திருந்ததற்குக் காரணம் தரிசனமும் அனுபவமும் கைங்கர்யமும் தான் என்று நிச்சயம் பண்ணியிருக்கிறார்கள்.

> **"*உண்ணும் சோறு பருகுநீர் தின்னும் வெற்றிலையும்***
> ***எல்லாம் கண்ணன் எம்பெருமான்*"**

திருவாய்மொழி-6-7-1

என்று இவருடைய பாசுரமே இதற்குப் போதுமான சான்றாகும். பெரியாழ்வாருக்கு மங்களாசாசனத்தாலே தரிப்பு.

**"ஆழ்வார் எல்லோரையும் போல் அல்லர் ஸ்ரீபெரியாழ்வார்."**

ஸ்ரீவசனபூஷணம் - 250

**"அவர்கட்கு இது காதாசிட்கம். இவர்க்கு இது நித்யம்."**

ஸ்ரீவசனபூஷணம் - 251

**"அவர்களுடைய அழுங்கால் தானே இவர்க்கு மேடாய் இருக்கும்."**

ஸ்ரீவசனபூஷணம் - 252

**"அவர்களுக்கு உபய சேஷத்வத்தையும் அழித்து ஸ்வரூபத்தை குமிழ்நீர் உண்ணப்பண்ணுமது, இவர்க்கு உபய விருத்திக்கும் ஹேதுவாய் ஸ்வரூபத்தைக் கரையேற்றும்."**

ஸ்ரீவசனபூஷணம் - 253

**"பய நிவர்த்தங்களுக்குப் பயப்படுவது, ப்ரதிகூலரையும் அநுகூலராக்கிக் கொள்வது, அதீத காலங்களில் அபதானங்களுக்கு உத்தர காலத்திலே வயிறு எரிவது, ப்ராப்தி பலமும் இதுவே என்பது, அநிமிஷரைப் பார்த்து 'உறகல் உறகல்' என்பதாய்க் கொண்டு இதுதானே யாத்திரையாய் நடக்கும்."**

ஸ்ரீவசனபூஷணம் - 254

**"அல்லாதார்க்கு ஸத்தா ஸம்ருத்திகள். தர்சன அநுபவ கைங்கர்யங்களாலே; இவர்க்கு மங்களாசாசனத்தாலே."**

ஸ்ரீவசனபூஷணம் - 256

என்று இதெல்லாம் ஸ்ரீவசன பூஷணத்தில் விவரிக்கப்-பட்டிருக்கிறது. பகவானுக்கு ஞானியினுடைய சம்பந்தம் இருந்தால் தான் தரிப்பு. இதை தேசிகர், **"ஞானீ து மம ஸ்வரூபஸத்தாஹேதுரிதி ஸ்வபக்தஸ்துதிபர: ச்லோக:"** என்றருளிச் செய்திருக்கிறார். இதரர்கள் பகவானுக்கு அதிசயத்தை உண்டு பண்ணுகிறவர்கள். **"ஐச்வர்யாதிகாமா: ஸர்வ ஏவ மத்ஸ்வரூபஸ்யாதிசயஹேதவ:"** என்பதும் தேசிகருடைய ***தாத்பர்ய சந்திரிகை.*** இந்த உடலில் பிராணனோடு கூடின காற்று இருக்கிறது. ஒரு நிமிஷம் இருந்தால், அது ஸத்தை ஆகும். பகவான் எதனால் ஸத்தை பெற்றிருக்கறானென்றால் ஞானிகளுடைய சம்பந்ததால் தான். பரமாத்ம சம்பந்தம் ஏற்படாமல் போனால் ஞானிக்கு தரிப்பில்லை. "*நம்மைப் பிரிந்தால் எவர்கள் தரிக்க மாட்டார்களோ அவர்கள் நம்மைப் பிரிந்தால் நமக்கு தரிப்பில்லை*" என்று பகவானிருக்-கிறான். இது பகவத் சுவாபவம்.

*"ஸ்வாதீந......ஸ்திதிப்ரவ்ருத்திபேதம்"* என்றிருக்கிற எம்பெருமானை இப்படிச் சொன்னால் எவ்வாறு பொருந்தும் என்று கேள்வி உண்டாகி இங்கு சங்கடங்களெல்லாம் வரும். இவ்விடத்தில் சொல்ல வேண்டிய விஷயங்கள் நிறைய உண்டு. சரித்திரமாகச் சொல்ல வேண்டியதில் குறிப்பாக ஒன்றிரண்டு பார்க்கலாம். அகம்பணன் இராவணனிடம் இராம ப்ரபாவத்தைச் சொன்னது போல யாரும் சொன்னதில்லை. இவ்வாறு சொன்ன அகம்பணன் இராமனுக்கு உயிரான சீதையைத் திருட்டுத்தனமாக அபகரித்தால் அந்த இராமன் போய் விடுவான் என்று சொல்லியிருக்கிறான்.

"இராவணஸ்ய புநர்வாக்யம் நிசம்ய ததகம்பந: |
ஆசசக்ஷே பலம் தஸ்ய விக்ரமம் ச மஹாத்மந: ||
(வா.ரா.ஆ.கா.31-14)

நைவ தேவா மஹாத்மாநோ நாத்ர கார்யா விசாரணா |
சரா ராமேண தூத்ஸ்ருஷ்டா ருக்மபுங்கா: பதத்ரிண:" ||
(வா.ரா.ஆ.கா.31-18)

ஸர்பா: பஞ்சாநநா பூத்வா பக்ஷயந்தி ஸ்ம ராக்ஷஸான் |
யேந யேந ச கச்சந்தி ராக்ஷஸா பயகர்சிதா: ||
(வா.ரா.ஆ.கா.31-19)

தேந தேந ஸ்ம பச்யந்தி ராமமேவாக்ரத: ஸ்திதம் |
(வா.ரா.ஆ.கா.31-20)

ச்ருணு ராஜன் யதாவ்ருத்தம் ராமஸ்ய பலபௌருஷம் ||
(வா.ரா.ஆ.கா.31-22)

ஸம்ஹ்ருத்ய வா புநர்லோகாந் விக்ரமேண மஹாயசா: |
சக்த: ஸ புருஷவ்யாக்ர: ஸ்ருஷ்டும் புனரபி ப்ரஜா: ||
(வா.ரா.ஆ.கா.31-26)

ந ஹி ராமோ தசக்ரீவ சக்யோ ஜேதும் த்வயா யுதி |
ரக்ஷஸாம் வாऽபி லோகேன ஸ்வர்க: பாபஜநைரிவ ||
(வா.ரா.ஆ.கா.31-27)

ந தம் வத்யமஹம் மந்யே ஸர்வைர்தேவாஸுரைரபி |
அயம் தஸ்ய வதோபாயஸ்தம் மமைகமநா: ச்ருணு ||
(வா.ரா.ஆ.கா.31-28)

**பார்யா தஸ்யோத்தமா லோகே ஸீதா நாம ஸுமத்யமா |**
**ச்யாமா ஸமவிபக்தாங்கீ ஸ்திரீரத்நம் ரத்நபூஷிதா ||**
(வா.ரா.ஆ.கா.31-29)

**நைவ தேவீ ந கந்தர்வீ நாப்ஸரா நாபி தாநவீ |**
**துல்யா ஸீமந்திநீ தஸ்யா மாநுஷீஷு குதோ பவேத் ||**
(வா.ரா.ஆ.கா.31-30)

**தஸ்யாபஹர பார்யாம் த்வம் ப்ரமத்ய து மஹாவநே**
**ஸீதையா ரஹித: காமீ ராமோ ஹாஸ்யதி ஜீவிதம்**

(வா.ரா.ஆ.கா.31-31)

என்ற ச்லோகங்களால் சொல்லியிருக்கிறான்.

இங்கு, "*ஸீதையா ரஹித: காமீ ராமோ ஹாஸ்யதி ஜீவிதம்*" என்ற இந்த வார்த்தைகளை முக்கியமாகக் கவனிக்க வேண்டும். இதில் சீதையை விட்டுப் பிரிந்தால் இராமன் உயிர் விட்டுவிடுவான் என்று கூறியிருக்கிறான். இங்கு பிராட்டியை ஞானியாக வைப்போம். ஆழ்வாரை ஞானியாக வைத்துப் பேசுகிற போது பிராட்டியை அங்ஙனம் வைத்துப் பேசலாகாதா? ஆழ்வாரையும் பிராட்டியாக வைத்துப் பேசுகிற சம்பிரதாயம் உண்டல்லவா. இங்கு ஒரு கேள்வி வரும். பிராட்டியை விட்டுப் பிரிந்து பத்துமாத காலம் பெருமாள் தரித்திருந்தாரே அது எப்படி? இதற்குப் பெரியவாச்சான்பிள்ளை அழகாகச் சமாதானம் அருளிச் செய்திருக்கிறார்.

**"யாம் ஓஷ திமிவ ஆயுஷ்மந் அந்வேஷஸி மஹாவனே"**
(வா.ரா.ஆ.கா.67-15)

என்று பெரிய உடையார் என்ற ஜடாயு பெருமாளுக்கு ஆயுஷைப் பிரார்த்தித்தபடியாலே பெருமாள் உயிர் தரித்திருந்தார். (போகமுடியாது இருந்தார்) என்று சமாதானம் பண்ணினார். ஞானிகளுடைய ப்ரபாவத்தை விரிவாக மேலே சொல்லுகிறான் பகவான். சங்கிரஹத்தில் "*ப்ரபுத்யஸ்ய ஸ்ரைஷ்யம் ஸப்தம உச்யதே*" என்று அருளிச் செய்யப்பட்டிருக்கிறது. தன்னிடத்தில் நித்ய சம்பந்தத்தை எவன் பெற்றிருக்கிறானோ அவனிடம் பகவானுக்குப் பரம ப்ரீதி. மற்ற ஐஸ்வர்யாதிகள் முதலான மற்ற மூவரைக் காட்டிலும் இவனுக்கு என்ன சிறப்பு

என்றால் "*ஏக பக்தி: நித்ய யுக்த:*" என்பவையே. மற்றவர்களுக்கு இவ்வாறு சொல்லுவதற்கில்லை. இழந்த ஐஸ்வர்யத்தைப் பெற்றால் காரணபக்தி போய்விடும். கர்ப்பம் தரித்த பிற்பாடு அரச மரத்தைச் சுற்றுவானேன். இந்திரன் தாயார் குண்டலத்தையும் வருணன் குடையையும் நரகாசுரன் அபகரித்த போது குண்டலம், குடை இவற்றைப் பெறுவதற்கு பகவானுடைய உதவி வேண்டியிருந்தது. பாரிஜாத புஷ்பத்தை பகவான் இந்திரனிடம் கேட்கிற போது இந்திராதி வஜ்ராயுதத்தைக் கொண்டு அவனையே எதிர்த்தனர்.

***"என்னாதன் தேவிக்கு அன்று இன்பப்பூ ஈயாதாள்***
***தன்னாதன் காணவே தண் பூ மரத்தினை***
***வன்னாதப்புள்ளால் வலியப் பறித்திட்ட***
***என்னாதன் வன்மையைப் பாடிப்பற***
***எம்பிரான் வன்மையைப் பாடிப்பற."***

(பெரியாழ்வார் திருமொழி-3-9-1)

என்று பெரியாழ்வார் இவ்வரலாற்றை அருளிச் செய்தார். ஆத்ம ப்ராப்தி காமர்களுக்கு ஆத்மானுபவமாகிற புருஷார்த்தம் கைபுகுந்த பின்பு பகவானிடம் உள்ள ப்ரீதி போய்விடும்.

ஞானிக்குப் பகவான்தான் பலம். அதற்காக பகவானிடம் பக்தி செய்கிறான். அதனால் ஞானிகளிடம் பகவானுக்கு அதிகம் ப்ரீதி. மற்றொரு இடத்தில் ப்ரீதி இருந்தால் அவனிடம் கண்ணனுக்குப் ப்ரீதி இருக்காது. எந்த ஜீவனுக்கு என் ஒருவனிடத்தில் மட்டும் ப்ரீதி உண்டோ? எவன் எப்பொழுதும் என்னோடு சம்பந்தம் பெற்றிருக்கிறானோ, அவன் எனக்கு உயிர். "*வாசுதேவ ஸர்வமிதி ஸமஹாத்மசதுர்லப:*" (7-19) அத்தகைய ஞானி பகவானுக்குக் கிடைக்கவில்லை போலும். இதற்கு இலக்கானவர் ஆழ்வார். "*க்ருஷ்ண த்ருஷ்ணா தத்வம்*" என்று கொண்டாடப் பெற்றவர் ஆழ்வார். ஒரு செவ்வாய் சாரம் முற்பட்டதே என்று பேசும்படி கிருஷ்ணாவதாரத்தோடு நெருங்கியவர். "*பிறந்தவாறும். வளர்ந்தவாறும்*" என்ற திருவாய்மொழி (5-10-1) ஈட்டில் ஆழ்வாருடைய கிருஷ்ணபக்தி பேசப்பட்டிருக்கிறது. "*ஸர்வேச்வரன் கிருஷ்ணனாய் வந்து திருவவதாரம் பண்ணி திருவாய்ப்பாடியில் வளர்ந்தருளா நின்றான்*" என்று கேட்டு, "அங்கே யதா மனோரதம் நமக்கு கலந்து பரிமாறலாம் என்று தெற்கு திருவாசலிலே சென்றுபுக. இப்போது

இங்ஙனே வடக்குத் திருவாசலிலே புறப்பட்டு தன்னுடைச் சோதியேற எழுந்தருளினான் என்று கேட்டு விழுந்து கிடந்து கூப்பிடுகிறார்" என்று பிள்ளான் பணிக்கும் என்று அருளிச் செய்வர். ஆழ்வாருக்குக் கண்ணன் கிடைக்கவில்லை. கண்ணனுக்கு ஞானியான (ஆழ்வார்) கிடைக்கவில்லை. இருவரும் சேர்ந்த காலமாக இருந்தால் அது எப்படி இருந்திருக்குமோ? இனி எட்டாம் அத்தியாயத்தைக் காண்போம்.

ஒன்பதாம் அத்தியாயம் பக்தியைப் பற்றிக் கூறுவதாகும். அதை நட்ட நடுவில் கூறியிருக்கிறான். எட்டாவது அத்தியாயத்தில் சொன்ன விஷயம் பலநாள் சொல்லி அனுபவிக்க வேண்டும்.

**"ஜராமரண மோக்ஷாய மாம் ஆச்ரித்ய யதந்தியே |**
***தே ப்ரஹ்ம தத்விது: க்ருத்ஸ்நம் அத்யாத்மம் கர்ம சாகிலம் ||"***

(7-29)

***"சாதி பூதாதி தைவம் மாம் சாதி யஜ்ஞம் ச யே விது: |***
***ப்ரயாண காலேSபி ச மாம் தே விது: யுக்த சேதஸ : ||"***

(7-30)

இதற்கு வ்யாக்யானம் - ஜரை - மூப்பு தோஷமென்பது லௌகிகம். "*முற்ற மூத்துக் கோல் துணையா*" என்ற திருமொழியில் (1-3) திருமங்கை மன்னன் கூட ஜரையை (மூப்பை) "*இளையாமுன், இளையவர் ஏசாமுன்*" என்று தோஷமாகக் கூறியிருக்கிறார். "*தரியேன் இனி உன் சரணம் தந்து என் சன்மம் களையாயே*" (திருவாய்மொழி-5-8-7) என்ற பாசுரத்தில் மரணம் துக்ககரமானது என்பதை ஆழ்வார் அருளிச் செய்திருக்கிறார். இங்கு சன்மம் களைந்து உன் சரணம் தருவாய் என்று சொல்லாமல், சரணம் தந்து என் சன்மம் களையாயே என்று மாறிக் கூறியதால் மரணபயம் தெரிகிறது. முலை கொடுத்து சிகிச்சை செய்வாரைப் போல முற்பட திருவடிகளைத் தந்து பின்னை சன்ம சம்பந்தத்தை அறுக்க வேணும். "*புண்ணாராக்கையின் புணர்வினையிறே அறுக்கப் புகுகிறது, அதுக்கடியிலே தரிப்பித்துக் கொண்டு பின்னை அறுக்க வேணும் என்கிறார்*" என்ற ஈட்டு வ்யாக்யானம் அனுபவிக்கத் தகுந்தது. இங்குச் சொல்லப்படுகிற (ஆத்மா அனுபவத்தை விரும்பக்கூடியவர்கள்) அதிகாரிகள் ஜிஜ்ஞாசுக்கள் ஆவர். (கீதை-7-30) சாதி பூதாதி தெய்வம் இதனால்

ஐஸ்வர்யார்த்திகள் சொல்லப்பட்டிருக்கிறார்கள். ஏழாம் அத்தியாயம் கடைசியில் கைவல்யார்த்திகளுக்கு

**"கிம் தத் ப்ரம்ம கிம் அத்யாத்மம் கிம் கர்ம புருஷோத்தம |**
***அதி பூதம் ச கிம் ப்ரோக்தம் அதிதைவம் கிமுச்யதே" ||***

(8-1)

என்று சொல்லப்பெறுகின்றது.

ஐச்வர்யார்த்திகளுக்கு அதிபூதம் அதிதெய்வம் இரண்டும் முக்கியம். மூன்று பேருக்கும் (ஐச்வர்ய, கைவல்ய, பகவத் ப்ராப்திகாமர்) அதியக்ஞம் வேணும். எல்லோருக்கும் அந்திம ஸ்ம்ருதி வேணும். ப்ரம்ம சப்தம் புருஷோத்தமனைத் தான் சொல்லும். காளிதாஸன் சிவபக்தனாக இருக்கச் செய்தேயும் புருஷோத்தமன் என்று நாராயணனைக் கூறினான். ஸ்வரூப ப்ருகத்வம் (எங்கும் இருத்தல்) குண ப்ருகத்வம் (குணத்தாலே எங்குமிருத்தல்) என்று ப்ரம்ம சப்தத்திற்குப் பொருள் சொல்லப்படுகிறது. தன் சங்கல்பத்தாலே எல்லாவற்றையும் உண்டு பண்ணுகிறதும், ஞானத்தாலே பெருமையை உண்டு பண்ணுகிறதும் ஸ்ருஷ்டி, ஸ்திதி, சம்ஹாரம் இவை தன் சங்கல்பத்தாலே எல்லாவற்றையும் உண்டுபண்ணுகிற பெருமை யுடைய வஸ்து. ப்ரம்ம சப்தத்திற்குள் இவ்வளவு அர்த்தம் அடங்கியிருக்கிற மாதிரி வேறு பாஷையில் வேறு பதம் கிடையவே கிடையாது. இங்கு இந்த ச்லோகத்தில் ப்ரம்ம சப்தத்தால் ஜீவன் சொல்லப்படுகிறான். இது ஔசீயத்தைப் (சந்தர்ப்பத்தைப் பொறுத்து) பற்ற (ஏற்புழிக் கோடல் என்னும் உத்திப்படி) பரிசுத்த ஜீவன் என்று அர்த்தம். அக்ஷர சப்தம் பரிசுத்த ஜீவனைச் சொல்லும் என்பதற்குப் பல ஆதாரம் உண்டு. அத்யாத்மம் பின்வருமாறு.

காலையில் 10 மணிக்கு உத்தியோகத்திற்குப் போய் மாலையில் ஆறு மணிக்கு வருகிறான். இப்படி 30, 40 வருஷம் வேலை பார்த்த போது வெறுப்பும் ஏற்படுகிறது. சிலருக்கு ஏன் நம்மை வேலையிலிருந்து போகச்சொல்கிறார்கள் என்றும் தோன்றும். இந்த மாதிரி "*பஞ்சாக்னி*" வித்யையில் சொல்லப்பட்டபடி கர்மாநு குணமாகப் பிறந்து கர்மார்ஜுனம் பண்ணிப் புண்ய பாப பலன்களை சொர்க்க நரகங்களில் அனுபவித்து கர்ம சேஷத்தோடு மேக மண்டலத்தில் தங்கி பூமியில் விழுந்து (மழை தாரை வழியாக) ஸ்திரீ

புருஷர்களுடைய வயிற்றில் ஆகாரமாகச் சேர்ந்து ஸ்திரீ புருஷ சம்சர்க்கத்தில் ஸ்திரீ குக்ஷியில் சேர்ந்து மீண்டும் பிறக்கிறான். இதற்கு பஞ்சாக்னி வித்தை என்று பெயர். இது மாதிரி எத்தனை காலம் போய்ப் போய் வந்து கொண்டி- ருக்கிறான். இதுபற்றி மனதில் நன்கு உறைக்க வேண்டும். பூத சூக்ஷ்மங்களோடு தான் போய்ப் போய் வருகிறான். இது "*அத்யாத்மம்*" என்று சொல்லப்படும். மனுஷ்யாதி ஆபத்தை உண்டு பண்ணுகிற கார்யத்திற்கு தான் "*கர்மா*" என்று பெயர். இவை எதற்காகத் தெரியவேண்டுமென்றால் பிறப்பில் ஜுஹுப்ஸை (அருவருப்பு) அடைய கேவலனுக்கு அவச்யம் தெரியவேண்டும். "*ஆசைவாய்ச் சென்ற*" என்ற பெரியாழ்வார் திருமொழியிலும் (4-5), பிற பாசுரங்களிலும் ஜுஹுப்ஸை பிறக்கும்படி ஆழ்வார்களும் பேசியிருக்கிறார்கள். "*மூத்திரப் பிள்ளையை என் முகில்வண்ணன் பேரிட்டு*" (பெரியாழ்வார் திருமொழி-4-6-9) முதலிய வசனங்களும் அவற்றுடன் சேர்ந்தவை. இதனுடைய ஜுஹுப்ஸை மனதில் பட்டால் நடுநடுங்க வேண்டும். பகவானிடம் நாம் எதைப் பிரார்த்திக்க வேண்டுமென்றால் இன்னமும் ஒரு ஸ்திரீயினுடைய குக்ஷியில் நான் போய்ச் சேராமல் இருக்க வேண்டும் என்று பிரார்த்திக்க வேண்டும். ஸ்ரீபாகவதத்தில் கபிலர், தேவஹூதிக்குப் பஞ்சாக்னி வித்தையைப் பற்றி விஸ்தாரமாகச் சொல்லுகிறார். "*கருவிலே திருவிலாதீர்*" என்ற திருமாலைப் ( 11 ) பாசுரத்திலும் காணலாம். ஐச்வர்ய அனுபவம் என்றால் பஞ்ச பூதத்தினுடைய விகாரத்தில் உண்டாகும் அனுபவம் தான். இதுவே சப்தாதி விஷயம் என்று கூறப்படும். இதற்கு "*ஆதிபூதம்*" என்று பெயர். ப்ரம்மாதி தேவதைகளைக் காட்டிலும் உத்க்ருஷ்டனாகவும் அறியவேண்டும். அதியக்ஞம் "*யக்ஞோனவே விஷ்ணு: அங்காநி அந்யா தேவதா:*" சரீரத்திற்கு போஷணம் செய்தால் அது ஆத்மாவிற்குச் சேருவதைப்பாலே மற்ற எந்த தெய்வத்தை ஆராதித்தாலும் நான்தான் ஆராதிக்கப்படுகிறேன். "*ப்ரேதரூபி ஜனார்தந: ப்ரியதாம்* " ப்ரேதத்திற்குச் செய்யக்கூடிய பூஜைகளும் பகவானுக்குப் போய்ச்சேரும் என்பதற்கு வேதவாக்கியம்.

*அந்திமஸ்ம்ருதி, அர்ச்சிராதிகதி* ஆகியவை மோக்ஷோபாய சிந்தனைகள். "*சதுர்விதா பஜந்தேமாம்*" என்கிற ச்லோகம் தொடங்கி எட்டாம் அத்தியாயம் முடிய சங்கதி கூட்டி வாதப்பிரதிவாதம் செய்கிறார் சுவாமி. ஞானிகளைப் பற்றிச் சொல்லுகிற ச்லோகம் எட்டாம் அத்தியாயத்தில் இருக்கிறது.

"அநந்ய சேதா: ஸததம் யோ மாம் ஸ்மரதி நித்யச: |
தஸ்யாஹம் ஸுலப: பார்த்த நித்யயுக்தஸ்ய யோகின: ||"
(7-14)

எந்தவிடத்தில் பகவான் கண்ணன், தன்னை அடைய வேண்டுமென்று பக்தியைச் சொல்கிறானோ அங்கங்கு அநந்ய சப்தம் சொல்லாமல் சொல்லவே மாட்டான்.

***"மாயோம் தீய அலவலை பெருமாவஞ்சப் பேய் வீய
தூய குழவியாய் விடப்பாலமுதா அமுது செய்திட்ட மாயன்"***
(திருவாய்மொழி-1-5-9)

என்ற இந்தப் பாசுரத்திலும்,

***"பொத்த உரலைக் கவிழ்த்து அதன்மேலேறி"***
(பெரியாழ்வார் திருமொழி-1-9-7)

***"எழில்கொள் தாம்புகொண்டடிப்பதற்கு எங்கு நிலையும்"***
(பெருமாள் திருமொழி-7-8)

***"கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான் காணேடீ!"***
(பெரிய திருமொழி-11-5-5)

என்ற இடங்களிலேயும் அநந்ய சப்தத்தை ஆழ்வார் விவரித்திருக்கிறார்.

" ஐச்வர்யாக்ஷர யாதாத்ம்ய பகவத் சரணார்த்திநாம் |
வேத்யோ பாதேய பாவாநாம் அஷ்டமே பேத உச்யதே ||"

என்பது கீதார்த்த சங்கிரஹ ச்லோகம்.

**எட்டாம் அத்தியாயம் முற்றும்.**

# ஒன்பதாம் அத்தியாயம்.

பகவான் ஸ்ரீ பார்த்தசாரதி எட்டாம் அத்தியாயத்தில் ஐச்வர்யத்தை அடைய விரும்புகிறவன், பரிசுத்த ஜீவாத்மாவை அனுபவிக்க விரும்புகிறவன், பரமாத்மாவை அனுபவிக்க வேணும் என்றிருக்கிறவர்கள் இவர்களுக்கு வேண்டியவற்றை அருளிச் செய்தான். இந்த அத்தியாயத்தில் பக்தியை முக்கியமாக வெளியிடுகிறான் என்பது சாரம். நாலு வர்ணம், நாலு ஆச்ரமம், அந்தந்த வர்ண ஆச்ரமத்திற்குத் தகுந்தாற்போல் "*நான், எனது*" என்கிற அபிமானமில்லாமல் பகவான் நாராயணனுடைய திருவுள்ளம் உகக்கும்படியாகச் செய்யும் செயலுக்கு "*கர்மயோகம்*" என்று பெயர். இப்படி நெடுகின காலத்தில் கர்மயோகம் செய்தால் மனதும் பரிசுத்தம் அடைகிறது. இவ்வாறு பரிசுத்தி அடைந்த மனதில் தன்னுடைய ஆத்மாவை த்யானம் செய்வதற்கு "*ஸ்திதப்ரக்ஞதை*" என்று பெயர். அதற்குமேல் தைலதாரை போல் இடைவிடாமல் பரமாத்மா நாராயணனிடத்தில் நெஞ்சை வைத்து அன்போடு சிந்திக்கிற சிந்தனை பக்தியாகும். கர்மயோகம் குஹ்யம் ஆத்ம சிந்தனம் (ஞானயோகம்), குஹ்யதரம், பரமாத்ம சிந்தனம் (பக்தியோகம்) குஹ்யதமம் என்று முறையை இங்கே வைத்துக் கொள்ளவேண்டும்.

**" இதம் து தே குஹ்யதமம் ப்ரவக்ஷ்யாமி அனஸூயவே |**
**ஜ்ஞாந விஜ்ஞாந ஸஹிதம் யஜ்ஜ்ஞாத்வா**
**மோக்ஷ்யஸேSசுபாத் ||"**

(9-1)

என்று அர்ஜுனனுக்கு உபதேசிக்கத் தொடங்குகிறான். பக்தி யோகத்தைச் சொல்வதற்கு முன்,

**"ராஜவித்யா ராஜகுஹ்யம் பவித்ர-மித-முத்தமம் |**
**ப்ரத்யக்ஷாவகமம் தர்ம்யம் ஸுஸுகம் கர்த்துமவ்யம் ||"**

(9-2)

என்று தொடங்கி அதன் ப்ரபாவத்தைச் சொல்லுகிறான்.

**"அச்ரத்ததாநா: புருஷா தர்மஸ்யாஸ்ய பரந்தப |**
**அப்ராப்ய மாம் நிவர்த்தந்தே ம்ருத்யு ஸம்ஸார வர்த்மநி ||"**

(9-3)

இதற்கு நம்பிள்ளை அருளிச்செய்யும் வ்யாக்யானம்.

"அச்ரத்ததாநா: புருஷா: விச்வாஸ பூர்வகத்வராரஹிதரா னவர்கள். "அஸ்ய தா்மஸ்ய" என்றானிறே. தனக்கும் இனிதாயிருக்கை யாலே. "பரம்தப" விரோதி வர்க்கத்தை உதற வல்லாய் நீயன்றோ. அப்ராப்யமாம் நிவர்த்தந்தே. செயத குற்றங்களை அடையப் பொறுத்துத் தங்களை நல்வழிப் போக்கும் என்னை விட்டு, தந்தாமுடைய விநாசத்தைச் சூழ்ப்பதான ஸம்சாரத்தை விரும்பி அவ்வழியே போகா நிற்பர்கள். இதுதான் இருந்தபடி பாராய் என்கிறான்.

*ப்ரதயக்ஷாவகமம் - ந மாம்ஸ சக்ஷுரபி வீக்ஷதே தம்* என்கிற நான் ப்ரதயக்ஷ பூதனானவன். தா்ம்யம் - நம்மைக் காண்கை. ஒருதலை-யானால் அதா்ம்யமானாலும் மேல்விழவேணும். இது அங்ஙனன்றிக்கே, தா்மாத் அநபேதமுமா யிருக்கும். ஸுஸுகம் கா்த்தும் ஸ்மா்ததவ்ய விஷய ஸாரஸ்யத்தாலே தாமும் போகரூபமாய் இருக்கும். அவ்யயம் - கோலின பலன்களைக் கொடுக்கச் செய்தேயும் ஒன்றும் செய்யாதோமாய் நம் நெஞ்சிலே கிடக்கையாலே தான் முதலழியாதே கிடக்கும் "

(பிறவித்துயரற-திருவாய்மொழி 1-7)

"*அஸ்ய தர்மஸ்ய அஸ்ரத்ததாநா:*" பக்திக்கு இட்டுப் பிறந்தவர்களுக்கு பக்தி இனிக்கும். அப்படியன்றி இதற்கு இட்டுப் பிறவாதவனுக்கும் கூட இந்த பக்தி போகத்தைச் சொல்லிக் கேட்கிற-போது இனிப்பாயிருக்கும் என்பது ரசமான பாகம். இந்த வேப்பங்-குடிநீரை குடிக்கத்தான் இப்பாடு பட்டது என்று சம்பிரதாயத்தில் சொல்லுவதுண்டு. "*ஸ்மர்யமாண அத்யர்த்த ப்ரியத்வேண ஸ்வயமபி அத்யர்த்தப்ரியா யஸ்ய*" என்று நம் ஸ்வாமி ஸ்ரீபாஷ்யத்தில் பக்தியை அருளிச் செய்திருக்கிறார் நினைக்கப்படும் வஸ்து அத்யர்த்த ப்ரிய தமமாய் இருந்தால் அதைப் பற்றி நினைக்கும் நினைவும் அர்த்யர்த்த ப்ரியமாக இருக்கும் என்றபடி. இப்படிப்பட்ட போக ரூபமான என்னைப் பற்றிய நினைவை ஸம்ஸாரிகள் செய்வதில்லை. அதனால் ஸம்சாரத்தில் சுழன்று வருவார்கள்.

"*நிதராம் வர்தந்தே நிவர்த்தந்தே*" - ஸம்ஸாரத்தில் என்றும் இருக்கிறார்கள் என்று பொருள். இனி தன்னுடைய பரத்வத்தைச் சொல்லுகிறான். ஞானிகளைப்பற்றிச் சொல்லுகிறான். மீண்டும் பக்தியைப் பற்றி நாம் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயங்களைச் சொல்லுகிறான்.

**"ஸ்வ மாஹாத்ம்யம் மநுஷ்யத்வே பரத்வம்ச மஹாத்மநாம் |**
**விசேஷோ நவமே யோகோ பக்தி ரூப: ப்ரகீர்த்தித: ||"**

என்பது சங்கிரஹ ச்லோகம்.

*ஸ்வமாஹாத்மியம்* என்றாலும் *ஸ்வயாதாத்மியம்* என்றாலும் ஒன்றுதான். ஏழாம் அத்தியாயத்திலும் தன் பரத்வத்தை அருளிச் செய்திருக்கிறான்.

**"மயா ததமிதம் ஸர்வம் ஜகதவ்யக்தமூர்த்தினா |**
**மத்ஸ்தாநி ஸர்வபூதாநி ந சாஹம் தேஷுஅவஸ்த்தித: ||"**

(9-4)

**"ந ச மத்ஸ்தாநி பூதாநி பச்ய மே யோகமைச்வரம் |**
**பூதப்ருந் ந ச பூதஸ்தோ மமாத்மா பூதபாவன: ||"**

(9-5)

என்று தொடங்கி, கிருஷ்ணன் பெருமை (மாஹாத்மியம்) சொல்லப்படுகிறது.

**அபாணிபாத: ஜவனேக்ரிஹீதா, பஸ்யதி**
**அசக்ஷு: சஸ்ருமனோதி கர்ண: ..... 1**

**ஹிரண்யச்மச்ரு: ஹிரண்யகேச: ஆப்ரணகாத்**
**ஸர்வ ஏவ ஸ்வர்ண: |**
**தஸ்ய யதா கப்யாசம் புண்டரீகமேவம்**
**அக்ஷிணீ: தஸ்ய உதிதி நாம || ..... 2**

என்பது வேத வாக்கியங்கள். இங்குச் சொல்லப்பட்ட இரண்டு வேத வாக்கியங்களுக்கும் விரோதம் தெரிகிறது. இதற்கு சமாதானமாவது கண், காது இல்லை என்பதற்கு கர்மாநுகுணமாக ஸம்சாரிகளுக்கு உண்டாகிறது போல இல்லை. அப்ராக்ருதமாக உண்டு என்று பொருள். ஏவம் அக்ஷிணீ என்பதற்கு "*ஸகச்ராக்ஷ ஸகச்ரபாத்*" என்ற இடத்தில் ஆயிரம் கால்களுக்கு என்ன சக்தியோ அதுவுண்டு. ஆனால் கண்கள் இரண்டுதான் என்று பொருள். ஆதிசங்கரரே சில இடங்களில் "*அப்ராக்ருத திவ்ய மங்கள விக்ரஹம்*" என்று வ்யாக்யானம் பண்ணியிருக்கிறார். "*ஜன்ம கர்மச மே திவ்யம்*" என்ற கீதா ச்லோகத்தில் உள்ள "*திவ்ய*" சப்தத்திற்கு சங்கரர் அர்த்தம் செய்கிற பொழுது, "*திவ்யம் அப்ராக்ருதம் ஐச்வரம்*" (4 - 9) என்று பொருள் சொல்லியிருக்கிறார்.

**"பச்யமே பார்த்த ரூபாணி சதசோsத ஸஹஸ்ரச: |**
**நாநாவிதாநி திவ்யாநி நாநாவர்ணாக்ருதீநிச ||"**

(11-5)

இந்த ச்லோகத்திலும் "*திவ்ய*" சப்தத்திற்கு ஆதிசங்கரர் வ்யாக்யானம் பண்ணும்பொழுது "*திவி பவாநி திவ்யாநி*" "*அப்ராக்ருதாநி*" (11-5) என்று கூறியிருக்கிறார். இவ்வாறு விரோத பரிகாரத்தைக் காணவேண்டும்." *ஜகத வ்யக்த மூர்த்திநா*" என்ற இடத்தில் மூர்த்தி சப்தம் ஸ்வரூபத்தை உணர்த்துகிறதே யொழிய விக்கிரகத்தை உணர்த்தவில்லை. "*மயாததம்*"- *பாலில் வெண்ணெய் பரந்தாற்போல் பரந்திருத்தல்.* இதுதான் நாராயண சப்தார்த்தம். கீதையில் நாராயண சப்தம் இல்லாமற் போனாலும் அதன் அர்த்தம் உண்டு. இவ்விடத்தில் அதைத்தான் வெளியிடுகிறான். பிரபஞ்சத்தில் உள்ள பொருள்களில் ஒன்று விடாமல் எல்லாவிடத்திலும் நான் பரந்திருக்கிறவன். அவைகள் என்னிடத்தில் இருக்கின்றன. "*மயாததம்................ அவஸ்தித:*" என்று கூறுவதைப் பார்த்தால் விரோதம் தோன்றுகிறது. "*நசாஹம் தேஷூவஸ்தித்:*"- *என்னுடைய ஸ்திதி அவைகளின் அதீனமில்லை* என்று அர்த்தம். அதாவது அவைகள் இட்ட வழக்காக நான் இல்லை என்றபடி. இது சுவாமியின் பரிகாரம். ஜீவாதீநஸ்திதி சரீரத்திற்கு உண்டு. சரீராதீனஸ்திதி ஜீவனுக்கும் உண்டு. ப்ரேத சரீரம் சரீரமே சான்று என்று சுவாமி நிர்வாகம் பண்ணியிருக்கிறார். ஆகவே ஜீவன் இல்லையென்றால் சரீரம் இல்லை என்றே அர்த்தம். **இதுபோல எல்லாப் பொருளிலும் அவன் இருக்கிறான். அவன் சம்பந்தமில்லை என்றால் வஸ்துவே எதுவுமில்லை. இதுதான் விசிஷ்டாத்வைத சாரம்**. அவனைத் தவிர உலகமில்லை என்பது அத்வைதம். **அவனுமுண்டு; உலகமுமுண்டு; அவன் சம்பந்தமில்லாமல் எதுவும் இல்லை என்பது விசிஷ்டாத்வைதம்.** ஜீவனிட்ட வழக்காக சரீரம் இருந்தாலும் கூட சுகாநுபவத்திற்கு சரீரம் அவசியம் ஜீவனுக்கு உண்டு. சரீராபேக்ஷை ஜீவனுக்கும் உண்டு. போக மோக்ஷங்களுக்கு சரீரம் அவசியம் வேண்டுமே. "*அசித்விசேஷண*" என்று கூறுகிறபடி "*சிறகொடிந்த பக்ஷி போலே கிடக்கும் ப்ரளயாவஸ்தை*" என்று தான் சொல்லவேண்டும். இதைப்போலே ப்ரம்மத்திற்கு சிதசித்துக்களாலே ஏதாவது ஏற்படுவதுண்டா? என்றால் இல்லை.

குடத்தில் ஜலம் இருக்கிறது. எப்படி ஜலத்தைக் குடம் தாங்குகிறதோ அப்படி பகவானிடத்தில் எல்லாம் இருக்கிறது என்று நினைக்கக்கூடாது. அவன் சங்கல்பத்தாலே தாங்குகிறான். இவ்விஷயத்தை பின்னால் பகவானே வ்யாக்யானம் செய்யப்

போகிறான். "*ந ச மத்ஸ்தாநி பூதாநி*" என்பதற்கு குடம், பால், ஜலம் இவற்றைத் தாங்குகிற மாதிரி பகவான் சிதசித்துக்-களைத் தாங்கவில்லை. தன் சங்கல்பத்தால் தாங்குகிறான் என்று பொருள். மேஜைக்கு முன்னால் உட்கார்ந்து கையை மேஜைமேல் வைத்துக் கொள்கிறோம். அப்பொழுது கைக்கு மேஜை ஆதாரமாக இருக்கிறது. மேஜையிலிருந்து கையை எடுத்து நேராக உயர்த்துகிறோம். அப்பொழுது கைக்கு ஆதாரமாயிருப்பது எது? என்றால் நம்முடைய சங்கல்பரூபஞானம் காரணம். அந்த ஞானத்திற்கு கர்மா காரணம். எம்பெருமானுக்கோ சங்கல்பத்தால் தரிப்பது என்பது சுபாவமானது. ஆகாசத்தில் பக்ஷி சஞ்சரிப்பதற்கு ஆதாரம் அதன் சங்கல்பம். ஜலத்திற்குள் மீன் சஞ்சரிப்பதற்கும் அவன் அதற்குக் கொடுத்த சங்கல்பம் தான்.

**"யதாSSகாச-ஸ்திதோ நித்யம் வாயு: ஸர்வத்ரகோ மஹாந் |**
**ததா ஸர்வாணி பூதாநி மத்-ஸ்தாநீத்-யுபதாரய ||"**

(9-6)

என்ற இந்த ச்லோகத்தால் கீழ்க்கூறிய பொருளைத் தெரிவிக்கிறான் பகவான். மேகோதையத்திற்குப் பகவத் சங்கல்பம் காரணம். *அலை கரைகடந்து வராததற்கும் அவன் சங்கல்பம் தான் காரணம்.*

***"நம்பிதன் ஆணையாலே,***
***ஏற்றம் தொடங்காக் கடலின் தனிவெய்தி நின்றான்"***

அயோத்தியாகாண்டம் - நகர் நீங்கு படலம்-137

என்று *அலை கரை கடவாமல் இருப்பதற்குக் காரணம் பகவத் சங்கல்பம்* என்பதைக் கம்பனும் கூறினான். எல்லாப் பொருளிலும் நான் இருக்கிறேன். என் இருப்புக்கு அவை காரணமில்லை. காரணம் அவை என் சங்கல்பத்தினால் இருக்கின்றன என்று தன்னுடைய பெருமையை இவ்வாறு பகவான் தெரிவிக்கின்றான். எல்லாவற்றையும் தன் சங்கல்பத்தினால் தரிக்கிறான் என்றால், அவனுடைய பெருமை எப்படிப்பட்டது!

<u>மனுஷ்யத்வே பரத்வம்:</u>

**"அவஜாநந்தி மாம் மூடா மாநுஷீம் தநுமாச்ரிதம் |**
**பரம் பாவமஜாநந்தோ மம பூதமஹேச்வரம் ||"**

(9-11)

இது முதலான ச்லோகங்களால் மனுஷ்யனாய் இருக்கும் நிலையிலேயே தன் மேன்மையைத் தெரிவிக்கின்றான். ஸாக்ஷாத் பகவான் கிருஷ்ணன் அஸ்தினாபுரத்திற்கு தூதனாக எழுந்தருளின- பொழுது விதுரர் பேரானந்தத்தாலே பரவசமாகிறார். துரியோதனனோ பகவானை ஒரு அறையில் விட்டுப் பூட்டி விட வேணும் என்று யத்தனம் பண்ணுகிறான். அவர் அப்படி இருப்பதற்கும் இவன் இப்படி இருப்பதற்கும் காரணம் என்ன- வென்றால் அவர் கண்ணனைப் பரம்பரம் என்று அறிந்திருந்தார். இவன் இடையன் என்று எண்ணியிருக்கிறான். அதனால் அவன் செயல் அவ்விதம் அமைந்தது. உயர்ந்த வஸ்துவிற்கு லக்ஷணம் என்னவென்றால் பரத்வ ஸௌலப்யங்கள் ஆகும். "*தூதுபோ*", "*தேரோட்டு*" என்று சொல்வதைச் செய்வதும் தன் விஸ்வரூபத்தைக் காட்டுவதும் ஆகும். பரத்வ ஸௌலப்யங்கள் எங்கு இருக்கின்றதோ அவ்வஸ்து தான் மேலான தத்வம். ஸ்ரீபாகவதத்தில், ஸௌலப்ய குணத்தைத் தொகுத்து,

**"சாரத்ய-பாரஷத-சேவன-சக்ய-தௌத்ய**
**வீராசனானுகமனஸ்-தவன-ப்ரணாமான் |**
**ஸ்னிக்தேஷுபாண்டுஷு ஜகத்பரணதிம் ச விஷ்ணோர்**
**பக்திம் கரோதி ந்ருபதிஸ்சரணாரவிந்தே ||"**

பாகவதம் - 1-16-16

என்று கூறியிருக்கிறார்.

பூதமகேச்வரன் - ஈஸ்வரர்களுக்கும் ஈஸ்வரன். பூதங்களுக்கும் ஈஸ்வரர்களுக்கும் ஈஸ்வரன். அங்கு மேன்மை சொல்லப்- பட்டது. *அவஜானந்தி மாம்* என்ற இடத்தில் *மாம்* என்ற சப்தத்தால் *ஸௌலப்யம்* சொல்லப்படுகிறது.

**"கையும் உழவுகோலும் பிடித்த சிறுவாய்க் கயிறும் சேனாதூளி தூசரிதமான திருக்குழலும் தேருக்குக் கீழே நாட்டின திருவடிகளுமாய் நிற்கிற சாரத்ய வேஷத்தை "*மாம்*" என்று காட்டுகிறான்"**

என்ற முமுக்ஷுப்படி சூர்ணையும், இந்த மாம் சப்தத்திற்கு வ்யாக்யானமாக அருளிச்செய்த "*குறைவொன்றுமில்லாத கோவிந்தா*" என்பதற்கு "*மாமேகம்*" என்றவன் பாசுரமன்னோ? "கடையாவும் கழிகோலும் கையிலே பிடித்த கண்ணிக் கயிறும் கற்றுத் தூளியாலே தூசரிதமான திருக்குழலும் மறித்துத் திரிகிற

போது திருவடிகளிலே கிடந்து ஆரவாரிக்கின்ற கழல்கள் சதங்கைகளும் குளிர்முத்தின் கோடாலமுமாய் நிற்கிற உபாய வேஷத்தை கோவிந்தா என்கிறார்கள்" என்கிற அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் வ்யாக்யானம் (கற்றுக்கறவை) அனுபவிக்கத் தகுந்தது.

வெள்ளியை வெள்ளியாக அறிகிறது ஒருபுறம் இருக்கட்டும். வெள்ளியைச் சிப்பியாக அறிகிறானே அதற்கு என்ன காரணம் என்றால் அதற்கு "*பேதஅக்ராஹகம்* " என்பர். வேற்றுமை அறியாமை என்பது இதன் பொருள். அதாவது சிப்பிக்கும் வெள்ளிக்குமுள்ள வேறுபாடு அறியாமை என்க. "*சாதாரண தர்மம்*", "*பொதுத்தன்மை*" - இந்த இரண்டிலும் வித்தியாசம் தெரிந்து கொள்ள முடியவில்லை. பகவான் என்ன சொல்லுகிறானென்றால் தன் திருமேனி மனுஷ சரீரம் எப்படி இருக்குமோ அப்படி இருக்கிறது என்கிறான். இது சாதாரண ஆகாரம். மானுஷம் தநும்-மனுஷ சரீரம் போன்றுள்ள சரீரம். இது அப்ராக்ருதம். ப்ராக்ருதம் அன்று என்று பேதக்ராஹ-மில்லாமல் பேத அக்ராஹம் இருக்கிறது துரியோதனனுக்கு. இதனால் துரியோதனனும் அவனைச் சேர்ந்தவர்களும் பகவானிடத்தில் எண்ணக் கூடாததை எண்ணினார்கள். அவனோ பூதமகேச்வரன் பரத்வம் உடையவன். அவனுடைய உண்மைத்-தன்மை வெள்ளியை வெள்ளியாக அறியும் தன்மை துரியோதனனுக்கு இல்லை. அவனை மனுஷ்யனாகவே கருதினான். அதனால் பரிபவத்தை உண்டுபண்ண எண்ணினான். பகவான் எந்த உருவத்தோடிருந்தாலும் பரத்வ குணத்தோடு கூடியேயிருக்கிறான். "*கற்றுக்கறவை*" என்ற பாசுரத்தில் இவ்வாறு அர்த்தம் கூறப்பட்டிருக்கிறது. அவன் சம்பந்தத்தாலே கன்றுகள் இளகிப் பதிக்கின்றன. "*வத்ஸ மத்ய கதம்பாலம்*" "*கன்று மேய்த்து இனிதுகந்த காளாய்*" என்னும் வாக்கியங்களில் அவன் சம்பந்தத்தால் பசுக்கள் இளமையாகவே இருக்கின்றன என்று சொல்லப்பட்டன.

**"மஹாத்மாநஸ்து மாம் பார்த்த தைவீம் ப்ரக்ருதிமாச்ரிதா: |**
**பஜந்தி அநந்ய மநஸ: ஜ்ஞாத்வா பூதாதிமவ்யயம் : ||"**
(9-13)

**"ஸததம் கீர்த்தயந்தோ மாம் யதந்தச்ச த்ருட வ்ரதா: |**
**நமஸ்யந்தச்ச மாம் பக்த்யா நித்யயுக்தா உபாஸதே ||"**
(9-14)

என்கிற ச்லோகங்களால் ஞானியினுடைய பெருமையைச் சொல்லுகிறான். *"தேஷாம் ஞானி நித்யயுக்த: ஏக பக்திர் விசிஷ்யதே"* (7-17) என்று கீழே கூறிய அர்த்தத்தையே பரிஷ்காரம் செய்து கொண்டு போகிறான் என்று பௌனருக்த்யம் வாராமல் பரிஷ்காரம் செய்கிறார்கள்.

<u>**நமஸ்கார தத்துவம்:-**</u>

மனசு, புத்தி எல்லாம் பணியும்படி சாஷ்டாங்கமாக ப்ரணாமம் செய்யவேண்டும். *"தெய்வீம் ப்ரக்ருதி மாஸ்ருதா: தஸ்மாத் சாஸ்த்ரம் பரமாணம் தே கார்யா கார்ய வ்யவஸ்திதௌ"* (16-24) தர்மங்கள் வலிய வ்யவஸ்திதி பண்ணுகிற போது காலத்தை அனுசரித்து தர்மத்தை இப்படி வைத்துக்கொள்ள வேண்டியது தான் என்று நிர்ணயம் செய்வதற்கு யார்க்கும் அதிகாரம் இல்லை. பகவான் நாராயணனுக்குத்தான் அதிகாரம் உண்டு. தர்ம நிர்ணயம் பண்ணுகிறவர்கள் உன்னையே எடுத்துக் காட்டி சாஸ்திரம் இப்படிச் சொல்கிறது. இருந்தாலும் இன்னும் பல பெரியோர்களிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளுங்கள். நியமிக்க நான் அதிகாரியில்லை என்று சொல்லவேண்டும். பூரண ஞானவான்கள் இப்படித்தான் சொல்லுவார்கள். இவர்கள்தாம் மஹாத்மாக்கள் (மஹாத்மானஸ்து)

*"ஸததம் கீர்த்தயந் தோமாம்"* (9-14) என்றவிடத்திற்கு பண்டிட் லக்ஷ்மணாசாரியார் என்பவர் வ்யாக்யானம் செய்வாராம். ஸததம் - வீணையோடு கூடினவனாக நாரதாதிகளைப் போலே எப்பொழுதும் கீர்த்தனம் பண்ணிக் கொண்டிருப்பவன். பகவத் கைங்கர்யத்துக்கு உபயோகமாக எப்பொழுதும் கைங்கர்யம் செய்து கொண்டிருப்பவன். இந்தச் சரித்திரம் உடையவன்தான் மஹான். *"நவமேயோகோ பக்திரூபப்ருகீர்தித:"* என்ற சங்கிரஹ வாக்கியத்திற்கு விசேஷ வ்யாக்யானம்.

**"மந்மநா பவ மத்பக்தோ மத்தியாஜீ மாம் நமஸ்குரு |**
**மாவேவைஷ்யஸி யுக்த்வைவம் ஆத்மாநம் மத்பராயண: ||"**
(9-34)

மனதைக் கண்ணனிடத்தில் வைக்க வேண்டும். அவன் திருவடிகளில் பூஜையைச் செய்யவேண்டும். எவன் மனதை

அவனிடத்தில் வைத்து தைலதாரைபோல இடைவிடாது நினைக்கிறானோ அவன் என்னுடைய பக்தன்.

கயிற்றில் அரவு போல, சிப்பியின் வெள்ளிபோல, அஜ்ஞானத்தால், ப்ரம்மத்தினிடத்தில் ப்ரபஞ்சம் தோற்ற மளிக்கிறது. "*அயமாத்மா ப்ரம்ஹ*", "*தத் த்வமஸி*" , "*அஹம் ப்ரஹ்மாஸ்மி*" முதலான வாக்கியங்களிலிருந்து ஞானம் ஏற்பட்டால் அந்த அஜஞானம் போய்ப் ப்ரம்மமே நிலைத்து நிற்கும். இது அத்வைத சாரம். இங்கு நம் ஸ்வாமி கர்மா சத்தியம் - கர்மமடியாக உண்டான சரீரம் சத்யம். சுக துக்கங்கள் சத்தியம். அஜ்ஞானம் போய் பகவானை அடைய நாலு வாக்கியத்தால் ஏற்படுகிற வாக்யார்த்த ஞானம் கிடையாது. பக்தி மார்க்கம்தான் மோக்ஷ சாதனம் என்று நிரூபித்திருக்கிறார். இது விசிஷ்டாத்வைத சித்தாந்தம். ப்ரம்ம சூத்திரத்திற்கு ஆதிசங்கரர் வ்யாக்யானம் செய்யும்போது ஆதியில் மங்களாசரணம் பண்ணவேயில்லை. லோகத்தில் பொதுவாக ஒருவர் ஒரு நூலை ஆரம்பிக்கிறபொழுது அந்நூல் தடையில்லாமல் பூர்த்தியடையவேண்டும் என்பதற்காகவும், இஷ்ட தேவதா நமஸ்காரத்தைக் கட்டாயம் ஆசரிப்பார்கள். "*மங்களாதீனி*" என்ற லக்ஷணப்படி பாஷ்யகாரர் முதன் முதலில்,

**"அகில புவந ஜந்ம ஸ்தேம பங்காதி லீலே**
**விநத விவித பூத வ்ராத ரக்ஷைக தீக்ஷே |**
**ச்ருதி சிரஸி விதீப்தே ப்ரஹ்மணி ஸ்ரீநிவாஸே**
**பவது மம பரஸ்மிந் சேமுஷீ பக்திரூபா ||"**

ஸ்ரீபாஷ்யம் - மங்கள ஸ்லோகம்

**"பாராசர்யவசஸ்ஸுதாம் உபநிஷத்துக்தாப்திமத்யோத்ருதாம்**
**ஸம்ஸாராக்னிவிதீபநவ்யபகதப்ராணாத்மசஞ்சீவிநீம் |**
**பூர்வாசார்யசுரக்ஷிதாம் பஹுமதிவ்யாகாததூரஸ்திதாம்**
**ஆநீதாம் து நிஜாக்ஷரை: ஸுமனநஸோ பௌமா: பிபந்யந்வஹம். ||"**

ஸ்ரீபாஷ்யம் - மங்கள ஸ்லோகம்

திருவேங்கடமுடையான் விஷயமாக மங்களா சரணத்தைச் செய்து பாஷ்யத்தை ஆரம்பிக்கிறார். சங்கரர் மங்களாசரணம் செய்யாததற்கும் இவர் செய்ததற்கும் காரணங்களை ச்ருதப்பிரகாசிகாசார்யர் விசாரித்திருக்கிறார். பாமதி-அத்வைத வ்யாக்யானம். நமஸ்காரம், நமஸ்காரத்திற்கு

தெய்வம், நமஸ்கரிக்கிறவன் என்ற மூன்றும் வந்துவிடும். அத்வைதம் போய்விடும். அதனால் அவர்கள் சொல்லவில்லை. நமஸ்கரிக்கிறவன் தாழ்ந்தவன். நமஸ்கரிக்க விஷயமாய் இருப்பவன் உயர்ந்தவன் என்று இப்படியெல்லாம் பேதம் வந்துவிடும். ஆகவே நமஸ்காரம் சொல்லப்பட வில்லை என்று அங்கு பாமதி வ்யாக்யானம் செய்கிறார். ஆத்மா ஒன்றுதான் உண்டு என்று இருக்கிற சித்தாந்தத்தில் நமஸ்காரம் என்பதற்கு இடமேயில்லை. ஆகையால் சொல்லவில்லை அவர்கள்.

பகவான் ஸ்ரீகிருஷ்ணன் மோக்ஷ மார்க்கத்தைச் சொல்லுகிறபோது, என்னை நமஸ்காரி, என்னை பக்தி பண்ணு என்று உபதேசித்திருக்கிறான். அத்வைதிகளுக்கு ஞானமார்க்கம் தான் அதுவும் கீழ்க்கூறிய நான்கு வாக்கியங்களால் ஏற்படும் ஞானம். ஸ்ரீராமாநுஜ சித்தாந்தத்தில் பக்தியே ப்ரதானம் என்று கூறப்படுகிறது. ஆகவே, சங்கரர் சொல்கிற ஞான-மார்க்கத்தைக் கண்டித்து பக்தி மார்க்கத்தைப் போதிக்கிறார் ஸ்வாமி. மோக்ஷ சாதனம் பக்தி என்பது ஸ்ரீகண்ணன் உபதேசம். அதற்கு அப்படியே வ்யாக்யானம் செய்கிறார் இராமாநுஜர்.

**ஒன்பதாம் அத்தியாயம் முற்றும்.**

# பத்தாம் அத்தியாயம்

பகவான் ஸ்ரீபார்த்தசாரதி 9ம் அத்தியாயத்தில் பக்தியைப் பற்றி ஆச்சரியமாக அருளிச் செய்திருக்கிறான். "*மன்மனா பவ மத்பக்த: மத்யாஜீ மாம் நமஸ்குரு*" என்பது கடைசி ச்லோகம். பரிசுத்தமான மனதை எம்பெருமானிடம் வைத்து சிந்திக்கும் சிந்தனை பக்தி. அவன் திருவடிகளில் புஷ்பங்களை இட்டு அர்ச்சிப்பது யாசனம். "*மத்பக்தஸ்ஸன் மாம் யாஜீ. மத்பக்தஸ்ஸன் மாம் நமஸ்குரு*" என்று ஸ்வாமி இங்ஙனம் அருளிச் செய்திருக்கிறார். இவ்வாறு செய்தால் தன்னை வந்து அடையலாம் என்பதை "*மாமேவைஷ்யஸி*" என்று கூறியிருக்கிறான். பக்தியைப் பற்றித் தெரிந்து கொள்ளும் போது சில விஷயங்களைக் கவனிக்க வேண்டும். உபநிஷதர்த்தங்களை ஆசார்யன் உபதேசிக்கிறபொழுது பரமாத்ம ஞானம் உண்டாகும். அவன் சொன்னபடி பரிசுத்த ஆசனத்தில் அமர்ந்து பகவானுடைய ஸ்வரூப ரூப குணங்களை அன்புடன் தைலதாரைபோல ஸ்மரிக்க ("*கற்று ஈண்டு*" திருக்குறள்-256) வேண்டும். வேறு விஷயம் கலக்கக் கூடாது. இந்த நிலை பக்தி ஆகும். இந்த அர்த்தத்தைத்தான் நம் ஸ்வாமி "*மன்மனாபவ*" என்ற ச்லோகத்திற்கு அர்த்தமாக அருளிச் செய்திருக்கிறார். 10ஆம் அத்தியாயத்தில் சொல்கிற விஷயங்களை,

**"ஸ்வகல்யாண குணாநந்த்ய க்ருத்ஸ்ந ஸ்வாதீநா மதி: |**
**பக்த்யுத்பத்தி விவ்ருத்த்யர்த்தா விஸ்தீர்ணா தசமோதிதா ||"**

என்று *சங்கிரக ச்லோகம்* தெரிவிக்கிறது. பக்திக்குத் தடையாய் இருக்கும் பாபங்கள் போனால் பக்தி வளரும். அதற்காக பகவானுடைய கல்யாண குணங்களையும் தன்னை ஒழிந்த சகலமும் தன்னதீனமாக இருக்கிறான் என்பதையும் அவனுடைய சிறப்பையும் உள்ளபடி எவன் அறிகின்றானோ அவனுக்குப் பாபம் போகும்; பக்தி வளரும் என்ற இவ்வர்த்தத்தைச் சாரமாக ஆளவந்தார் அருளிச் செய்கிறார் சங்கிரக ச்லோகத்தில். பகவானிடத்தில் கல்யாண குணங்கள் ஒன்றிரண்டில்லை. அவன் கணக்கற்ற குணங்களை உடையவன் என்று வேதாந்தங்கள் கூறுகின்றன. பகவானுடைய ஆனந்தம்

என்கிற கல்யாண குணத்தை அளவுபடுத்தி அனுபவிக்க வேண்டுமென்று வேதமானது *"சைஷாநந்தஸ்ய மீமாம்ஸா பவதி"* என்று தொடங்கி பிரம்மானந்த பர்யந்தம் சென்று, *"யதோ வாசோ நிவர்தந்தே", "அப்ராப்ய மனஸா ஸஹ"* என்று ஆனந்த குணத்தை அளவிடமுடியாமல் மீண்டுவிடுகிறது என்பது வேத வாக்கியத்திலிருந்து தெரிகிறது. இப்படி அவனுடைய கல்யாண குணங்களைப் பற்றித் தெரிந்து கொள்ளுகிறபொழுது பாபம் அகலும். ஒரு புருஷன் ஒரு ஸ்திரீயை விவாகம் செய்து கொண்டு குழந்தைகளும் உண்டாகி குடும்பம் நடத்தும்போது பத்தினியோ குழந்தைகளோ இவனுக்கு அதீனமாய் இருப்பர் என்று சொல்லமுடியாது. கர்மாவைப்பற்றித் தான் அது அமைந்திருக்கிறது. இவன் சரீரம் தான் இவனுக்கு அதீனமாய் இருக்கிறதோ என்றால் அதுவுமில்லை. *"யாவையும் யாவரும் தானாம் அமைவுடை நாரணன் மாயையை"* திருவாய்மொழி-1-3-9 என்றபடி தன்னைமொழிந்த ஸகல பொருள்களையும் தனக்குச் சொத்தாக உடையவன் எம்பெருமான் என்று நாம் அவனைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டும். இப்படியறிந்தால் பக்திக்கு விரோதியான பாபம் விலகும்.

இனி பத்தாம் அத்தியாயத்திலுள்ள சில ச்லோகங்களைக் கொண்டு விஸ்தாரமாக இதன் அர்த்தத்தை அனுபவிக்கலாம்.

ஒன்பதாம் அத்தியாயத்தில் பக்தியைப்பற்றிச் சொல்லும் போது, அர்ஜுனா, நீ அசூயை இல்லாதவனாய் இருக்கிறாய். அதனால் மிகமிக ரகசியமான இந்த பக்தி யோகத்தை உனக்குச் சொல்லுகிறேன் என்று கூறியிருக்கிறான். *"அசூயா"* என்ற சப்தத்திற்கு எது பொருள் என்று தெரிய வேண்டும். பிறரிடத்தில் உள்ள குணங்களை குணமாக எண்ணாமல் தோஷமாக எண்ணுவதுதான் அசூயை என்று அசூயா சப்தத்திற்கு பொருள் கூறப்பட்டிருக்கிறது. *"குணேஷு தோஷாऽவிஷ்கரணம் அசூயா"* என்பது அதன் இலக்கணம். நம் சமூகத்தில் இப்படிப்பட்ட அசூயை இல்லாமல் இருக்கிறது என்பது மிக மிக துர்லபம். இதைத் திருவள்ளுவர்,

***"அழுக்கா றெனவொரு பாவி திருச்செற்றுத்***
***தீயுழி உய்த்து விடும் "***

திருக்குறள் - **168**

என்று மிகக் கடுமையாகக் கூறியுள்ளார். அசூயை இல்லாமல் ஒருவன் இருந்தால் அவன் நிச்சயமாக பகவானுடைய நிர்ஹேதுக

கிருபைக்குப் பாத்திரமாயிருக்க வேண்டும். கிருஷ்ணாவதாரத்தில் சிசுபாலாதிகள் கண்ணனுடைய குணங்களில் அசூயைப்பட்டு அழிந்து போனார்கள். வில்லிபாரதத்தில் சிசுபாலன் கண்ணனிடம் அசூயைப் படுவதை மிக அழகாகக் கூறியுள்ளார்.

*பிச்சைநுகரும் இவன் நமக்கு முன்னே பூசை பெறுவானாந்*
*சச்சை மறையின் முறையென்னாந் தருமன் புரிந்த மகமென்னாந்*
*செச்சை வடிவேன் முடியரசர் செங்கோலென்னாந் திருவென்னாம் "*

இராயசூயச்சருக்கம் -114

*"பூபாலர் அவையத்து முந்பூசை பெறுவார் புறங்கா னில்வாழ்*
*கோபாலரோ?என்று உறுத்து அங்கதிர்த்து கொதித்தோதினான்*
*காபாலி முனியாத வெங்காமன் நிகரான கவினெய்தியேழ்*
*தீபா லடங்காத புகழ்வீர கயமன்ன சிசுபாலனே"*

இராயசூயச்சருக்கம் -115

*"சூரன் குலத்தோர் குபேரன் குலத்தோர் சுடர்பாவகப்*
*பேரன் குலத்தோர்கண் முதலோர் இருந்தார்கள் பெயர் பெற்றபேர்*
*வீரன் கொலோ? வாகு சாரங்கொலோ? செல்வ மிச்சங்கொலோ?*
*பூரம்பு ராசிப் புவிக்கென்று முதுவோர்கள் பொதுவோர்கொலோ"*

இராயசூயச்சருக்கம்-116

*"பராசர முனிவன் மதலை யாம்படியே பகர்ந்தனை பழுதிலா மாந்தும்*
*இரணமண்டலத்தின் மரபினால் வலியால் ஏற்றதும் தோற்றதும் உடையோன்*
*அரசுரர் வியக்கும் கஞ்சனை மலைவான் சூரன் மாமகன் வயிற்று தித்தான்*
*தராதல மிசையே பிறந்து இவன்கற்றது எத்தனை இந்திர சாலம் "*

இராயசூயச்சருக்கம்-117

*"சொற்றவா நன்று சுகன்திருந் தாதை! சூதிகைத் தோன்றிய பொழுதே*
*பெற்றதாய் தாமும் பிதாவும்முன்வணங்கப் பேசலா உருவெலாம் பேசிக்*
*கற்ற மாயையினால் கன்னி அங் கிருப்பக் காரிருள் காளிந்தி நீந்தி*
*அந்நைநாள் அண்ட ரானவர்க் கெல்லாம் அரசனுக்கு அருமக வானான் "*

இராயசூயச்சருக்கம்-118

*"ஈன்றதாய் வடிவங் கொண்டு உளமுருகி*
*இணைமுலைத் தடத்தணைத்து அமுதம்*
*போன்ற பால்கொடுப்பப் பொறிமுலைப் பாலோ*
*பூதனை உயிர்கெலோடுகர்ந்தான்*
*சான்றபேர் உரலால் உதிதொறும்*
*எட்டாத் தயிருடன் நறுநெய் பாலருந்தி*
*ஆன்றதாய் கண்டு வடத்தினில் பிணிப்ப*
*அணி உரலுடன் இருந்து அழுதான் "*

இராயசூயச்சருக்கம்-119

"பாடினான் மருதுபெரு நகைவிளைப்ப பாவையர்
மனைதொறும் வெண்ணெய்க்கு
ஆடினான் ;அவர்கள் முகந்தொறும் எச்சில்
ஆக்கினான் ; கன்றுமுன் கோட
ஓடினான் ; ஆவின்பேரினங்களை
உயிருடன் ஒருதனி விளவில்
சாடினான் ; அரவின்முதுகையும் புள்ளின்
தாதுவோடு அலகையும் பிளந்தான் "

இராயசூயச்சருக்கம்-120

"பின்னிய குஞ்சிக் கோவலர் மயந்த
பேதையர் பலரையும் கனிந்த
கன்னியின் மருங்கும் ஓரையின் மருங்கும்
கலையெலாம் நாணிடக் கவர்ந்தே
முன்னிய இன்பச் செருக்கிலே மயங்கி
முரிவில் காமனு மானான்
அன்னியன் அல்லன் ; மற்றுஇவன்
பெருமை அரசரில் யார்அறியாதார் "

இராயசூயச்சருக்கம்-121

"அண்டர்க்கெல்லாம் அரசான ஆகண்டலனுக்கு அண்டரினிது
உண்டற்கு அமைத்த பால்அடிசில் உண்டான் ஒருநாள் ஒருதானே
கொண்டல்கல் மாரியை முன்னம் கோவர்த் தனமே குடையாகச்
சண்டப் பிரசண்ட வேகமுடன் தடுத்தான் ஏறு மடுத்தானே."

இராயசூயச்சருக்கம்-122

மம்பிப் பரந்த புல்மேயும் பசுவின் கன்றும் கோபாலர்
தம் புத்திரரும் அம்புயத்தோன் தன் மாயையினால் ஒளித்திடும் நாள்
அம்புத்திரரும் அக்கோவின் இளங்கன்றினமும் எனத் தெரிய
வம்பிற்புரிந்த மாயையிவனல்லால் யாவர் வல்லாரே

இராயசூயச்சருக்கம்-123

"அதிரப் பொரும் போர் அஞ்சினனோ? அஞ்சாமை கொலோ? தெரியாது ;
மதுரைப் பதியும் தன்கிளையும் வாழ்வும் துறந்து வாரிதிவாய்
எதிர்ஒப் பில்லாத துவாரகை என்று இயற்பேர் படைத்தமாநகரில்
முதிரப்பொரும்போர்த்தும் முன்னுடன் இருந்தான் மன்னான் முரண்அறுத்தே"

இராயசூயச்சருக்கம்-124

"கஞ்சனொடும் மாமனொடு காளையமர் செய்தான் ;
வஞ்சனையி னாலமரும் எத்தனை மலைந்தான்?
தஞ்சமென வேமருவு தமரில் ஒருதானே
மிஞ்சி விரகால் உரிய மேதினி புரந்தான் "

இராயசூயச்சருக்கம்-125

***"அன்னையும் தாதை தானும் அருஞ்சிறை அகத்து வைக
முன்இரு மூவர் முன்னோர் தங்களை முடிக்கு வித்தான்
பின்னொரு தமையன் தன்னைப் "பெந்த தாய் இருவர்" என்றுஎன்று
இந்நிலம் சொல்ல வைத்தான் ; இவனை வேறு யாவரொப்பர்"***

இராயசூயச்சருக்கம் -126

***"என்றுகொண்டு எண்ணி நாவுக்கு இசைந்தன உரைக ளெல்லாம்
ஒன்றின்ஒன்று உச்சமாக உயர்ச்சியும் தாழ்வும் தோன்ற
கன்றிய மனத்தினோடும் கட்டுரை செய்தான் மன்றல்
தென்றலஞ் சோலைசூழும் சேதிநாடுடைய கோவே"***

இராயசூயச்சருக்கம் -127

பகவான் அர்ஜுனனைப் பார்த்து, நீ அசூயை என்ற தீய குணம் இல்லாதவனாயிருப்பதால் உனக்கு, நீ கேட்காமலேயே இருக்க, நானே வலிய வந்து பக்தியினுடைய உண்மைகளை யெல்லாம் சொல்லுகிறேன். உனக்கு என்னிடம் ப்ரீதி வேறு இருக்கிறது கேட்பாயாக என்று,

***"பூய ஏவ மஹாபாஹோ ச்ருணு மே பரமம் வச: |
யத்தேSஹம் ப்ரியமாணாய வக்ஷ்யாமி ஹிதகாம்யயா ||"***

(10-1)

என்று பக்தியைப் பற்றிச் சொல்ல ஆரம்பிக்கிறான். "ஹித காம்யயா" இங்கு நம் ஸ்வாமியின் வ்யாக்யானம் அனுபவிக்கத் தகுந்தது. *"மத்பக்தி உத்பத்தி விவ்ருத்திரூப ஹிதகாமநயா* என்று அருளிச் செய்திருக்கிறார். *"மஹாபாஹோ ப்ரியமாணாய"* என்று இவ்விரண்டு சப்தங்களையும் சேர்த்துப் பார்க்கிற பொழுது ஒரு அர்த்தம் தோன்றுகிறது. தோள் பலம் உடையவர்க்கு பிறர் புகழைக் கேட்பது பொறுக்காது. நீயோ தோள் பலம் உடையவனாயும் இருக்கிறாய். என் புகழைக் கேட்பதில் என்னிடத்தில் விருப்பமுடையவனாயும் இருக்கிறாய். ஆகையினால் உனக்கு பரமஹிதமான அர்த்தத்தைச் சொல்லுகிறேன். மேலும் சத்ருக்கள் இரண்டு வகைப்பட்டிருப்பர். பாஹ்யசத்ரு ஆந்தரசத்ரு என்று அடித்தல், வைதல், தீங்கிழைத்தல் போன்றவை பாஹ்யசத்ருக்கள் செயல்கள் எனப்படும். செவி, வாய், கண், மூக்கு இவை ஆந்த்ரசத்ருக்கள் எனப்படும். இந்த இரண்டு வகையான சத்ருக்களில் முன்னவைகளை அழிப்பதற்குத் தோள் பலம் வேண்டும். பின்னவைகளை அழிக்க பகவத் ப்ரீதி வேண்டும். அவை உன்னிடத்தில இருக்கிறது என்ற பொருளும் இவ்விடத்தில்

கூறப்பட்டுள்ளது. எப்படித் தோள் பலத்தினாலே வெளிச் சத்ருக்களையெல்லாம் நீ வெல்லுகிறாயோ அப்படியே ஆந்தர சத்ருக்களையும் என்னிடத்தில் உண்டான ப்ரீதியினாலே வெல்கிறாய். நீ இத்தகைய சிறப்புடையவனாயிருப்பதால் "*ஏ அர்ஜுனா! நீ நல்ல சத்பாத்திரமாய் விளங்குகிறாய். ஆகையால் பக்தியோகத்தை உனக்குச் சொல்லுகிறேன்*" என்கிறான் பகவான். "*உண்ணிலாவிய*" என்ற திருவாய்மொழியில் இந்திரியங்களின் கொடுமையைப் பார்த்து ஆழ்வார் மிகவும் கதறிக் கூப்பிடுகிறார். **"வேதாந்தங்களில் விகித விஷய நிவ்ருத்தி தன் ஏற்றம்"** என்று முறையுடன் பரிமாறும் விஷயத்தையே தோஷமாகக் கூறியிருக்க முறை தவறி நடப்பதைப் பற்றிச் சொல்ல வேண்டுமா? பகவானைத் தவிர மற்ற எதிலும் போக்யதா புத்தி இருந்தால் அது மிகவும் தோஷம். "*விண்ணுளார் பெருமாற்கு அடிமை செய்வாரையும் செறும் ஐம்புலனிவை*" (திருவாய்மொழி-7-1-6) என்று ஆழ்வார் கதறி இருக்கின்றார். ஸ்ரீவைகுண்டத்தில் ஜய விஜயர்கள் த்வார பாலகர்களாக இருக்க சநக சநந்தநாதிகள் என்ற யோகிகள் அவர்களை சபித்ததாகப் புராணத்தில் கேட்கிறோம். சர்ப்பங்களுக்கும் கருடனுக்கும் ஏற்பட்ட பகையிலிருந்து சமாதானம் செய்து கொள்வதாக ஒரு ஒப்பந்தம் நடந்தது. சர்ப்ப லோகத்திலிருந்து கருடனுக்கு ஒரு சர்ப்பம் தருவதாக ஒப்பந்தமானது. ஒரு சமயம் "*ஸுமுகன்*" என்ற பாம்பிற்கு முறை வருகிறது. அப்பாம்பு பகவானிடம் சரணாகதி பண்ணுகிறது. பகவான் அதற்கு அடைக்கலம் கொடுத்தான். தனக்கு ஆகாரமாக ஏற்பட்ட ஸுமுகனை, கருடன் பகவானிடம் கேட்கிறது. பகவான் சரணாகதனை விடமாட்டேன் என்று மறுக்கிறான். அப்பொழுது உன்னைச் சுமக்க மாட்டேன் என்று கருடன் சொன்னதாகவும், பகவான் கருடனுடைய கர்வத்தை அடக்கினதாகவும் ஒரு வரலாறு சொல்வதுண்டு. "*கருடகர்வபங்கம்*" என்று கூட ஒரு சரிதம் சொல்லக் கேட்கிறோம். "திருவடியையும் அகப்பட "எனக்கு" என்னப் பண்ணிற்றிறே, ஸுமுகன் என்கிற ஸர்ப்ப விசேஷம் திருவடிகளிலே சென்று கிட்ட, பெரிய திருவடி ஓடிச் சென்று "எனக்கு ஆமிஷமாயிருக்கிற இத்தைக் கைக்கொண்டு நோக்குவதே! என்று வெறுத்து, "*தேவரீரையும். நாய்ச்சிமாரையும் நெடுங்காலம் வஹித்துக் கொண்டு திரிந்தேன், நான் என் பெற்றேன்?* "என்றானிறே. இதிறே ஸம்சார ஸ்வபாவம் இருக்கும்படி" என்ற நம்பிள்ளை வியாக்கியானம் அனுபவிக்கத் தகுந்தது.

"நஞ்சு சோர்வதோர் வெஞ்சினரவம்
வெருவி வந்து நின் சரணெனச் சரணா
நெஞ்சில் கொண்டு நின் அஞ்சிறைப் பறவைக்கு
அடைக்கலங் கொடுத்து அருள் செய்தது அறிந்து"

(பெரிய திருமொழி-5-8-4)

என்ற திருமங்கையாழ்வார் அருளிச் செய்த பாசுரம் காண-வேண்டும். மஹா பாகவதனான ப்ரஹலாதன் கூட ஒரு சமயம் பகவானையே ஆயுதங்களைக் கொண்டு எதிர்க்க வந்தான் என்று சொல்லப்பட்டிருக்கிறது. கருடனுக்கு பசிக்கொடுமையால் உண்டான இந்திரிய தோஷத்தை கீழ்க்கூறிய வரலாற்றால் பார்த்தோம். எதையும் ஜெயிக்கலாம். பசியை ஜெயிக்க முடியாது. பிறந்ததும் பசி, போனதும் பசி, போனவர்களுக்குக் கூட நாழியாகாமல் பிண்டம் போடவேண்டுமென்று சொல்லுவார்கள். இந்த கருடகர்வ பங்கக் கதையைப் பரிபாடல் என்ற சங்க நூலில்

"ஆயிர அணர்தலை அரவுவாய்க் கொண்ட
சேவ லூர்தியும் செங்கண் மாஅல் !
ஓவெனக் கிளக்கும் கால முதல்வனை
ஏஎஇன கிளத்தலின் இனைமை நுக்கறிந்தனம் "

பரிபாடல்-3-60-63

என்று இவ்வாறு கூறியிருப்பதையும் காணலாம். விண்ணுளார் பெருமானாரான கருடன் முதலானார்க்கு ஞான சக்திகள் அதிகம் உண்டு. அவர்களையே இந்திரியங்களை ஆட்டி வைத்தால் என்னை என் செய்ய மாட்டா? இந்திரியங்கள் தாம் நம் ஆத்மாவைக் கெடுக்கக் கூடியவை. பக்திக்குத் தடையாக இருப்பவையும் அவை. அர்ஜுனன் அவற்றை யெல்லாம் ஜெயித்தவன். தகுந்த அதிகாரி என்று கருதி, பகவான் இவ்விடத்தில் அவனைக் கொண்டாடித் "*தகுந்த அதிகாரியான உனக்கு நான் சொல்லுகிறேன்*" என்று கூறுகிறான். உலகத்தில் ஒருவன் ஒருவனிடம் தன்னுடைய விபவத்தைப்-பற்றி எனக்கு இத்தனை வீடு உண்டு. இத்தனை நிலம் உண்டு. இத்தனை பணம் உண்டு என்று சொன்னால், கேட்கிறவன், ஆ இவனுக்கு இவ்வளவா! என்று பொறாமைப் படுவான். அசூயை உண்டாகும். அர்ஜுனனோ பகவானுடைய பெருமைகளைக் கேட்கின்றபொழுது ஒரு சிறிதும் அசூயை இல்லாதவனாக இருக்கிறான். ஆகவே இவன் நல்ல அதிகாரி. ராஜ்யம்

வேண்டா. ஒன்றும் வேண்டா என்று சொன்னான் அல்லவா. "பூய ஏவ மஹாபாஹோ" என்று தொடங்கி தன்னைப் பற்றிச் சொல்லத் தொடங்குகிறான். தன்னைப் பற்றிச் சொல்லுகிற விஷயத்தில் சங்கோசமில்லாமல் மிக நன்றாகவே சொல்லு-கிறான் பகவான். உலகத்தில் ஒன்றும் தெரியாதவனே போகிற போது (சொல்லுகிறபோது) இவன் சொல்லக்கூடாதா என்ன? அர்ஜுனா என் விஷயத்தைச் சொல்ல என்னைப்போல் எவரும் இல்லை. இந்திரன், பிரம்மா முதலான தேவதைகள் ஸம்சாரிகளாய் இருப்பவர். பிரம்மாவாய் இழந்து போதல் இடைச்சியாய்ப் பெற்றுவிடுதல் செய்யும் படியாய் இருக்கும்.

"பிரம்மாதீனாம் அசுலபம் ஸுலபம் ப்ரஜயோஷிதாம்" என்றும்,

அஹோऽதிதன்யா வ்ரஜகோரமன்ய:
ஸ்தன்யாம்ருதம் பீதமதீவ தே முதா |
யாஸாம் விபோ வத்ஸதராத்மஜாத்மனா
யத்த்ருப்தயேऽத்யாபி ந சாலமத்வரா: ||

பாகவதம் - 10-14-31

அஹோ பாக்யமஹோ பாக்யம் நந்தகோபவ்ரஜௌகஸாம் |
யன்மித்ரம் பரமாநந்தம் பூர்ணம் ப்ரம்ஹ ஸநாதநம் ||

பாகவதம் - 10-14-32

ஏஷாம் து பாக்யமஹிமாऽச்யுத தாவதாஸ்தாம்
ஏகாதசைவ ஹி வயம் பத பூரிபாகா: |
ஏதத்த்ருஷீக சஷகைரஸக்ருத் பிபாம:
சர்வாதயோऽங்க்ர்யுதஜமத்வம்ருதாஸவம் தே ||

பாகவதம் - 10-14-33

தத் பூரிபாக்யமிஹ ஜென்ம கிமப்படவ்யாம்
யத் கோகுலேபி கதமாங்க்ரிரஜோऽபிஷேகம் |
யஜ்ஜீவதம் து நிகிலம் பகவான் முகுந்த -
ஸ்த்வத்யாபி யத்பதரஜ: ச்ருதிமிருக்யமேவ ||

பாகவதம் - 10-14-34

*"பேரே வரப்பியதுந்தலல்லால் எம்பெம்மானை*
*ஆரே அறிவார் அது நிற்க - நேரே*
*கடிக்கமலத்துள்ளிருந்தும் காண்கிலான் கண்ணன்*
*அடிக்கமலம் தன்னை அயன்"*

முதல்திருவந்தாதி-56

***"ஆரே அறிவார் அனைத்துலகு முண்டுமிழ்ந்த***
***பேராழி யான்தன் பெருமையை? - கார் செறிந்த***
***கண்டத்தான் எண்கண்ணான் காணான் அவன்வைத்த***
***பண்டைத் தானத்தின் பதி"***

நான்முகன் திருவந்தாதி - 73

என்பவை முதலான ப்ரமாணங்களால் ப்ரம்மா முதலான தேவதைகளுக்கு எம்பெருமான் பெருமையை அறிய முடியாது என்னாயிற்று.

**"ந மே விது: ஸுரகணா: ப்ரபவம் ந மஹர்ஷய: |**
**அஹமாதிர்-ஹி தேவாநாம் மஹர்ஷீணாம் ச ஸர்வச: ||**

(10-2)

எவன் மூடன் என்றால் கிருஷ்ணனுக்கு ஒத்தவன் உண்டு என்கிறவன்தான். எவன் அவனுக்கு ஒத்தாரும் மிக்காரும் இல்லை என்கிறானோ அவன் அசம்மூடன் என்று அறிய வேண்டும்.

**"யோ மாமஜமநாதிம் ச வேத்தி லோகமஹேச்வரம் |**
**அஸம்மூட: ஸ மர்த்யேஷு ஸர்வபாபை: ப்ரமுச்யதே ||**

(10-3)

என்று கூறுகிறான் பகவான்.

**நாராயணமத அந்யஸ்து தேவைஸ்துல்ய: கரோதிய:**
**தஸ்ய பாபேந லிப்யேயம் யதீயஹம் நாகமே புந:**

***"தழைத்த தண் துளவினோன் தலைவன் அல்லன் என்று***
***அழைத்தவன், அறநெறி அந்தணாளரில்***
***பிழைத்தவன், பிழைப்பிலா மறையைப் பேணலாது***
***இழைத்த வன் பொய் யெழும் இழுதை நெஞ்சினோன்"***

அயோத்தியா காண்டம் - பள்ளிபடைப் படலம் - 100

என்று *"இவரெய்து நரகு என்னதாகவே"* என்று ப்ரமாணங்கள் நாராயணன் பெருமையைக் கூறுகின்றன. தாழ்ந்தவர்களான ப்ரம்ஹாதிகளையும் பகவான் கண்ணனையும் ஒன்றாக எண்ணுவது அஜ்ஞான கார்யமாகும்.

***"தனக்கு உவமை இல்லாதான் தாள் சேர்ந்தார்க்கல்லால்***
***மனக்கவலை மாற்றல் அரிது"***

திருக்குறள் - 7

மற்ற தேவதைகளுக்கும் பகவானுக்கும் ஸாம்யம் இருந்தால் இருவரும் சமம் என்று கூறுவது குற்றமாகாது. சாஸ்திரத்தில் அப்படிச் சொல்லப்படவில்லை. இப்படிப்பட்ட உண்மையை எவன் அறிகிறானோ அவனுக்குத்தான் பக்திக்குத் தடையாயுள்ள பாபம் விலகும்.

**"புத்திர்-ஜ்ஞாந-மஸம்மோஹ: க்ஷமா ஸத்யம் தமச்சம: |**
**ஸுகம் து:க்கம் பவோSபாவோ பயம் சாபயமேவ ச ||"**

(10-4)

**"அஹிம்ஸா ஸமதா துஷ்டிஸ்தபோதாநம் யசோSயச: |**
**பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா: ||"**

(10-5)

இங்கே சொல்லப்பட்ட ஆத்ம குணங்கள் எல்லாம் என் சங்கல்பத்தாலேயே உண்டாகின்றன என்று கூறுகிறான். "*மத்த ஏவ*" என்கிற பகவத் வாக்யம் கூர்ந்து கவனிக்க வேண்டியது. நம் மனத்தைக் கொண்டு பார்க்கிற பொழுது ஒரு புத்தி உண்டாகிறது. பகவான் நாராயணனுக்கு ஒப்பும் உயர்வும் இல்லை என்றறிந்து அவனுடைய குணம், செயல் திருமேனி இவற்றைச் சொல்லிக் கேட்கிறபோது அவன் விஷயமான நினைவு ஏற்படுகிறது. இந்த நினைவு யாராலே ஏற்பட்டது என்றால் நம்மால் என்று சொல்ல நேரும். அதுதான் இல்லை. இந்த நினைவும் கிருஷ்ணனாலேயே ஏற்பட்டது என்று எண்ண வேண்டும். "*நான் எண்ணுகிறேன்*" என்று எண்ணக்கூடாது.

***"உணர்விலும்பரொருவனை அவனதருளால் உறற்பொருட்டு * என்***
***உணர்வினுள்ளே இருத்தினேன் அதுவும் அவனது இன்னருளே"***

திருவாய்மொழி-8-8-3

என்று எண்ணவேண்டும். அந்த அர்த்தத்தைத்தான் "*புத்திர் ஞானம் அசம் மோஹ:*" என்று தான் கூறுகிறான். இந்த ச்லோக வ்யாக்யானத்தில் தேசிகன் அழகாக வ்யாக்யானம் செய்திருக்கிறார். பக்தியும் ஒரு மனோவிருத்தி. அதுவும் பகவானால் உண்டாகிறது என்று எண்ண வேண்டும் என்று காரணத்துடன் உபபாதிக்கிறார்.

**"அபிப்பிராயேபி பாவசப்த ப்ரயோகாத் அத்ர பாவ சப்தஸ்ய மனோவ்ருத்திவிஷயதா ! ஸர்வேஷாம் கர்த்ருகரணாதீனாம் ப்ரவ்ருத்தே: ஸ்வாதீனத்த்வேபி மனோவ்ருத்யுதாகரணம் ப்ராகரணிக பக்திரூப மனோவ்ருத்தேரபி ஸ்வஸங்கல்பமூலத்வஞாபனார்த்தம்**

என்பது தேசிகருடைய திவ்ய சூக்தி. ஆத்ம க்ஷேமம் வேண்டும் என்று விரும்புகிறவன், எது ஏற்பட்டாலும் அது பகவத் சங்கல்பத்தாலேயே ஏற்பட்டது என்று உறுதியாய் இருக்கவேண்டும். இங்கு ஒரு வாதம் ஏற்படும். பகவத் சங்கல்பத்தாலே தான் பக்தி ஏற்படுகிறதென்றால் எல்லோருக்கும் அது ஏற்படட்டுமே என்று இதற்கு சமாதானம் சொல்லியிருக்கிறார்கள். அந்த சமாதானம் நம் மனதில் பட வேண்டும். நமக்குக் கொண்டி வழக்கு பேசுவது சகஜமாயிருக்கிறது. அதனால் சமாதானம் அடைவது கஷ்டம். கீதையிலேயே சமாதானம் பகவான் அருளிச் செய்கிறான். நமக்கு அதைக் கேட்டுக் கிரஹித்துக் கொள்ளத் தகுதி வேண்டும். கிருஷ்ணனுடைய குறைகளைச் சொல்வதில் ஸம்சாரிகளுக்கு எவ்வளவு உற்சாகமோ அவ்வளவு உற்சாகம் குணங்களைக் கிரஹிப்பதில் இல்லை. நம்மாழ்வார் தம்முடைய பூர்வ விருத்தமான ஸம்சாரி நிலையைப் பேசுகிற பொழுது

***"திரிவிக்கிரமன் செந்தாமரைக்கண் எம்மான் என் செங்கனி வாய்***
***உருவில் பொலிந்த வெள்ளைப்பளிங்கு நிறத்தனன் என்றென்று உள்ளிப்***
***பரவிப் பணிந்து பல்லூழி ஊழி நின் பாத பங்கயமே***
***மருவித் தொழும் மனமே தந்தாய் வல்லைகாண் என் வாமனனே"***

திருவாய்மொழி-2-7-7

***"வாமனன் என் மரதக வண்ணன் தாமரைக் கண்ணினன்***
***காமனைப் பயந்தாய் என்றென்று உன் கழல் பாடியே பணிந்து***
***தூமனத்தனனாய் பிறவித்துழதி நீங்க என்னைத்***
***தீமனங்கெடுத்தாய் உனக்கென் செய்கேன் என் சிரீதரனே"***

திருவாய்மொழி-2-7-8

என்றும் அருளிச் செய்திருக்கிறார். இதில் ஆழ்வார் எம்பெருமான் தனக்குச் செய்த உபகார விசேஷத்தை *"என்னைத் தீமனங்கெடுத்தாய். மருவித்தொழும் மனமே தந்தாய்"* (திருவாய்மொழி-2-7-7 & 8) என்று அருளிச்செய்திருக்கிறார். இவ்வபிப்பிராயத்தை ஸ்ரீவசனபூஷணத்தில், "ஞானவான்கள் "இன்றென்னைப் பொருளாக்கித்

***தன்னை என்னுள் வைத்தான்"* , *"எந்நன்றி செய்தேனா எந்நெஞ்சில் திகழ்வதுவே"* , *"நடுவே வந்து உய்யக்கொள்கின்ற நாதனை"*, *"அறியாதன அறிவித்த அத்தா நீசெய்தன அடியேன் அறியேனே"*, *"பொருள் அல்லாத என்னைப் பொருளாக்கி அடிமை கொண்டாய்"*, *"என்னைத் தீமனங் கெடுத்தாய்"* , *"மருவித் தொழும் மனமே தந்தாய்"* என்று ஈடுபடா நிற்பர்கள் "** (சூத்திரம்-384) என்றும்,

**"பாஷ்யகாரர் காலத்திலே ஒருநாள் பெருமாள் புறப்பட்டருளுந் தனையும் பார்த்துப் பெரிய திருமண்டபத்துக்குக் கீழாக முதலிகள் எல்லோரும் திரளவிருந்த அளவிலே இவ்வர்த்தம் ப்ரஸ்துதமாக, பின்பு பிறந்த வார்த்தைகளை ஸ்மரிப்பது"** (சூத்திரம்-385) என்றும், **"ஆகையால் அஜ்ஞாதமான நன்மைகளையே பற்றாசாகக் கொண்டு கடாக்ஷியா நிற்கும்"** (சூத்திரம்-386) என்றும் அருளிச் செய்த விஷயங்களை விரிவாக அனுபவிக்கலாம்.

"*மனத்துக்கினியான்*" என்றும், "*ராமோத்விர்நாபி பாஷதே*" என்றும் "*நடையில் நின்று உயர் நாயகன்*" என்றும் போற்றப்-பெறுகிற இராமபிரானுக்கே குற்றங்களை ஆரோபிக்கின்ற ஸம்சாரிகள், "*நாவும் இரண்டுள வாய்த்து நாணிலியேனுக்கே*" என்றும், "*ஏலாப் பொய்கள் உரைப்பான்*" என்றும், "*கண்ணன் என்னும் கருந்தெய்வம்*" என்றும் ஏசப்பட்டிருக்கும் கிருஷ்ணனுடைய குணங்களை ஸம்சாரிகள் எங்கே அறியப்போகிறார்கள். இராமாவதாரத்துக்குச் சொன்ன குற்றம், வாலியை மறைந்து நின்று கொன்றான், கரதூஷணாதிகளை அடிக்கிற பொழுது காலைப் பின் நகர்த்தினான், சூர்ப்பனகையிடம் பேசுகிற பொழுது பொய் சொன்னான், என்றிவ்வாறு பல குற்றங்கள். இக்குற்றங்களைக் களைவதற்காகவே இந்திரஜித்தை வதைக்கின்ற பொழுது இளையபெருமாள்,

**"தர்மாத்மா ஸத்யஸந்தச்ச ராமோ தாசரதிர்யதி |**
**பௌருஷே சாப்ரதித்த்வந்த: சரைனம் ஜஹி ராவணிம் ||"**

**(யுத்த காண்டம் - 91-73)**

என்று ப்ரதிக்ஞை செய்து இந்திரஜித்தைக் கொன்றான். கிருஷ்ணாவதாரத்திலோ, பிறர் செய்த குற்றங்களைக் கூடக் கண்ணன் மேல் ஏறிட்டுச் சொல்லுவர்கள்.

***"பல்லாயிரவர் இவ்வூரில் பிள்ளைகள் தீமைகள் செய்வார்***
***எல்லாம் உன் மேலன்றிப் போகாது எம்பிரான் நீ இங்கே வாராய்***
***நல்லார்கள் வெள்ளறை நின்றாய் ஞானச்சுடரே உன்மேனி***
***சொல்லார வாழ்த்தி நின்றேத்திச் சொப்படக் காப்பிட வாராய்"***

பெரியாழ்வார் திருமொழி - 2-8-5

என்று இந்தப் பாசுரத்தில் பெரியாழ்வார் அருளிச் செய்திருப்பதையும் பார்க்கலாம். நம்பிள்ளை ஈட்டில் இவ்விஷயத்தை ஒரு சிறு கதையைக் காட்டி *"போரமெல்லாம் அமணன் தலையோட போம்"* என்று அருளிச் செய்திருக்கிறார். அதாவது, ஒருவன் வீடு கட்டுகிறான். அவ்வீட்டுற்கு மண் பிசைந்து மற்றொருவன் கொடுக்கிறான். மண் பிசைய ஒருவன் நீர் கொண்டு வருகிறான். மண்ணில் நீர் ஊற்றிக் கொண்டி-ருக்கும்போது அவ்வழியாக ஒரு பெண் போவதைப் பார்த்தான். அப்பெண் வண்ணானை நோக்கிப் போய்க் கொண்டிருக்கிறாள். அப்பெண்ணைப் பார்த்துக் கொண்டே மண்ணில் நீர் ஊற்றுகிறவன் அதிகமாக நீர் ஊற்றியதால் மண் நெகிழ்ந்தது. அதனால் வீடு சரிந்து விட்டது. வீட்டுக்காரன் வழக்குத் தொடர்ந்தான். கொத்தனாரைக் கேட்க மண் கொடுத்தவனைச் சொன்னான். மண் கொடுத்தவன் தண்ணீர் ஊற்றியவனைச் சொன்னான். தண்ணீர் ஊற்றியவன் வழியில் போன பெண்ணைச் சொன்னான். அவள் வண்ணானைச் சொன்னாள். வண்ணான், துறையில் கல்லின் மீது தவத்திலிருந்த அமணனைச் சொன்னான். அவ்வமணனை, அரசன் முன் கொண்டுவந்து நிறுத்தினான். அவன் பேசாதவன். பேசாததால், குற்றத்தை ஒப்புக்-கொண்டதாகத் தீர்மானித்து அரசன் தண்டித்தான். அமணனுக்குத் தலை போயிற்று என்பது சிறுகதை.

<u>கிருஷ்ணாவதாரத்தில் ஒருகதை</u> :

சத்ராஜித் என்கிற ஓர் அரசன். அவனிடம் செமந்தக மணி என்ற ஒரு விசேஷ மணி இருக்கின்றது. அந்த மணி தினமும் எட்டு பாரம் தங்கத்தைத் தருவதோடு கூட சகல நன்மைகளையும் கொடுத்துக் கொண்டிருந்தது. ஒரு சமயம் அம்மணியை அவனுடைய தம்பி பிரசேனன் என்பவன் கழுத்தில் அணிந்து கொண்டு வேட்டைக்குச் சென்றான். காட்டில் ஒரு சிம்மம் அவனை அடித்து அம்மணியை எடுத்துக் கொண்டு சென்றது. அதைக் கண்ட அவ்வனத்தில்

வாழும் ஜாம்பவான் அச்சிங்கத்தைக் கொன்று அம்மணியைத் தாம் எடுத்துக்கொண்டு சென்றார். சத்ராஜித்தினுடைய மணியும் தம்பியும் காணாமற் போனதைக் கண்டு அவன் அம்மணியைக் கண்ணன் தான் அபகரித்துத் தன் தம்பியையும் கொன்றிருக்க வேண்டுமென்று பழி சாற்றினான். இவ்வாறு இல்லாத குற்றத்தைத் தன்மேல் ஆரோபிக்கவே அதை இல்லையென்று நிரூபிப்பதற்காகப் பட்டணத்து ஜனங்கள் எல்லோரையும் அழைத்துக் கொண்டு வனத்திற்குச் சென்று நடந்ததை அறிவுறுத்தி ஜாம்பவானோடு யுத்தம் செய்து சொந்தக மணியையும் ஜாம்பவதியாகிற பெண்மணியையும் பெற்று வருகிறான். இவ்வாறு கிருஷ்ணாவதார விருத்தாந்தத்தில் பலவிடங்களைக் காணலாம். சத்ராஜித் என்பவன் பகவான் மேல் குற்றம் சாட்டியதுபோல ஸம்ஸாரிகளும் பகவானிடம் குற்றங்களைச் சொல்லுகிறார்களேயன்றி அவன் குணங்களைச் சொல்லுவது மிக அருமை ஆகும். இதுதான் மனத்தீமை. இவன் மனதை ஸம்ஸாரியினுடைய இத்தீமையைத் திருத்த எவ்வளவோ பாடுபடுகிறான். இவன்தான் அவன் முயற்சிக்கு அகப்படாமல் தப்புகின்றான். "*நின்ற ஆதிப்பிரான் நிற்க மற்றைத் தெய்வம் நாடுதிரே*" (திருவாய்மொழி 4-10-1) என்று தப்பியோடுகின்ற ஜனங்களைப் பார்த்து ஆழ்வார் உபதேசிக்கிறார். கிருஷ்ணாவதாரத்தில் பகவான் அர்ஜுனனுக்கு சாரத்யமான இழிதொழிலைச் செய்திருக்கிறான். அவனுக்கு சாரத்யம் பண்ணினால் அது கைங்கர்யம் ஆகும். சுமந்திரர் இராமபிரானுக்கு (தேரோட்டுவதற்காக) பதினான்கு வருஷம் சாரத்ய கைங்கர்யம் செய்யலாமென்று பெருமாளோடு கங்கைக் கரைவரை கூடவே புறப்பட்டுப் போனார். ஆனால் பகவான் அதை ஏற்கவில்லை. "*ஆசையா யதிவாராம: புன: சப்தாபயேத் இதி*" என்ற ச்லோகத்தில் இக்கருத்தை வால்மீகி பகவான் உணர்த்தினார். இங்கெல்லாம் பகவானுடைய குணங்கள் எவ்வளவு அழகாக அனுபவிக்கத் தகுந்தனவாய் இருக்கின்றன. அதையெல்லாம் ஸம்சாரிகள் நினைக்கமாட்டார்களே. "ஒன்றும் தேவுமுக்கு"ப்பிறகு உபதேசம் இல்லை. "*ஊரும் நாடும் உலகமும் தன்னைப் போல்*" (திருவாய்மொழி-6-7-2) என்று ஆழ்வார் உபதேசத்தாலே ஸம்சாரம் திருந்தியது. ஆழ்வார் அவதார காலத்தில், பகவதவதாரத்திலோ அப்படித் திருந்தியதாகச் சொல்வதற்கில்லை. அர்ச்சாஸ்தலங்களில் பகவான் எழுந்தருளியிருக்கிறது எதற்கென்றால் ஸம்சாரி சேதனன் நமக்குக் கிடைக்கமாட்டானா என்ற எண்ணத்தோடு

இவனை அடைவதற்காக *"தன்னை அநாதிரிக்கிறவர்களைத் தான் ஆதரித்து நிற்குமிடம்"* என்று அர்ச்சாஸ்தலங்கள் புகழப்படுகின்றன. *"நாகத்தணைக் குடந்தை"* (நான்முகன் திருவந்தாதி-36), *"குறிப்பெனக்குக் கோட்டியூர் மேயானை ஏத்த"* (நான்.திரு.34) *"நின்றதெந்தை ஊரகத்து"* (திருச்சந்தவிருத்தம்-54) முதலான பாசுரங்கள் அர்ச்சாவதார எம்பெருமான் எந்த எண்ணத்தோடு இருக்கிறான் என்பதைத் தெரிவிக்கின்றன. நாம் இருக்கிற இடத்தில் அவன் வந்து கிடக்கிறான். அவனை நாம் சேவிக்கின்ற போது அவனைப் பற்றி நமக்கு எண்ணம் உண்டாகாமல் போகாது. அதுவும் அவனுடைய முயற்சி தானே. பகவான் உற்சவம் கொண்டாடுகிறதும் நம்மை அநுக்ரஹம் செய்வதற்காகவே. ஸம்சாரிகள்தான் நம்மிடம் வரவில்லை. நாமாவது அவர்கள் இருப்பிடம் தேடி செல்வோமென்று வீதிகளில் உலாவுகின்றான். இவர்கள் அப்பொழுதும் வீட்டுக் கதவை அடைத்துக் கொண்டிருந்தால் அவன்தான் என்ன செய்ய முடியும். நம்முடைய க்ஷேமத்திற்கு அவன் க்ருஷி பண்ணவில்லை என்று சொல்ல முடியுமா? அவனுடைய க்ருஷிக்கும் தப்பும்படியான சக்தி நமக்கு இருக்கிறது. நம்பெருமாள் திருநாள் என்று ஒரு பேரையிட்டு ஸ்ரீவைஷ்ணவர்களைத் திரட்டிக் காணுமாப் போலே என்பது திருப்பாவை *(27-கூடாரை)* வியாக்கியானம்.

**"யஸ்ச்ச ராமம் ந பஸ்யேத்து யம் ச ராமோ ந பச்யதி |**
**நிந்தித: ஸ பவேல்லோகே ஸ்வாத்மாப்யேநம் விகர்ஹதே ||"**

(அயோத்தியா காண்டம் - 17 - 14 & 15)

என்ற ஸ்ரீராமாயண ச்லோகத்திலும் இக்கருத்தைக் காணலாம்.

**"தேஷாம் ஸததயுக்தாநாம் பஜதாம் ப்ரீதிபூர்வகம் |**
**ததாமி புத்தியோகம் தம் யேந மாம் உபயாந்தி தே ||"**

(10-10)

பகவானை அன்போடு சிந்திக்கிற சிந்தனை மனோ வ்ருத்தி. அது அவனால் வந்தது. எந்த வஸ்துவாக எதை எண்ணினாலும் அவ்வெண்ணம் கண்ணனுடைய சங்கல்பத்தால் உண்டாவது தான். இவ்வாறு சொல்லக் காரணம் பக்தியாகிற மனோவ்ருத்தி கண்ணனாலே ஏற்படுகிறது என்ற உண்மையைக் குறிப்ப-தற்காகவே. *"எந்தப்பரிபக்குவமான பக்தி இருந்தால் என்னை*

*அடைவார்களோ அந்த பக்தியை நானே கொடுக்கின்றேன்"* என்பதை இந்த ச்லோகத்தினால் குறிப்பிடுகின்றான் பகவான்.

**"தேஷாமேவாநுகம் பார்த்தமஹமஜ்ஞாநஜம் தம: |**
**நாசயாம்யாத்மபாவஸ்தோ ஜ்ஞாநதீபேந பாஸ்வதா || "**

(10-11)

விஷயப்ராவண்யம் என்பது இங்கு "*அஜ்ஞானஜம் தம:*" என்ற சொல்லால் குறிப்பிடப்படுகிறது. இதற்குக் காரணம் ஜென்மாந்திர கர்மம். அது "*அஜ்ஞானஜம்* " என்ற தொடரால் குறிக்கப்படுகிறது. ஆரம்ப தசையிலுள்ள பக்தி என்ன எல்லாம் என்னாலேதான் தரப்படுகின்றன. "ஒரு *நாழிகை நொய்யோடும் போது போய்விடும்*" என்பது உலக வழக்கு. விஷயப் ப்ராவண்யம், வீடு, ஆகாரம், வஸ்த்ரம், பூஷணம் இவை போக்யமாக இருக்க வேண்டும். இவ்வனுபவத்திற்கு குறைவந்தால் உயிர் போவது போன்ற துக்கம் ஏற்படும். இது முன் செய்த வினைப்பயன். இதை "*அஜ்ஞானஜம் தம:*" என்பதால் சொல்லு-கிறான் பகவான். இப்படிப்பட்ட மனசு இருக்கிற பர்யந்தம் பகவானிடம் பூரண பக்தி ஏற்படாது. இதற்கு ஆசாரியர்கள் ஒரு வழி சொல்லுகிறார்கள். ஒரு வாய்க்காலில் ஓடுகிற ஜலத்தைப் பல பாத்திகளிலும் திறந்து வைத்தால் ஒரு பாத்தியிலும் ஜலம் சரியாகப் பாயாது. அதைப் பாழ்பாய்கிறது என்று சொல்வது வழக்கம். எல்லாப் பாத்தியையும் அடைந்து ஒரு பாத்தியை மட்டும் திறந்து வைத்தால் ஒரு மடைஜலமும் அப்பாத்தி நிறைந்துவிடும் இதை "*ஒருமடை செய்வது*" என்று சொல்லுவார்கள். ஜீவாத்மாவிடம் அன்பு என்கிற தீர்த்தம் இருக்கிறது. விஷயப் ப்ராவண்யம், வீடு, ஆகாரம், வஸ்திரம் முதலான மற்ற இடங்களில் அந்த அன்பு நீர் செல்லாமல் அடைத்து கிருஷ்ணனாகிய ஒரே வஸ்துவினிடத்தில் அவ்வன்பு நீரை ஒரே மடை செய்து பாய்ச்ச வேண்டும். புத்ரமித்ராதி வஸ்துத்துக்களிடத்தில் அன்பைச் சேர்க்கக்கூடாது. "*என் அமுதினைக் கண்ட கண்கள் மற்றொன்றினைக் காணாவே*" (அமலநாதிபிரான்-10) என்றபடி அமைய வேண்டும். இந்நிலை ஒருவனுக்கு வரவேண்டுமானால் அவ்வெம்பெருமானுடைய க்ருபையினால் தான் வரவேண்டும். இவ்வர்த்தம் மனதில் படுவதற்காகப் பிள்ளை உறங்காவில்லிதாசருடைய கதையைப் பார்க்கலாம். உடையவர் எழுநூறு ஸந்நியாசிகளுடனும் 74 முக்கிய

சிஷ்யர்களுடனும், பத்தாயிரம் சிஷ்யர்களுடனும், பெரிய கூட்டமாக பெரிய பெருமாளைச் சேவிப்பதற்காக எழுந்தருளும் சமயத்தில் *பிள்ளை உறங்காவில்லிதாசர்* என்பவர் ஒரு ஸ்திரீக்குப் பின்னால் குடை பிடித்துக்கொண்டு போவதை உடையவர் பார்த்தார். சிற்றின்பத்தில் அழுந்திக்கிடக்கும் அவரை நல்வழிப்படுத்த வேண்டுமென்று நினைத்து அவரை அழைத்துக் கேட்கிறார் "*ஒரு பெண் பின்னால் குடைபிடித்துக் கொண்டு செல்கிறீரே. வெட்கம் இல்லையா*" என்று. அதற்கு அவர் சொல்கிறார், "*சுவாமி. அவள் மிகுந்த கண்ணழகு உடையவள், சூர்ய வெப்பம் பட்டால் அக்கண்ணழுகுக்கு வாட்டம் வந்து விடும் என்று இவ்விதம் செய்கிறேன்*" என்று கூறினார். "*நீர் கண்ணழகில் ஈடுபட்டிருக்கிறீரே, அப்படியானால் இதைக் காட்டிலும் உயர்ந்த கண்ணழகை நான் காட்டுகிறேன், நீர் ஈடுபடுவீரா?*" என்றார் உடையவர். "*இவளைக் காட்டிலும் கண்ணழகிற் சிறந்தார் யாருமில்லை, அப்படி இருந்தால் நீர் காட்டும் பார்ப்போம்*" என்றார் அவர். உடையவரும் அவரை அழைத்துக் கொண்டு பெரிய பெருமாளிடம் சென்று

***சூதனாய்க்கள்வனாகித் தூர்த்தரோடு இசைந்த காலம்***
***மாதரார் கயல் கண்ணென்னும் வலையுள் பட்டு அழுந்துவேனை***
***போதரே என்று சொல்லி புந்தியுள் புகுந்து * தன்பால்***
***ஆதரம் பெருக வைத்த அழகனூர் அரங்கமன்றே"***

திருமாலை-16

என்று தொண்டரடிப்பொடி ஆழ்வாரையும்,

***"கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி *நீண்ட அப்***
***பெரியவாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே"***

அமலநாதிபிரான்-8

என்று "*திருப்பாணாழ்வாரை முன்பு உம்முடைய கண்ணழகினால் ஈடுபடுத்தினீரே. பெரிய பெருமாளே! இன்று இந்தப் பிள்ளை உறங்காவில்லிதாஸரையும் உம்முடைய கண்ணழகைக் காட்டி ஈடுபடுத்திக் கொள்ளும்* " என்று பெரிய பெருமாளைப் பார்த்து பிரார்த்தனை பண்ணினார். உடையவருடைய ப்ரார்த்தனையைக் கேட்ட பெரிய பெருமாளும் தம்முடைய "*நீண்ட அப்பெரியவாய கண்களை*"க் காட்டி பிள்ளைஉறங்காவில்லி-தாஸரைத் தம் வயப்படுத்திக் கொண்டார். இப்படியே மற்ற

ஆழ்வார்களுடைய சரித்திரங்களையும் உதாரணமாகப் பார்க்கலாம். "*ஆத்ம பாவஸ்த:*" என்றவிடத்திற்கு ஸம்சாரிகளுக்குண்டான விஷயப் ப்ராவண்யம் முதலான தோஷம் போக நாம் நம்மை அவர்களுக்குக் காட்டி பக்தியை உண்டு பண்ணுகிற க்ரமத்தைச் சொல்லுகிறான். இது எதற்காக விவரணம் பண்ணப் பட்டதென்றால் பகவத் பக்தி பகவானால்தான் உண்டு பண்ணப்படுகிறதென்று தெரிவதற்காக "*மாற்பால் மனம் சுழிப்ப மங்கையர் தோள் கைவிட்டு*" (மூன்றாம் திருவந்தாதி-14) என்றும் "*பரமாத்மனி யோ ரக்த: விரக்த: அபரமாத்மனி*" என்றும் வருகின்ற மேற்கோள்களை இதற்கு உதாரணமாகக் கொள்ளலாம்.

அர்ஜுனன் தன்னிடம் கேட்ட பிற்பாடு அவனுக்குத் தன் பெருமையைச் சொல்ல வேண்டும் என்று கண்ணனுடைய அபிப்பிராயம். அதற்காக முதலில் இப்படிச் சில விஷயங்களைச் சொல்லுகிறான். இவ்விஷயங்களைக் கேட்ட அர்ஜுனனுக்குச் சில கேள்விகள் தோன்றுகின்றன. அதனால் அர்ஜுனன் கண்ணனிடம் கேள்விகளைக் கேட்கத் தொடங்குகிறான்.

**"பரம் ப்ரஹ்ம பரம்தாம பவித்ரம் பரமம் பவாந் |**
**புருஷம் சாச்வதம் திவ்யமாதிதேவமஜம் விபும் ||**
(10-12)

**ஆஹுஸ்த்வாம் ருஷய:ஸர்வே தேவர்ஷிர்நாரதஸ்ததா |**
**அஸிதோ தேவலோ வ்யாஸ : ஸ்வயம் சைவ ப்ரவீஷி மே ||**
(10-13)

**ஸர்வமேதத் ருதம் மந்யே யந்மாம் வதஸி கேசவ |**
**ந ஹி தே பகவந் வ்யக்திம் விதுர்தேவா ந தாநவா: ||**
(10-14)

**ஸ்வயமேவாத்மநாऽऽத்மாநம் வேத்த த்வம் புருஷோத்தம |**
**பூதபாவந பூதேச தேவதேவ ஜகத்பதே ||**
(10-15)

**வக்துமர்ஹஸ்யசேஷேண திவ்யாஹ்யாத்மவிபூதய: |**
**யாபிர்விபூதிபிர்லோகாந் இமாம்ஸ்த்வம் வ்யாப்ய திஷ்டஸி ||**
(10-16)

என்று பல ச்லோகங்களாலே கிருஷ்ணனுடைய பெருமையைக் கேட்க மிகுந்த ஆசையுடையனாகிற அர்ஜுனன் கேள்விகள் கேட்டான். கிருஷ்ணனுடைய பெருமையை அத்யார்ச்சர்யமாக

அர்ஜுனன் கொண்டாடிப் பேசின இடம் இது. நீ ஏழாம் அத்தியாயத்தில் உன் பெருமையைச் சொல்லிக் கேட்டேன். (*மத்தப் பரதரம் யாந்யத்*) பிறர் சொல்லிக் கேட்க வேண்டுமா?

**"விஸ்தரேணாத்மநோ யோகம் விபூதிம் ச ஜநார்த்தன |**
***பூய: கதய த்ருப்திர்ஹி ச்ருண்வதோ நாஸ்தி மே அம்ருதம்*** **||"**

(10-18)

நாவல் படிப்பதில் நம் போல்வாருக்கு போக்யதா புத்தி இருக்கிறது. பகவத் விஷயத்தில் அவ்வளவு இல்லை. அர்ஜுனன் கிருஷ்ண விஷயத்தைக் கேட்பதில் மிகுந்த போக்யதா புத்தியைத் தெரிவிக்கவே பகவானுக்குப் பரம திருப்தி உண்டாகிறது. பகவான் சந்தோஷத்தோடு பதில் சொல்லுகிறான்

**"ஹந்த தே கத யிஷ்யாமி திவ்யா ஹ்யாத்மவிபூதய: |**
**ப்ராதாந்யத: குருச்ரேஷ்ட நாஸ்த்யந்தோ விஸ்தாஸ்ய மே ||"**

(10-19)

என்று தொடங்கி விஸ்தாரமாக அருளிச் செய்கிறான். இங்கு காரியத்தையும் காரணத்தையும் ஒன்றாக வ்யவகரிக்கிற முறை உண்டு என்பதை அறிய வேண்டும். சரீரம், ஆத்மா என்ற பொருள்கள் வெவ்வேறாக இருப்பினும் ஒன்றாகச் சொல்லுகிற வழக்கம் உலகத்தில் இருக்கிறதல்லவா. அந்த முறையில்தான் பகவான்

**"அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசய ஸ்தித: |**
**அஹமாதிச்ச மத்யம் ச பூதாநா மந்த ஏவ ச ||"**

(10-20)

**"ஆதித்யாநாமஹம் விஷ்ணுர் ஜ்யோதிஷாம் ரவிரம்சுமாந் |**
**மரீசிர் மருதாமஸ்மி நக்ஷத்ராணாமஹம் சசீ || "**

(10-21)

**"வேதாநாம் ஸாமவேதோ஽ஸ்மி தேவாநாமஸ்மி வாஸவ: |**
**இந்திரியாணாம் மநச்சாஸ்மி பூதாநாமஸ்மி சேதநா || "**

(10-22)

**"ருத்ராணாம் சங்கரச்சாஸ்மி வித்தேசோ யக்ஷரக்ஷஸாம் |**
**வஸூநாம் பாகவச்சாஸ்மி மேரு: சிகரிணாமஹம் ||"**

(10-23)

என்று பரக்கச் சொல்லிக் கொண்டு போகிறான்.

மண், தங்கம் இவை மண்குடத்திற்கும், தங்கக் குடத்திற்கும் காரணம். மண் குடத்தையும், தங்கக் குடத்தையும் பார்த்து இது மண்தான் இது தங்கம் தான் என்கிறோம். மண்ணும் தங்கமும் காரணப் பொருள்கள். குடம் காரியப் பொருள். இங்கு காரண காரியங்களை ஒன்றாகச் சொல்வது ஔபசாரி-கமான விவகாரம் ஆகும். சரீரம், ஆத்மா இரண்டையும் ஒன்றாக விவகரிக்கிற வழக்கமும் உண்டு. அதற்கு இரண்டொரு உதாரணம்.

ஒரு குழந்தைக்கு இராமன் என்று பெயர். அக்குழந்தையை "*இராமா வா*" என்கிறோம். இங்கு ஒரு தர்க்கம் இருக்கிறது. "*இராமன்*" என்ற சொல் சரீரத்தைச் சொல்கிறதா, ஆத்மாவைச் சொல்கிறதா? என்று இத்தர்க்கத்திற்குப் பதில் இரண்டையும் சேர்த்துத்தான் பொருள் சொல்லவேண்டுமென்று ஏற்படுகிறது. இராமனுடைய சரீரம் என்ன, ஆத்மா என்ன இரண்டும் இங்கு இரண்டு வஸ்துவாய் இருக்க ஒருமையை (ஏகவசனத்தை) எப்படி நிர்வகிக்கிறது என்றால் அதற்கு சமாதானம் ஜீவனும், சரீரமும் ஒன்றை ஒன்று விட்டுப் பிரியாததால் ஒன்று என்றே சொல்லிவிடலாம் என்பதாகும். "*அஹமாத்மா குடாகேச*" என்ற இடத்தில் நம் சுவாமி ஒரு விஷயம் கூறியிருக்கிறார். "*அஹம்* " என்றது ஆத்மாவைச் சொல்கிறதென்று சுவாமி சித்தாந்தமாகும். அகங்காரத்தைச் சொல்கிறதென்று அத்வைதிகளின் பக்ஷமாகும். *அஹம் மனுஷ்ய:* (நான் மனிதன்) இங்கு "*நான்*" என்ற சொல்லும் மனுஷ்யன் என்ற சொல்லும் ஒரு பொருளைக் குறிக்கிறது என்று அறிந்தோம். சாஸ்திரங்களில் அபர்யவசான வ்ருத்தி என்ற ஒருமுறை உண்டு. அதன்படி பார்த்தால் எல்லாச் சொல்லுக்கும் எல்லாப் பொருளுக்கும் ப்ரஹ்ம பர்யந்தம் சக்தியுண்டு. "*ஒழிவில் காலமெல்லாம்*" (3-3-1) என்ற திருவாய்மொழி திருவேங்கடமுடையான் விஷயமாக அவதரித்தது. மேல், "*புகழுநல் ஒருவனென்கோ*" திருவாய்மொழி. இங்கு வாசிகமான கைங்கர்யத்தை ஆழ்வார் ஆசைப்படுகிறார். அங்கு ஒரு கதை. "*புகழுநல் ஒருவனென்கோ*" (திருவாய்மொழி-3-4-1) என்ற நம்பிள்ளை ஈட்டுப் பிரவேசத்தில் அவ்வ்ருத்தாந்தத்தை பரக்கக் காணலாம்.

<u>புகழுநல் ஒருவன் ப்ரவேசம்</u>

***"ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி***
***வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்"***

திருவாய்மொழி-3-3-1

என்று அடிமை செய்யப் பாரித்தார்; இவர் பாரித்த பாரிப்புக்கெல்லாம் போரும்படி ஈச்வரனும் தன்னுடைய ஸர்வாத்ம பாவத்தைக் காட்டிக் கொடுத்தான். இருவரும் இலையகலப்படுக்கும் இத்தனை போக்கி அவனும் அடிமை கொள்ளமாட்டான், இவரும் அடிமை செய்ய மாட்டார்.

**"அந்யத் பூர்ணாத் அபாம்கும்பாத் அந்யத் பாதாவநேஜநாத் |**
**அந்யத் குசல ஸம்ப்ரச்நாத் நசேச்சதி ஜநார்தந: ||"**

என்கிறபடியே ஸ்வாரரதனாய் இத்தலையில் பெற்றது கொண்டு த்ருப்தனாம் அவனே அவன்; இவரதுதானே ஆராத காதலிறே. இவருடைய பாரிப்புக்கு ஈடாக அவன் ஸர்வாத்ம பாவத்தைக் காட்டிக் கொடுத்த இடத்தில் அடிமை செய்கை அன்றிக்கே, அவனுடைய குணங்களை அநுஸந்தித்து சிதிலாந்தக்கரணராய், "*காலாழும் நெஞ்சழியும் கண் சுழலும்*", (பெரிய திருவந்தாதி-34) என்னும் ஸ்வபாவரே இவர். " *புனையும் கண்ணி எனதுடைய வாசகம் செய் மாலையே வான் பட்டாடையும் அஃதே*" (திருவாய்மொழி-4-3-2) என்று இவருடைய உக்தி மாத்ரத்தை எல்லாமாகக் கொள்ளும் ஸ்வபாவனிறே அவனும்; அவன் ஸ்வரூபத்தோடு குணத்தோடு விபூதியோடு சேஷ்டிதங்களோடு வாசி இன்றிக்கே எல்லாம் உத்தேச்யமாய் இருக்குமிறே இவருக்கு; அவைதன்னைக் கண்டகண்டவிடங்களிலே அனுபவிக்கையன்றிக்கே மாணிக்கத்தையும், வயிரத்தையும், முத்தையும் ஓர் ஆரத்திலே சேர்ந்து அனுபவிப்பாரைப் போலே அவற்றையடைய அவன் பக்கலிலே சேர்த்து அனுபவிக்கிறார். இவர்க்கு அவன் குணங்களோடு விபூதியோடு வாசியின்றிக்கேயிறே இருப்பது. குணங்களுக்குப் பிரித்து ஸ்திதியாதல், உபலம்பமாதல் இல்லாதாப்போலே விபூதிக்கும் அவனையொழிய ஸ்திதியாதல் உபலம்பமாதல் இல்லாதபடியும், இன்னமும் முக்தனுக்கு லீலாவிபூதியும் அநுபாவ்யமாய் நின்றதிறே ததீயத்வா

காரத்தாலே: *"நோப ஜநந் ஸ்மரந்"* என்கிறவிடத்தில் கர்ம-நிபந்தநமான ஆகாரத்தை ஸ்மரியான் என்கிற இத்தனையிறே. கர்ம நிபந்தநமான ஆகாரம் ஸ்ம்ருதி விஷயமாகாதபடியான பாகம் பிறந்தால், ததீயமாயே தோற்றி எல்லாம் ஒக்க அநுபாவ்யமாக இருக்குமிறே. இவ்விபூதி தன்னிலே, *"எண்ணாத மானிடத்தை எண்ணாத போதெல்லாம் இனியவாறே"* (திருமொழி-11-6-7) என்று சிலரைச் சொல்லி, *"பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேனே"* (திருமொழி-7-4-4) என்று சிலரை ஒருகாலும் மறக்கவொண்ணாதபடியாகவும் சொல்லா நின்றதிறே. ஞானம் பிறந்த தசையிலே இருக்கும்படி ஆயிற்று. இது ப்ராப்தி சமயத்தில் வந்தால் இவ்வாசியின்றிக்கே எல்லாம் ஒக்க அநுபாவ்யமாகா நின்றதிறே. ஈச்வர விபூதியாக இருக்கச் செய்தேயிறே சிலரை *"பொல்லாத தேவரைத் தேவரல்லாரை திருவில்லாத் தேவரை தேறேன்மின்"* (நான்முகன் திருவந்தாதி-53) என்கிறது. நின்ற நின்ற நிலைகளிலே ஹேயோபாதேய விபாகம் பண்ணி அநுஸந்திக்க வேண்டிவருமிறே, சாஸ்திரங்கள் எங்கும் ஒக்கச் சேரக் கிடக்கும்படி பார்க்கும் போது; இவருக்கு அவன் குணங்களோடு விபூதியோடு வாசியற அநுபாவ்யமாம்படியிறே மயர்வற மதிநலம் அருளிற்று.

கர்ம நிபந்தநமான ஸ்ம்ருதி பின்னிடாதபடியிறே இவர்க்கு ஈச்வரன் வெளிச்சிறப்புப் பண்ணிக் கொடுத்தது. இவர்க்குத் தன் ஸ்வரூபரூப குணஆதிகளை அடையக் காட்டிக் கொடுக்கக்கண்டு, விபூதி காரணமான பூதங்கள், பௌதிகங்கள், அவற்றில் உஜ்ஜ்வலமான மாணிக்யாதிகள் ரஸ்யமான பதார்த்தங்கள் செவிக்கினியகாநாதிகள் மோக்ஷாதி புருஷார்த்தங்கள். இஜ்ஜகத்துக்கு ப்ரதானரான ப்ரஹ்மாதிகள் இவற்றுக்கு அடையக் காரணமான ப்ரக்ருதி புருஷர்கள் இவற்றை அடைய விபூதியாக உடையவனாய் இதினுள்ளே அந்தராத்மதயா அநுப்ரவேசித்து இவற்றோடே கலசி நிற்கச் செய்தேயும் *"தத்கத தோஷை அசம்ஸ்ப்ருஷ்டனாய், அநச்நந்நந்ய:"* என்கிற ப்ரமாண பலத்தாலே; இச்சேதநனுக்கு வரக்கடவதான ஸுகித்வ, துக்கித்வாதிகள் தன் பக்கல் தட்டாதபடி நிற்கையன்றிக்கே நியாமகத்வத்தால் வந்த புகரை உடையவனுமாய், விபூதியில் அவ்வோபதார்த்தங்களுக்கு வாசகமான சப்தங்கள் அசித்தையும் அசித்துக்கு அபிமாநியான ஜீவனையும் காட்டுகிற கணக்கிலே ததந்தர்யாமியான

பரமாத்மாவையும் காட்டி, இஸ்ஸங்காதத்துக்கு வாசகங்களாய் அவன் பக்கலிலே பர்ய வஸித்திருக்கையாலே அஸாதாரணமான நாராயணாதி சப்தங்களோடு விபூதி வாசகமான சப்தங்களோடு வாசியற சர்வ சப்தங்களும் அவனையே சொல்லுகிறனவாய் இருக்கிற படியையும், இவ்விபூதிதான் புறம்பாய் விஞ்சிக் காட்டுகை அன்றிக்கே தோளில் தோள் மாலையோபாதி தகுதியாய், அநுபாவ்யத்திலே அந்தர்பூதமாய் இருக்கிற படியையும் அநுஸந்தித்து க்ருதார்த்தராய், பாரித்தபடியே எல்லா அடிமையும் செய்ய மாட்டாமையாலும், அவன்தான் கோவை வாயாளிற்படியே ஒன்றையே எல்லா அடிமையுமாகக் கொள்ளும் ஸ்வபாவனாகையாலும், வாசிகமான அடிமையிலே ப்ரவ்ருத்தராய் மஹாவாதத்தில் பலோபாதாநம் பண்ணுவாரைப் போலே அத்தைச் சொல்லுவேனோ? இத்தைச் சொல்லுவேனோ? என்று இங்ஙனே அலமறுகிறார். ஆக, இத்தால் "*வழுவிலா அடிமை செய்ய வேண்டும் நாம்*" என்று தாம் பாரித்த படியே அடிமை செய்து தலைக்கட்டுகிறார். (புகழுநல்லொருவன் ஈடு வ்யாக்யானம் -3-4-1)

எல்லா வஸ்துக்களுள்ளும் பகவான் இருக்கிறான் என்பதை

***"எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்***
***மெய்ப்பொருள் காண்ப தறிவு"***

திருக்குறள்- 355)

என்று திருவள்ளுவரும் கூறினார். பெயர் வடிவங்களோடு கூடின வஸ்துக்களில் ஜீவன் உண்மையாக இருக்கிறான். "*நாமரூபே வ்யாகரவாணி*" என்பது ச்ருதி.

***"நரகநாசனை நாவில் கொண்டு அழையாத மானிட சாதியர்****
***பருகு நீரும் உடுக்கும் கூறையும் பாவம் செய்தனதாங்கொலோ"***

( பெரியாழ்வார் திருவாய்மொழி 4-4-4 )

என்ற பாசுரப்படி, அசித்துப் பொருளுக்குள்ளும் ஜீவன் இருக்கிறான் என்பது தெளிவாகும். பகவான் இல்லையென்றால் ஜீவன் இல்லை. ஜீவன் இல்லையென்றால் அசித்தில்லை.

**"பூமி ரோபோநலோ வாயு: கம் மநோ புத்தி ரேவ ச |
அஹங்கார இதீயம் மே பின்னா ப்ரக்ருதி ரஷ்டதா ||"**

(7-4)

என்று கீழே ஏழாம் அத்தியாயத்தில் இவ்விஷயத்தை பகவானே விளக்கியிருக்கிறான்.

**"அபரேய-மிதஸ்த்-வந்யாம் ப்ரக்ருதிம் வித்தி மே பராம் |
ஜீவபூதாம் மஹாபாஹோ யயேதம் தார்யதே ஜகத் ||"**

(7-5)

என்றும் கூறியிருக்கிறான். அசேதனமான பலகை முதலிய பொருட்கள் கிடக்கட்டும். நம்மையே நாம் எடுத்துக் கொள்வோம். நம் சரீரத்துக்குள்ளே ஜீவன், ஜீவனுக்குள்ளே பரமாத்மா இருக்கிறானென்றால் நமக்கே நம்பிக்கை ஏற்படுவ-தில்லை. கீழ்ச் சொன்ன முறைப்படி பார்த்தால் பகவத் சம்பந்தமில்லாத வஸ்துவே இல்லை என்று தேறியிருக்கிறது. நாய், நரி, கழுதை இவற்றை வணங்கு என்றால் அங்கு பிறர் நகைப்பார்களே என்று தோன்றுகிறதே ஒழிய அவ்வஸ்துவினுள் ப்ரம்மம் இருக்கிறது. வெளித்தோன்றுகின்ற நாய், நரி, கழுதை இவற்றின் உடல் ப்ரம்மத்திற்கு சரீரம் என்ற எண்ணம் ஏற்படுவதில்லை.

"*கௌஷீதிக்*" என்ற உபநிஷத்தில் ஒரு வரலாறு. திவோதாஸன் பிள்ளை தைவோதாசன். அவன் ப்ரதர்தனன் என்றழைக்கப்பட்டான். அவன் இந்திர பக்ஷத்திலிருந்து அசுரர்களை நிரசனம் செய்தான். ஒரு சமயம் இந்திரலோகம் சென்றான். இந்திரன், ப்ரதர்தனனைப் பார்த்து ஒரு வரம் கேள் என்கிறபொழுது ப்ரதர்தனன் ஆத்மக்ஷேமம் ஏற்படும்படி உபதேசிக்கவேண்டும் என்றான். அப்பொழுது இந்திரன் "*மாம் உபாஸ்வ*" என்று உபதேசித்தான். இந்த இடத்திற்கு "*இந்திரப்ராணாதிகரணம்*" என்று பெயர். இங்கு உண்மை விசாரிக்கப்-படுகிறது. இந்திரன் சாதாரணமான ஒரு தேவதைதானே. அவனை உபாசித்தால் மோக்ஷம் கிடைக்குமா? பத்து வருஷம் சிறை தண்டனையில் இருப்பவன் ஒரு வருஷ சிறை தண்டனை உடையவனை விடுவிக்க முடியுமோ? இந்திரன் 71 சதுர்யுகமும் மீதமும் சிறையிலிருப்பவன். இங்கு இந்திரன் "*என்னை*" உபாசனை பண்ணு என்று சொன்னதற்கு "*என்னுள்*

*இருக்கும் பரமாத்மாவை உபாசனை பண்ணு*" என்றுதான் பொருள். இதுவரையில் என்ன விஷயம் பார்த்தோமென்றால் காரிய காரணம் இரண்டும் ஒன்று என்று பார்க்க வேண்டும். இம்முறையில் பார்த்தால் ப்ரம்மம் காரணம். ப்ரபஞ்சம் காரியம் என்றும் இரண்டையும் ஒன்றாகச் சொல்வது வழக்கம் என்றும் நன்கு விளங்கும். இவ்வத்தியாயத்தில் சேதனாசேதனங்களாகிற விபூதிகள் எல்லாவற்றையும் எடுத்து *எல்லாம் நான் தான்* என்று பகவான் கூறுகிறான். ப்ரம்மம் எப்படி சத்யமோ அதுபோல ப்ரம்மத்தினுடைய ஐஸ்வர்யமும் குணங்களும் எல்லாம் சத்தியமானவையே. உலகத்திலுள்ள ஸமஸ்தமும் அவன் இட்ட வழக்காகச் சொல்லப்படுகிறது. சரீராத்ம பாவம் சுவாமியினுடைய சித்தாந்தம் பரபக்ஷத்தைச் சொல்லிக் கேட்கிறபோதுதான் சுவாமியினுடைய சித்தாந்தம் வ்யாக்யானம் மனதில் படும்.

**"ஸ்வகல்யாண குணைநந்த்ய க்ருத்ஸ்ந ஸ்வாதீநதாமதி: |**
**பக்த்யுத்பத்தி விவ்ருத்த்யர்த்தா விஸ்தீர்ணா தசமோதிதா: ||"**

என்பது சங்கிரஹ ச்லோகம்.

"*உலகு ஆதி பகவன் முதற்று*" (திருக்குறள்-1) என்ற திருக்குறளில் மேற்கூறிய கருத்துச் சொல்லப்பட்டிருக்கிறது. ஆதி, முதல் இரண்டும் காரணம் என்ற ஒரே பொருளைக் கொண்ட சொல். *கூறியது கூறல்* குற்றம் வாராமைக்காக, நிமித்த காரணமான பகவான், உலகுக்கு உபாதான காரணமாகவும் இருக்கிறான் என்ற பொருளை உணர்த்துகிறது என்பர். (*மதுரை தமிழ்ச்சங்கம் ஸ்ரீ.உ.வே.அப்பனையங்கார் ஸ்வாமி அருளியது.*)

**பத்தாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினொன்றாம் அத்தியாயம்

பகவான் ஸ்ரீபார்த்தசாரதி, 10ஆம் அத்தியாயத்தில் "*தன்னுடைய குணங்களையும் தன்னால் நியமிக்கப்படும் பொருள்களையும் உள்ளபடி உணர்ந்தவனுக்குத் தடையில்லாமல் பக்தி உண்டாகும்*" என்று அருளிச் செய்தான்.

**"ஸ்வகல்யாண குணாநந்த்ய க்ருத்ஸ்ந ஸ்வாதீநதாமதி: |**
**பக்த்யுத்பத்தி விவ்ருத்த்யர்த்தா விஸ்தீர்ணா தசமோதிதா: ||"**

என்று *சங்கிரஹ ச்லோகத்தில்* அனுபவித்தோம். 11ஆம் அத்தியாயத்தில், பகவான் கண்ணன் கொடுத்த திவ்ய சக்ஷுஸாலே அர்ஜுனன் பகவானைக் கண்டு அனுபவித்த-படியே வெளியிட்ட விஷயம் பேசப்படுகிறது.

**"ஏகாதசே ஸ்வயாதாத்ம்யஸாக்ஷாத்கார அவலோகநம் |**
**தத்தமுக்தம் விதிப்ராப்த்யோர் பக்தயேகோபாயதா ததா ||"**

என்பது சங்கிரஹ ச்லோகம். பகவானுக்கு என்ன என்ன மஹிமைகள் உண்டோ, அவற்றை (*அதாவது ஞானதர்சன ப்ராப்திகள் என்பதாம்*) பக்தி ஒன்றால் தான் அடைய முடியும். இது இந்த அத்தியாயத்தின் சாரமாகும்.

**"பக்த்யா த்வநந்யயா சக்ய: அஹம்ஏவம் விதோர்ஜுந |**
**ஜ்ஞாதும் த்ரஷ்டும் ச தத்வேந ப்ரவேஷ்டும் ச பரந்தப ||"**
(11-54)

அர்ஜுனனிடத்தில் பகவானுக்கு அதிகமான அன்பு உண்டு. அசூயை இல்லாததால் உனக்குச் சிறந்த உண்மையைக் கூறுவேன் என்று கீழே அருளிச் செய்திருக்கிறான். விபூதி என்பதற்கு நியமிக்கப்படும் பொருள் என்று கருத்துக் கொண்டு நம் சுவாமி வ்யாக்யானம் செய்திருக்கிறார். ஒரு விஷயம் எல்லோருடைய மனத்திலும் படவேண்டும். அநுபவத்திலும் வரவேண்டும். ஈச்வரனுடையதாக எதெது இருக்கிறதோ அது ஐச்வர்யம் எனப்படும். "*ஈச்வரஸ்ய இதம் ஐச்வர்யம்*" என்று ஐச்வர்ய சப்தத்திற்குப் பொருள் கூறுவார்கள். இதன்படி பார்த்தால் நமக்கு ஒன்றுமே இல்லை. எல்லாம் பகவானுடையது என்று

தேறுகிறது. இந்த அர்த்தம் மனதில் உறைத்தால் "*உனக்கு என்ன ஐச்வர்யம் இருக்கிறது*" என்று லோகத்திலே கேட்கிற வார்த்தைக்குப் பொருளே இல்லை என்பது நன்கு புலனாகும். உண்மையில் இந்த அர்த்தம் மனதில் படுமேயானால் ஆத்ம க்ஷேமத்திற்கு இதற்கு மேற்படவேண்டியது எதுவுமேயில்லை. இந்த அர்த்தத்தை "***அடங்கெழில்***" (திருவாய்மொழி-1-2-7) என்ற பாசுரத்தில் அருளிச்செய்திருக்கிறார். வசிஷ்டர் சக்கரவர்த்திக்குச் செய்வன செய்தபிறகு பரதாழ்வானைப் பார்த்து ராஜ்யத்தை முடிசூடிப் பரிபாலனம் செய்ய வேண்டும் என்று சொல்லுகிறார்.

**"ஸ பாஷ்பகலயா வாசா கலஹம்ஸஸ்வரோ யுவா |**
**விலலாப ஸபாமத்யே ஜகர்ஹே ச புரோஹிதம் " ||**

வா.ரா.அயோ-82-10

**"சரித ப்ரம்ஹசர்யஸ்ய வித்யாஸ்நாதஸ்ய தீமத: |**
**தர்மே ப்ரயதமாநஸ்ய கோ ராஜ்யம் மத்விதோ ஹரேத் "||**

வா.ரா.அயோ-82-11

**"கதம் தசரதாஜ்ஜாத: பவேத் ராஜ்யாபஹாரக: |**
**ராஜ்யம் சாஹம் ச ராமஸ்ய தர்மம் வக்துமிஹார்ஹஸி" ||**

வா.ரா.அயோ-82-12

இந்த ச்லோகங்களால் பரதாழ்வான் தான் எல்லா விதத்தாலும் ராஜ்யத்தைப் பரிபாலனம் பண்ணத் தகுதி உடையவன் இல்லை என்பதை நிரூபித்திருக்கிறார். அதில் முக்கியமாக இந்த ராஜ்யம் எப்படி இராமனுடைய சொத்தோ அதேபோல பரதனும் இராமனுடைய சொத்து. ஆகவே சொத்தைப் பரிபாலனம் பண்ண வேண்டிய பொறுப்பு சுவாமியைச் சேர்ந்தது. சொத்து தன்னைத்தானேயோ பிறவற்றையோ பரிபாலனம் பண்ணத் தகுதியில்லை என்று கூறிய வார்த்தைகள் மிக அனுபவித்து அறிய வேண்டியதாகும். பகவான் கிருஷ்ணன் விபூதி அத்தியாயத்தில் அதாவது (10ம் அத்தியாயத்தில்) "*எல்லாம் என்னுடைய பொருள்*" என்று சொல்லியிருக்கிறான். இந்த அர்த்தத்தைப் பரதன் தன்னுடைய அனுஷ்டானத்தில் காட்டுகிறான். நம்முடையது என்று ஒரு பொருளை அபிமானித்தால் மேலும் மேலும் பிறக்க வேண்டியதுதான்.

"***த்ர்யக்ஷரஸ்து பவேன் ம்ருத்யு:***"

என்று ப்ரமாணம் கூறுகிறது.

ஆழ்வார்,

***"யானே என்னை அறியகிலாதே!***
***யானே என்தனதே என்றிருந்தேன்***
***யானே நீ என்னுடைமையும் நீயே!***
***வானே ஏத்தும் எம்வானவரேறே" .***

திருவாய்மொழி-2-9-9

என்ற பாசுரத்தில் இத்தத்துவத்தை உணர்த்துகிறார். எம்பெருமானுடைய சொத்தை அவனுக்கு ஆக்காது தனக்கு எவன் ஆக்கிக்கொள்கிறானோ அது போல அபசாரித்திரம் வேறு எதுவுமில்லை என்று ஞான நிலையில் பார்ப்பவர்க்கு நன்கு தெரியும். பகவான் கண்ணன் அர்ஜுனனுக்குத் தன் விபூதிகளை (ஐச்வர்யங்களை) அவன் மனதில் படும்படி கீழே உபதேசித்திருக்கிறான். இந்த அத்தியாயத்தில் அர்ஜுனனுடைய பேராவலைப் பார்க்க வேண்டும்.

**"த்ரஷ்டுமிச்சாமி தே ரூபம் ஐச்வரம் புருஷோத்தம ||"**

(11-3)

**"மந்யஸே யதி தச்சக்யம் மயா த்ரஷ்டுமிதி ப்ரபோ |**
**யோகேச்வர ததோ மே த்வம் தர்சயாத்மாந மவ்யயம் ||"**

(11-4)

என்று அர்ஜுனனுடைய வார்த்தை. இந்த அர்ஜுனனுடைய பேச்சைப் பார்த்தால் அவனுடைய அவா நன்கு தெரியும். ஏ கிருஷ்ணா! உன்னுடைய திருவுள்ளத்தால், "*இந்த அர்ஜுனன் நம்முடைய திவ்ய மங்கள விக்கிரஹத்தை (விஸ்வரூபத்தை)ப் பார்க்கட்டும்*" என்று நீ விரும்பினால் நான் வாழ்ந்துபோவேன் என்று ப்ரார்த்திக்கிறான். "*விச்வரூபத்தைக் காட்டுவாயாக*" என்று பிரார்த்தித்த அர்ஜுனனுக்குத் தன் விச்வரூபத்தைக் காட்டி வாழ்வித்து இருக்கிறான் பகவான் என்பது இந்த அத்தியாயத்தில் உள்ள விஷயம். "*தே ஐச்வரம் ரூபம் த்ருஷ்டுமிச்சாமி*" என்ற இடத்தில் நம் சுவாமி சாதித்த அர்த்தம் மிக ஆச்சரியமானது. "ஹே. *பார்த்தசாரதி*! உன் *ரூபத்தைப் பார்க்க* வேணும்" என்று அர்ஜுனன் கேட்கிற போது, இங்கு கண்ணன் ஒரு ரூபத்தோடு தானே இருக்கிறான்; அப்படி இருக்க, உன் ரூபத்தைப் பார்க்கவேண்டுமென்று கேட்ட அர்ஜுனனுக்கு, இப்பொழுது இருக்கிற ரூபத்தைப்

பற்றி அவன் கேட்கவில்லை என்று தெரிகிறது. பின்பு, அவன் எதைக் கருதிக் கேட்கிறானென்றால் ப்ரம்ம லக்ஷணமான ஸ்ருஷ்டி ஸ்திதி ஸம்ஹாரம் முதலியவற்றிற்கும் பரமாத்ம தத்வத்திற்கும் சேரவிருக்கும் பகவானுக்கே உரிய அசாதாரணமான திருமேனியைப் பார்க்க வேண்டுமென்று அர்ஜுனன் விரும்பியதாக சுவாமியினுடைய வ்யாக்யானம் அனுபவிக்கத் தகுந்தது.

**"ஹே பரமேச்வர, ஏவமேதத்யவத்ருதம் யதாத்தத்வம் ஆத்மாநம் ப்ரவீஷி | புருஷோத்தம ஆச்ரிதவாத்ஸல்ய ஜலதே தவைச்வரம் த்வதசாதாரணம் ஸர்வச்ய ப்ரசாசித்ருத்வே, பாலயித்ருத்வே, ஸ்ரஷ்ட்ருத்வே, சம்ஹர்த்ருத்வே, பர்த்ருத்வே, கல்யாண குணாகரத்வே, பரதரத்வே, ஸகலேதரவிஸஜாதீயத்வேSவஸ்திதம் ரூபம் த்ருஷ்டும் சாக்ஷாத்கர்த்துமிச்சாமி"**

என்பது சுவாமியினுடைய வியாக்யானம் (அடக்கி ஆளுவது என்பதற்கு உதாரணம்)

எச்சில் இலை காய்ந்து கிடக்கிற போது எல்லாம் கூட்டம் போட்டு, இனி என்ன காற்றடித்தாலும் நாம் அசையவே கூடாதென்று முடிவு செய்வதாக வைப்போம். அது காற்றடித்தால் அம்முடிவு நிறைவேறுமோ? இந்த மாதிரி துரியோதனாதிகள் பஞ்ச பாண்டவர்களுக்காகக் கண்ணன் தூதுவரப் போகிறான் என்பதை அறிந்து, அவனுக்கு மரியாதை செய்யக்கூடாதென்று தீர்மானம் செய்திருந்தார்கள். இப்படி-யிருக்க பகவான் கண்ணன் தூதனாக எழுந்தருளிய பொழுது, தவறி மரியாதை செய்தால் அவர்களது வீட்டைத் தீக்கிரை-யாக்குவேன் என்று ஆணையும் இட்டான் துரியோதனன்.

***"காவல் மன்னவர் முகங்கள்தோறும்***
***இருகண்பரப்பிட அமர் கருதுவோர்***
***ஏவலின் கண் வருதூதனாம் இடையன்***
***இன்று நம் அவையில் எய்தினால்***
***ஒவலின்றி எதிர்சென்று கண்டுதொழுது***
***உறவுகூறில் இனி உங்களூர்***
***தீ வலம்செய அடர்ப்பன்! என்றுநனி***
***சீறினான் முறைமை மாறினான்"***

கிருட்டிணன் தூதுச்சருக்கம் - 104

என்று கூறினார் வில்லபுத்தூரார். இப்படி இருக்க பேரவையில் பகவான் கண்ணன் எழுந்தருளினான். பகவான் எழுந்தருளினதும் துரியோதனன் உட்பட அவையில் உள்ளோர் அனைவரும் தாங்கள் தீர்மானித்த முடிவை மறந்து எல்லோருமே கண்ணனுக்கு மரியாதை செய்கிற முறையில் எழுந்திருந்து வணங்கினார்கள். அவருள் துரியோதனனும் அவனைச் சார்ந்த ஒரு சிலரும் திடீரென்று தாங்கள் செய்த முடிவு நினைவுக்கு வர மீண்டும் ஆசனத்திலே அமர்ந்தார்கள். இதனைப் பெரியாழ்வார்,

***"கழல் மன்னர் சூழக் கதிர்போல் விளங்கி***
***எழலுற்று மீண்டே இருந்து உன்னை நோக்கும்***
***சுழலைப் பெரிதுடைத் துச்சோ தனனை***
***அழல விழித்தானே! அச்சோ அச்சோ***
***ஆழியங்கையனே! அச்சோ அச்சோ"***

பெரியாழ்வார் திருமொழி -1-8-5

என்றும், வில்லிபுத்தூரார்,

***"துன்றுகங்கை மகனும் துரோணனோடு***
***சுதனும் நீதி புனை விதுரனும்***
***மன்னர் மன்னனை ஒழிந்த மன்னவரும்***
***வந்துசேவடி வணங்கினார்***
***கர்ணனும் தலைகவிழ்ந்து இருந்தனன்***
***அழன்று உளம் சகுனி கருகினான்***
***முன்னம் நின்றவர்கள் இட்ட பீடமிசை***
***மொய்துழாய் முகிலும் எய்தினான்"***

கிருட்டிணன் தூதுச்சருக்கம் - 106

என்றும் அழகாக வர்ணனை செய்தனர்.

"*அவசாப் ப்ரதி பேதிரே*" என்றபடி துரியோதனாதிகள் தங்களையும் அறியாமல் பகவானுக்கு மரியாதை செய்திருக்கிறார்கள். இதற்கு முக்கிய காரணம் அந்த பகவானுடைய "*ரூபமேவ தன் மஹிமானம் வ்யாசஷ்டே*" என்றபடி திருமேனியின் தோற்றமே "*கண்டவாற்றால் தனதே உலகென நின்றான்*" (திருவாய்மொழி-4-5-10) என்று ஆழ்வார் அருளிச் செய்தபடி அவ்வெம்பெருமானுடைய தோற்றப் பொலிவே எதிரிகளையும் அடக்கவல்லது. இதுதான் "<u>ப்ரசாசீத்ருத்வம்</u>".

**இனி பாலயத்ருத்வம்:**

அதாவது ஆடு மாடுகளைக் கோலைக் கொண்டு அங்கு போ இங்குபோ என்று கோபாலனாக இருந்து நியமித்து ரக்ஷிக்கிறானே அப்படியில்லை இங்கு. ஞானப்ரதானம் பண்ணி ஸத்வ குணத்தை உண்டாக்கி சேதனர்களை எம்பெருமான் ரக்ஷிக்கிறான். ஸத்வ குண ப்ரவர்த்தகன் நாராயணன். "*ஜாயமாநம் ஹி புருஷம் யம் பச்யேத் மதுசூதந:*" என்ற வசனப்படி அவன் கடாக்ஷம் எவன் மேலே விழுமோ அவன்தான் ஸாத்வீகனாக இருப்பன். "*ஸாத்விக: ஸது விக்ஞேய: ஸ வை மோக்ஷார்த்தசிந்தக:*" என்பது ப்ரமாணம். இவ்விடத்தில் ஒரு சரித்திரத்தைப் பார்க்கவேண்டும்.

வாலி சுத்த வீரன். அவன் மனைவி தாரையோ வீர பத்தினி. தாரை அவனிடம் நல்ல அன்பைச் செய்தவள். அவளுக்கு ராஜ்யமாளும் திறமையுண்டு. "*தேன நாதேன மஹதா நிர்ஜகாம ஹரீச்வர:*" இதற்கு தனிச் ச்லோக விவரணம் காணலாம். சுக்ரீவன் வாலியின் மாளிகை வாசலில் வந்து அறை கூவினான். அவன் குரலைக் கேட்டு யுத்தத்துக்குப் புறப்பட்டான் வாலி. அப்பொழுது தாரை தடுத்து, "*சுக்ரீவன் குரல் முன்பு போலில்லை, அவன் குரலில் துணைபலம் இருப்பது தெரிகிறது*" என்று கூறினாள். இங்ஙனம் கூறியும் வாலி யுத்தத்துக்குச் சென்றான். இராமபாணத்தால் அடிபட்டான்; வீழ்ந்தான். வீழ்ந்ததைக் கேட்ட தாரை ஆவேசத்தோடு தன் கணவனைக் கொன்ற இராமனை வாயார வைய வேண்டுமென்று வந்தாள். வருகிறபோது அவளுக்கு அதுவே மனோரதம். அப்படி வந்தவளது மனது

**"அவஷ்ட்டப்ய ச திஷ்டந்தம் ததர்ச தநுரூத்தமம் |**
**ராமம் ராமாநுஜம் சைவ பர்த்துச்சைவாநுஜம் சுபம் ||"**

(கி.கா.19 - 25 & 26)

என்ற ச்லோகத்தில் சொல்லியபடி பெருமாளுடைய கடாக்ஷம் பட்டபிறகு மாறிவிட்டது. ஸத்வகுணம் தலையெடுத்தது. வேதாந்த ரீதியில் இராமனை ஸ்தோத்திரம் பண்ண ஆரம்பித்தாள். வாயார வையவேணும் என்று வந்தவள் வாயார வாழ்த்திப் பேசும்படி ஆனாள்.

"த்வமப்ரமேயச்ச துராஸதச்ச ஜிதேந்திரியச்சோத்தமதார்மிகச்ச |
அக்ஷய்யகீர்த்திச்ச விசக்ஷணச்ச க்ஷிதிக்ஷமாவாந்
க்ஷதஜோபமாக்ஷ: ||"

(கி.கா - 24 - 31)

என்று இராமனுடைய மஹிமையெல்லாம் ஸாரமாக எடுத்துப் பேசினாள். வாலியும் இராம தரிசனத்தால் ஸத்வ குணம் தலையெடுக்கப் பெற்று மனசு சமாதானம் அடைந்து பேசியிருக்கிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

"ஸ தமாஸ்வாஸயத்ராமோ வாலினம் வ்யகத்ததர்சனம் |
ஸாமஸம்பனயா வாசா தர்மதத்வார்த்தயுக்த்தயா ||"

(கி.கா - 18 - 60)

என்று வால்மீகியும்,

*"கவி குலத்தரசும் அன்ன கட்டுரை கருத்தில் கொண்டான்;*
*அவியுறு மனத்தனாகி அறத்திறன் அழியச் செய்யான்*
*புவியிடை அண்ணல் என்பது எண்ணினன் பொருந்தி, முன்னே*
*செவியுறு கேள்விச் செல்வன் சென்னியின் இறைஞ்சி, சொன்னான்;"*

கிட்கிந்தா காண்டம் - வாலி வதைப்படலம் - 126

*"தாயென உயிர்க்கு நல்கித் தருமமும், தகவும், சால்பும்,*
*நீயென நின்ற நம்பி! நெறியினின் நோக்கும் நேர்மை*
*நாயென நின்ற எம்பால் நவையற உணரலாமே?*
*தீயன பொறுத்தி என்றான் சிறியன சிந்தியாதான்"*

கிட்கிந்தா காண்டம் - வாலி வதைப்படலம் - 127

*"ஏவுகூர் வாளியால் எய்து, நாய் அடியனேன்*
*ஆவிபோம் வேலைவாய், அறிவு தந்தருளினாய்;*
*மூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ! மற்றும் நீ!*
*பாவம் நீ! தருமம் நீ! பகையும் நீ! உறவும் நீ!"*

கிட்கிந்தா காண்டம் - வாலி வதைப்படலம் - 129

என்று வாலி வாக்கால் கம்பநாடனும் இவ்வுண்மையை விளக்கியிருக்கிறார்கள். இதனால் ஸத்வ குணத்தை உண்டாக்கி நம்மைக் காக்கின்றவன் என்கிற பாலயத்ருத்வம் சொல்லப்பட்டது.

**இனி ஸ்ரஷ்டருத்வம்:**

அதாவது படைக்கும் தன்மை இவனுடைய திருமேனியைப் பார்க்கின்ற போதே இவன் தான் படைப்புக் கடவுள் என்று தெரிய வேண்டும். "*ப்ரம்மணோஸ்ய முகமாஸீத்*" என்று சுருதிகளைக் காட்டி இவனுடைய ஸ்ரஷ்ட்ருத்வத்தை உபபாதிக்கிறார் தேசிகர். "*நாபிக்கமலத்தில் பிரம்மாவைப் படைத்த-போதே இவன்தான் பரமாத்மா என்று தெரியாதா?*" என்று பட்டர் நிர்வகிப்பராம்.

**"கஸ்யோதரே ஹரவிரிஞ்சமுக: ப்ரபஞ்ச:**
**கோரக்ஷதீமம் அஜநிஷ்ட ச கஸ்ய நாபே: |**
**க்ராந்த்வா நிகீர்ய புநருத்கிரதி த்வதந்ய:**
**க: கேந வைஷ பரவாநிதி சக்யசங்க்க: ||**

ஸ்தோத்திரரத்னம் - 14

என்பது ஆளவந்தார் ஸ்தோத்திரம்.

***"முதலாம் திருவுருவம் மூன்றென்பர் ஒன்றே***
***முதலாகும் மூன்றுக்கும் என்பர் – முதல்வா!***
***நிகரிலகு காருருவா! நின்னகத்த தன்றே***
***புகரிலகு தாமரையின் பூ"***

பெரிய திருவந்தாதி - 72

என்று நம்மாழ்வார் அருளிச் செய்தார்.

**இனி ஸம்ஹார்த்ருத்வம் :-**

இது கிருஷ்ணாவதாரத்தில் மிகவும் ஸாரமானது. முதன் முதலில் பூதனையைக் கொன்றானே அது நல்ல முகூர்த்தம். வரிசையாக சகட யமளார்ஜுன, அரிஷ்ட, ப்ரலம்ப, காளிய, தேனுக, கேசி, குவலயாபீட, சாணூர, முஷ்டிக, தோசல, கம்சாதிகளான விரோதிகளை அழித்த வரலாறு பிரசித்தமானது. இராமாயணத்தில் இராமனால் கொல்லப்பட்ட அவ்வளவு ராக்ஷசர்களையும் இராவணன் யுத்த பூமியிலிருந்து கடலில் கொண்டு போய்த் தள்ளும்படி ஆணையிட்டான். இராமனோ வானரங்களின் இறந்த உடலைக் காப்பாற்றி வைக்கும்படி ஆணையிட்டான். ஹனுமான் ஔஷதி பர்வதம் கொண்டு வந்த போது வானரங்கள் பிழைத்து எழுந்தன. இராவணன் ராக்ஷசர்களைக் கடலில் தள்ளியபடியால் அவர்கள்

எழவழியில்லை. இராவணவதம் ஆன பிற்பாடுகூட வரம் கேட்கும் வ்யாஜத்தாலே எல்லா வானரர்களையும் பகவான் எழுப்பினான் என்று வரலாறு.

இந்த இடத்தில் ஜடாயு ஒருவரை இழந்தது அவன் திருவுள்ளத்தில் புண்பட்டதாகச் சொல்வதுண்டு. *தவி- பக்ஷிஜ்வர: தாபம். விஜ்ஜ்ர:* பக்ஷிவிஷயமான தாபத்தோடு, ப்ரமுமமாத - சந்தோஷப்பட்டான்.

**ராஜ்யாத் ப்ரஹ்ம்ஸ : வனேவாச: சீதாநஷ்டா ஹதோத்விஜ:
ஈத்ரீசீயம் மமாலக்ஷ்மீ: நிர்தஹேதபி பாவகம்**

என்று ஜடாயு விஷயமாக இராமன் திருவுள்ளத்தில் புண்பட்டான் என்பது தெளிவாகக் கூறப்படுகிறது. இதற்கு மாறானது கிருஷ்ணாவதாரம். பூமியில் உள்ளவர்களை அழிப்பதற்கே அவன் அவதரித்திருக்கிறான்.

***"நீ பாரத அமரில் யாவரையும் நீ நாக்கிப்
பூபாரம் தீர்க்கப் புரிந்தாய்! முயல் வண்ணா!
கோபாலா! போமேரே! கோவிந்தா! நீ யன்றி
மாபாரதம் அகந்த மந்தார்கொல் வல்லாரே?"***

கிருட்டிணன் தூதுச்சருக்கம் - 34

என்று சகாதேவன் இவ்வுண்மையை வெளியிட்டான். யாதவர்களையும் அழிக்க ஆலோசித்து, ஒருவனுக்கு ஸ்திரி வேஷம் போட்டு ரிஷிக் கூட்டத்தில் சென்று இவனுக்குப் பெண் பிறக்குமா? ஆண் பிறக்குமா என்று கேட்க வைத்து, உலக்கை பிறக்கப்போகிறதென்று சாபம் அடைய வைத்து அப்படியே இரும்பு உலக்கை பிறக்க ஒருவருக்கொருவர் அதனால் அடித்துக் கொண்டு மடிகிறார்கள். பூபாரம் தீர்ந்ததும் பகவான் மகிழ்கிறான். க்ஷண காலத்துக்குமேல் ஓரிடத்திலும் இருக்கவொட்டாத நாரதருக்கு அவர் வேண்டுகோளின்படி துவாரகையில் தன்னோடு இருக்க வைத்திருக்கிறான். இப்படிப்-பட்ட கண்ணன் தன் இனத்தாரைக் காக்கக் கூடாதா என்றால் காக்கவில்லை. அவன் சம்ஹார மூர்த்தியாக விளங்குகிறான் அல்லவா? இப்படிப்பட்ட மேலே சொன்ன மஹிமையுடன் கூடின உன் திருமேனியைப் பார்க்க வேண்டும் என்று ஆசை என்று அர்ஜுனன் விச்வரூப தரிசனத்தை விரும்பியிருக்கிறான்.

இராமாவதாரத்தில் இராமன் சீதையைப் பிரிந்து புலம்பும் பொழுது,

**"ஹ்ருதாம் ம்ருதாம் வா ஸௌமித்ரே ந தாச்யந்தி மமேச்வரா: |**
**ததாரூபாம் ஹி வைதேஹீம் ந தாச்யந்தி யதி ப்ரியாம் ||"**

வா.ரா.ஆரண்ய-64-71

**"நாசயாமி ஜகத் ஸர்வம் த்ரைலோக்யம் ஸசராசரம் |**
**யாவத்தர்சனமஸ்யா வை தாபயாமி ஸ சாயகை: ||"**

வா.ரா.ஆரண்ய-64-72

என்று சீதையை எந்தப் புன்முறுவலோடு நான் பிரிந்து சென்றேனோ அந்தப் புன்முறுவலோடு கூடக் கொண்டு வராமற் போனால் இவ்வுலகத்தையே நாசமாக்கி விடுவேன் என்று இராமன் சொன்னான். ஆனால் இராமன் அங்கு விச்வரூபத்தைக் காட்டவில்லை. இங்கு அர்ஜுனனோ அத்தகைய ரூபத்தைப் பார்க்க ஆசைப்படுகிறான். "*ஐச்வரம் ரூபம் த்ருஷ்டுமிச்சாமி*" என்பது முக்கியமாகக் கவனிக்க வேண்டியது. இப்படிக் கேட்டதும் பகவான், இந்த லோகத்தில் இப்படியும் நம்மைக் கிட்டிக் கேட்கப் பெறுவதே என்று மகிழ்ச்சி அடைந்து விஸ்வரூபத்தைக் காட்டுகிறான். "*ப்ரஸ்தானத்ரயம்*" (ப்ரம்ஹசூத்ரம், கீதை, உபநிஷத் என்பது வைதிகர்கள் எல்லோருக்கும் ப்ரமாணமான கிரந்தங்கள்.

***"ஈச்வரஸ் ஸர்வ பூதானாம் ஹ்ருத்தேசேSர்ஜுன திஷ்ட்டதி |***
***ப்ராமயந் ஸர்வபூதாநி யந்த்ராரூடானி மாயயா ||"***

(18-61)

என்ற ச்லோகத்தில் ஈச்வர சப்தத்தாலே சிவபெருமான் சொல்லப்படுகிறான் என்று சைவர்கள் கூறுகிறார்கள். இங்கு வைஷ்ணவர்கள்,

***"ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி சந்நிவிஷ்டோ***
***மத்த: ஸ்ம்ருதிர்-ஜ்ஞாந-மபோஹநம் ச |***
***வேதைச்ச ஸர்வை: அஹமேவ வேத்யோ***
***வேதாந்தக்ருத் வேதவிதேவ சாஹம் ||"***

(15-15)

என்று கீழ் சொல்லப்பட்ட ச்லோகத்தில் வெளிப்படையாக "*அஹம்*" என்று கண்ணன் தன்னைச் சொல்லிக்கொண்டி-

ருப்பதனாலே அங்கு சொன்ன பொருளுக்கு விரோதமில்லாமல் இங்கும் சொல்ல வேண்டியிருப்பதனாலே இங்கு ஈச்வர சப்தத்திற்குக் கிருஷ்ணன் என்றுதான் பொருள் என்று நிஷ்கர்ஷம் பண்ணியிருக்கிறார்கள். கிருஷ்ணன் யோகி. அதனால் ஈச்வர சம்பந்தியான, அதாவது சிவனுக்குரிய ரூபத்தைக் கண்ணன் காட்டினான் என்று சைவர்கள் சொல்லுகிறார்கள். *ப்ரஸ்தானத்ரையத்தையும் ஆதாரமாகக் காட்டிச் சொல்லுகிற சைவ சம்பிரதாயம் உண்டு*. அது துர்லபம். அர்ஜுனன் "*தே ரூபம்*" (உன்னுடைய ரூபம்) என்று கேட்டிருக்கிறான். கண்ணனே "*மே ரூபம்*" என்று சொல்லியிருக்கிறான். இப்படி ப்ரமாணங்கள் இருப்பதினாலே வேறு பொருள்கள் சொல்வதற்கு இடமே இல்லை என்பதைச் சொல்ல வேண்டியதே இல்லை.

அர்ஜுனன் விஸ்வரூபத்தைக் கண்டு முதன் முதலில் சொன்ன ச்லோகம்.

**"பச்யாமி தேவாம்ஸ்தவ தேவ தேஹே**
**ஸர்வாம்ஸ்ததா பூதவிசேஷ ஸங்காந் |**
**ப்ரஹ்மாணமீசம் கமலாஸநஸ்த்தம்**
**ருஷீம்ச்ச ஸர்வாநுரகாம்ச்ச திவ்யாந் ||"**

(11-15)

"*உன்னுடைய திருமேனியில் எல்லா தேவதைகளையும் காண்கிறேன்* " என்று பொருள். *அத்திக்காயில் அருமான் (கொசு) போல* என்று சொல்லுவர்கள். 10ஆம் அத்தியாயத்திற்கும், 11ஆம் அத்தியா-யத்திற்கும் ஒருவிதமான தொடர்பு உண்டு. 10ஆம் அத்தியாயத்தில் "*ருத்ராணாம் சங்கசரச்சாஸ்மி*" என்று சொல்லியிருக்கிறான். இங்கு அவன் சொன்னபடியே அவனுடைய திருமேனியில் கண்டு அனுபவித்தபடியே வாயார வாழ்த்திப் பேசுகிறான் அர்ஜுனன். "*கமலா ஸநஸ்தம்*" என்றபடி ஈசனுக்கு விசேஷணமாக்கி சுவாமி வியாக்கியானம் அருளிச் செய்திருக்கிறார். "*கமலா ஸநஸ்தம் ஈசம் - ப்ரஹ்மாவின் இஷ்டப்படி நடக்கும் சிவனைப் பார்க்கிறேன்*" என்று கருத்து. பல சித்தாந்தங்கள் உண்டு. அவற்றில் "*ப்ரதிதந்த்ர சித்தாந்தம்*" என்று ஒன்று. *மற்ற சித்தாந்தங்களில் ஒத்துக் கொள்ளப்படாத அர்த்தம் எந்த சித்தாந்தத்தில் ஒத்துக் கொள்ளப்பட்டிருக்கிறதோ அதற்குப் ப்ரதிதந்த்ர சித்தாந்தமென்று பெயர்*. தேசிகர் இரகசிய கிரந்தத்தில் இதை ஒரு அதிகரணமாக வைத்துப் பேசியிருக்கிறார்.

ஆத்மா தாரகனாய், நியாமகனாய் சேஷியாய் இருப்பவன். சரீரம் தார்யமாய், நியாம்யமாய், சேஷமாய் இருக்கும்.

**"யஸ்ய சேதநஸ்ய யத் த்ரவ்யம் ஸர்வாத்மநா ஸ்வார்த்தே நியந்தும் தாரயிதும் ச சக்யம் தச்சேஷதைகஸ்வரூபம் ச தத் தஸ்ய சரீரம்."**

இந்த சரீராத்ம லக்ஷணங்களே விசிஷ்டாத்வைத சித்தாந்தமாகும். அதனால் இது *"ப்ரதிதந்திர சித்தாந்தம்"* எனப்படும். ப்ரபஞ்சத்திற்கும் ப்ரஹ்மத்திற்கும் உள்ள தொடர்பு சரீரத்துக்கும் ஆத்மாவுக்கும் உண்டான இம்மாதிரித் தொடர்பு எம்மதத்திலும் காட்டப்படவில்லை. ப்ரமாணத்தைக் கொண்டு மதத்தை நிஷ்கரிஷம் பண்ணுவது ஒரு முறை. மதத்தை வைத்துக் கொண்டு அம்மதத்துக்குச் சேர ப்ரமாணங்களை பொறுத்துவது வேறொரு முறை. இவ்விரண்டு முறையில் ஸ்ரீராமாநுஜ சித்தாந்தம் முதல் கூறிய முறையை அனுசந்தித்ததாகும். அநேக ச்லோகங்கள் இதற்கு ஆதாரமாக உண்டு.

**"அநேக பாஹூதர வக்த்ர நேத்ரம்**
**பச்யாமி த்வாம் ஸர்வதோऽநந்த ரூபம் |**
**நாந்தம் ந மத்யம் ந புநஸ்தவாதிம்**
**பச்யாமி விஸ்வேச்வர விஸ்வரூப ||"**

(11-16)

இந்த ச்லோகத்தில் *"விஸ்வேச்வர"* என்பது மிக முக்கியமான பகுதி. அந்தம், மதியம், ஆதி இவை ப்ரம்மத்திற்கு உண்டு. அது அர்ஜுனனுக்குத் தெரியவில்லை என்று இங்கு பொருளா? அல்லது ப்ரம்மத்திற்கு அவை இல்லை என்று பொருளா? என்ற கேள்வி இங்கு பிறக்கிறது. ப்ரம்மத்திற்கு அவை உண்டு. அர்ஜுனனுக்கு அவை தெரியவில்லை என்றால் திவ்ய கண்ணைக் கொடுத்ததுக்குப் பொருளே கிடையாது. அதனால் ப்ரம்மத்திற்கே அவை இல்லை என்றால் இல்லாத வஸ்துவை எப்படி அறிய முடியும்? யாராய் இருந்தால் தான் என்ன? திவ்ய சக்ஷுஸைக் கொடுத்தால் மட்டும் இல்லாதது தெரியுமோ?

**"தேவி ! த்வந்மஹிமாவதிர் ந ஹரிணா நாபி த்வயா ஜ்ஞாயதே**
**யத்யப்யேவமதாபி நைவ யுவயோஸ்ஸர்வஜ்ஞதாஹீயதே |**
**யந்நாஸ்த்யேவ ததஜ்ஞதாமநுகுணாம் ஸர்வஜ்ஞதாயா விது:**
**வ்யோமாம்போஜமிதந்தயா கில விதந் ப்ராந்தோऽயமித்யுச்யதே ||**

(ஸ்ரீஸ்தவம் - 8)

என்று ஸ்ரீஸ்தவத்தில், ஆழ்வான் அருளிச் செய்ததை அநுசந்தித்துக் கொள்ளவும்.

விபூத்யத்யாயத்தில் கண்ணனுடைய ஐச்வர்யங்களை அவன் சொல்ல அவற்றைக் கேட்டான் அர்ஜுனன். இந்த அத்தியாயத்தில் அவற்றைக் கண்ணாலே காண வேண்டும் என்று ஆசைப்பட்டுக் கேட்க அவ்வுருவத்தைப் பகவானும் காட்டிக் கொடுக்க அர்ஜுனன் காண்கிறான். அர்ஜுனனுக்கு எப்படி திவ்ய கண்ணைக் கொடுத்து பகவான் தன்னைக் காட்டிக் கொடுத்தானோ அப்படியே ப்ரஹ்மாதி தேவதை-களுக்கும் காட்டிக் கொடுத்திருக்கிறான். இவன் எப்படி இந்த அற்புத ரூபத்தைக் கண்டு நடுநடுங்குகிறானோ அப்படியே ப்ரஹ்மாதி தேவர்களும் விஸ்வரூபத்தைக் கண்டு நடுங்கு-கிறார்கள். ஸ்ரீபாகவதத்தில்

**"ஸோऽஹம் ஸமாம்நாயமயஸ்தபோமய:**
**ப்ரஜாபதீநாமபிவந்தித: பதி: |**
**ஆஸ்தாய யோகம் நிபுணம் ஸமாஹித:**
**தம் நாத்யகச்சம் யத ஆத்மஸம்பவ: ||"**

பாகவதம் 2-6-34

**"நதோऽஸ்ம்யஹம் தச்சரணம் ஸமீயுஷாம்**
**பவச்சிதம் ஸ்வஸ்த்யயநம் ஸுமங்களம் |**
**யோ ஹ்யாத்மமாயாவிபவம் ஸ்ம பர்யகாத்**
**யதா நப: ஸ்வாந்த மதாபரே குத: ||"**

பாகவதம் 2-6-35

இராவணவதாநந்தரம் பெருமாள் வெற்றி வீரராய் இருக்கிற பொழுது ப்ரஹ்மா பெருமாளிடம் வந்து நீர் அவதரித்த காரியம் முடிந்தது இனி பரமபதத்துக்கு எழுந்தருளலாம் என்றார். உருத்திரன் அயோத்திக்குச் செல்ல வேண்டும் என்றார். ப்ரஹ்மா பரமபதத்திற்கு ஏன் போகச் சொன்னார்? என்னால் லோகத்தில் ஒரு குமாஸ்தாவுக்கு முன்பு அதிகாரி அடிக்கடி சுற்றிக்கொண்டிருந்தால் அது பிடிக்காது. அதுபோல் ப்ரஹ்மாவிற்குச் சங்கடம்.

**"*ஸர்வம் கலு இதம் ப்ரஹ்ம*" என்ற ச்ருதிக்கு அத்வைதிகள் சொல்லுகிற அர்த்தம் பின்வருமாறு:**

பழுதையையோ கயிற்றையோ கண்டுப் பாம்பு என்று மயங்கினான் ஒருவன். பிறகு அது பாம்பில்லை பூமியின் வெடிப்பு என்று எண்ணினான். அதன் பிறகு ஜலத்தின் தாரை என்று நினைத்தான். இங்ஙனம் ஒரு கயிற்றைப் பார்த்து பலவிதமாக மயங்கினான் என்று பார்க்கிறோமே இதில் உண்மை என்ன என்று விசாரித்தால் பழுதைத் தவிர வேறு எதுவுமில்லை என்பது தான் சித்தாந்தம். பழுதை என்ற ஒரு வஸ்து பாம்பாகவும், வெடிப்பாகவும், ஜலதாரையாகவும் தெரிந்ததே, அவையெல்லாம் பொய். மற்றவை இல்லை. கயிறு ஒன்று தான் உண்மை என்று தோன்றுகிறது. இதே மாதிரி, ப்ரஹ்மம் ஒன்றுதான் உண்டு. ப்ரஹ்மத்தைத் தவிர மற்றவை-யெல்லாம் அஜ்ஞானத்தாலே தோன்றுகின்றன. உண்மையில் வேறு எதுவுமில்லை. ப்ரஹ்மம் மட்டும் தான் உள்ளது. இதுதான் அத்வைதம்.

**<u>த்வைதிகள் போகிற வழி</u>:**

ராஜா, ராஷ்ட்ரம் என்று இரண்டு விஷயங்களைப் பார்க்கிறோம். ராஜா வேறு. ராஷ்ட்ரம் வேறு. ஆனாலும் ராஜா தான் இந்த ராஷ்ட்ரம் என்றால் அங்கு எப்படி அந்த ராஜாவினுடைய ஆணையால் ராஷ்ட்ரத்திற்கும் ராஜாவிற்கும் தொடர்பு சொல்கிறோமோ அப்படியே ப்ரஹ்மம் வேறு, ப்ரபஞ்சம் வேறு. ப்ரம்மத்தின் ஆணையினால் ப்ரபஞ்சம் ப்ரமஹத்தோடு தொடர்பு கொண்டு ப்ரஹ்மம் இட்ட வழக்காய் நடந்து வருகிறது. ப்ரஹ்மத்திற்கும் ப்ரபஞ்சத்திற்கும் நியாம்ய நியாமக பாவ சம்பந்தம். இது த்வைத மதம்.

**<u>சுவாமி எம்பெருமானாரின் நிர்வாகம்</u>**

இங்கு நம் சுவாமி என்ன சொல்கிறார் என்றால் அர்ஜுனன் எதைச் சொல்கிறானோ அதைத்தான் நம் சுவாமி அருளிச் செய்கிறார். ப்ரஹ்மம் பிரவேசிக்காத இடமேயில்லை. எங்கும் பரந்திருக்கிறது. அதே சமயத்தில் ஆத்மாவாயிருந்து நியமனத்தையும் செய்கிறது. ஆகாச தத்துவம் எங்கும் பரப்பி-யிருந்தாலும் அதற்கு நியமன சக்தி இல்லை. ராஜாவிடம்

நியமன சக்தி இருக்கிறது. ஆனால் அவன் எங்கும் பரந்திருப்பவனில்லை. *ப்ரஹ்மம் எங்கும் இருக்கிறது. நியமனமும் செய்கிறது. இது ப்ரஹ்மத்திற்குத் தனிச் சிறப்பு.* எல்லாவற்றிலும் ஆத்மாவாகப் பரந்து அதைத் தூண்டி நடத்துவதாலே ப்ரஹ்மத்தையும் ப்ரபஞ்சத்தையும் ஒன்றாகச் சொல்லி விடலாம். எல்லாம் ப்ரஹ்மம் என்று சொல்லத் தகுந்ததாய் இருக்கிறது என்று நம் ஸ்வாமி நிர்வகித்திருக்கிறார்.

இங்கு அர்ஜுனன் கண்ணனை, "*கிருஷ்ண:* என்று கூப்பிட வேண்டிய இடத்தில் "*அநந்த வீர்ய அமித விக்ரம விஸ்வேச்வர*" என்று இப்படியெல்லாம் அழைத்திருக்கிறான். இதில், நீ கிருஷ்ணனாக இருந்து எல்லா இடத்திலும் பரவியிருந்து அவற்றைத் தூண்டி நடத்துகிறாய் என்று பொருள்.

**"த்யாவா ப்ருதிவ்யோரிதம் அந்தரமிஹி**
**வ்யாப்தம் த்வயைகேந திசச்ச ஸர்வா: |**
**த்ருஷ்டவாSத்புதம் ரூபமுக்ரம் தவேதம்**
**லோகத்ரயம் ப்ரவ்யதிதம் மஹாத்மந் ||"**

(11-20)

இங்கு அர்ஜுனன் "*தவ*" என்று கண்ணனைக் குறிப்பதையும் "*த்யாவா ப்ருதிவ்யோரிதம். அந்தரம் வ்யாப்தம்*" என்று சொன்னதையும் கூர்ந்து கவனிக்க வேண்டும். அர்ஜுனன் எதை சித்தாந்தம் பண்ணிப் பேசுகிறானோ அதைத்தான் இராமாநுஜரும் சித்தாந்தம் பண்ணிப் பேசுகிறார்.

இங்கு சம்பிரதாய பேதமுண்டு. எல்லா வஸ்துக்களிலும் நுழைகிறது, பரந்திருக்கிறது, ஆத்மாவாய் இருந்து தூண்டுகிறது என்ற இவற்றில் ஒன்று சொன்னாலும் எல்லாவற்றிற்கும் உபலக்ஷணம்.

**"நம: புரஸ்தாதத ப்ருஷ்ட்டதஸ்தே**
**நமோSஸ்து தே ஸர்வத ஏவ ஸர்வ |**
**அநந்தவீர்யாமிதவிக்ரமஸ்த்வம்**
**ஸர்வம் ஸமாப்நோஷி ததோSஸி ஸர்வ: ||"**

(11-40)

இங்கு "*ஸமாப்நோஷி*" என்று வ்யாப்தியை மட்டும் சொன்னாலுங் கூட மற்றப் பிரமாணங்களோடு சேர்த்துச் சொல்ல வேண்டியிருத்தலால் மற்ற இரண்டையும் கூட்டிக்

கொள்ளவேண்டும். இதனால் *ஸர்வம்* என்பதால் ப்ரஹ்மத்தைத் தவிர வேறொன்றமில்லை என்பது நியாயமில்லை என்றதாயிற்று.

**இனி சம்ப்ரதாய பேதம்** :-

பலதூணுக்கு ஓர் உத்திரம் போல என்று லோக உத்தியை வைத்துக் கொண்டு ப்ரஹ்ம வ்யாப்தியைச் சொல்லு-கிறார்கள். லோக உத்தியை வைத்துக் கொண்டு ப்ரஹ்ம வ்யாப்தியைச் சொல்ல முடியாது. ப்ரஹ்மம் அது லோக விலக்ஷணமானது. "*பரந்த தண் பரவையுள் நீர் தொறும் பரந்துளன்*" (திருவாய்மொழி-1-1-10) என்று ஆழ்வார் "*தொறும்*" என்ற சொல்லால் வ்யாப்தியை வ்யாக்யானம் செய்திருக்கிறார். இங்கு அர்ஜுனனுடைய வாக்கிலும் "*ஸமாப்நோஷி*" என்று உபசர்க்கத்தைக் காணவேண்டும். இப்படிப்பட்ட ரூபத்தைப் பார்த்ததும் இவனை பக்தியாலே எப்படி அடைவது? என்று சங்கை வர

**"பக்த்யாத்வநந்யயா சக்ய அஹமேவம் விதோSர்ஜுந |**
**ஜ்ஞாதுந்த்ரஷ்டுஞ்ச தத்வேந ப்ரவேஷ்டுஞ்ச பரந்தப ||"**

(11-54)

என்று பக்தியையே பகவான் உபாயமாகக் காட்டினான். அக்கினிக்கு உஷ்ணம் போலே, ஜலத்திற்குக் குளிர்ச்சி போலே என்னை அடைவது பக்தியினாலேயே. இதுதான் என்னுடைய இயல்பு. பக்திதான் முக்கிய சாதனம் என்பதை "*விதி ப்ராப்த்யோ:*" என்று சங்கிரஹ ச்லோகத்தில் அருளிச்செய்தார் ஆளவந்தார்.

**"ஏகாதசே ஸ்வயாதாத்ம்ய ஸாக்ஷாத்க்காராவலோகநம் |**
**தத்த முக்தம் விதிப்ராப்த்யோர் பக்த்யேகோபாயதா ததா||"**

**பதினொன்றாம் அத்தியாயம் முற்றும்.**

# பன்னிரெண்டாம் அத்தியாயம்

முன்பு 11ம் அத்தியாயத்தின் ஸாரப்பொருளை அனுபவித்தோம். பகவானுக்கு அசாதாரணமான சில சிறப்புக்கள் உண்டு. அவற்றைச் சொல்லக் கேட்டான் அர்ஜுனன். கேட்ட அவனுக்கு அச்சிறப்புக்களைக் கண்ணாலே கண்டு அனுபவிக்க வேண்டும் என்று ஆசை ஏற்பட்டது. பகவானைப் பிரார்த்தித்தான். பகவானும் தன்னுடைய விஸ்வரூபத்தைக் காட்டினான் என்பது கீழ் அத்தியாயத்தின் சாரமாகும்.

கீழ் அத்தியாயத்தின் கடைசியில் "*பக்த்யா து அநந்யயாசக்ய:*" என்ற வாக்யம் காணப்படுகிறது. அங்கு ஞானம், தர்சனம், ப்ராப்தி இம்மூன்றையும் அடைவதற்கு பக்தி அவசியம் வேண்டும் என்பது பகவத் வாக்யத்தால் தெரிகிறது. அந்த ச்லோகத்தின் பொருள் ஒருவிதமாகத் தட்டுகிறது. (இடர்ப்படுகிறது) அதற்குத் தட்டாமல் பதில் சொல்ல வேண்டியிருக்கிறது.

"*அந்யோந்யாஸ்ரய தோஷம்*" என்பது ஒன்று. பைத்தியம் தீர்ந்தால் கல்யாணம், கல்யாணம் ஆனால் தான் பைத்தியம் தீரும் என்பதும், நீச்சல் தெரிந்தால் தான் தண்ணீரில் இறங்குவது, தண்ணீரில் இறங்கினால் தான் நீச்சல் தெரியும் என்பதும் இதற்கு உதாரணம் ஆகும். தன்னிடம் பக்தி உண்டானால் ஞான தர்சனப் பிராப்திகள் உண்டாகும் என்று சொல்லுகிறான். கீழே 10ஆம் அத்தியாயத்தில் "*பவந்தி பாவா பூதாநாம் மத்த ஏவ ப்ருதக்விதா:* "(10-5) என்று சகலமும் தன்னால்தான் என்று சொல்லி இருக்கிறான். இந்த இரண்டையும் சேர்த்துப் பார்க்கிற பொழுது, பகவத் கடாக்ஷம் இருந்தால்தான் பக்தி (ஞான தர்சன ப்ராப்திகள்) உண்டாகும் என்றும், பக்தி இருந்தால் தான் பகவத் கடாக்ஷம் ஏற்படும் என்றும் சொன்னால் இது அந்யோந்யாஸ்நியம் ஆகிறது. பகவானுடைய பேச்சு. இந்த தோஷம் வராமல் பகவானுடைய பேச்சுக்குப் பொருள் சொல்ல வேண்டும்.

பரமாத்ம பக்தியாவது எது? என்றால் பகவானை இடைவிடாமல் அன்போடு சிந்திக்கின்ற சிந்தனையே

பரமாத்ம பக்தியாகும். அப்படி அன்பைச் செய்கிறபோது அவசியம் பரமாத்ம விஷய ஞானம் உண்டாக வேண்டும் என்ற தெரிகிறது. பரமாத்ம விஷயமான ஞானதர்சன ப்ராப்திகளுக்-குரிய பக்தி எது என்றும் முன்பு கூறிய பக்திக்கு வேண்டிய ஞானாதிகள் எதெது? என்னும் கேள்வி உண்டாகிறது. இங்கு கேள்விக்குப் பதில் சொல்லுகிறபொழுது தேசிகர் பூர்வ ஜென்ம புண்யமும் பாகவத சஹவாசமும் காரணம் என்கிறார். இது ஆநுகூல்யம் என்றும் அத்வேஷம் என்றும் ஆறாம் அத்தியாயத்தில் சொல்லப்படுகிற பக்தி விசேஷமாகும். பகவான் சொல்கிற பக்தி லக்ஷணப்படி அதாவது, "*நாதி உஸ்ச்ரிதம் நாதிநீசம்*" என்று சொல்லப்படுகிற பக்தி இல்லை இது. திருதராட்டிரனும், சஞ்சயனும் ஒரு பள்ளியில் ஓதியவர்கள். திருதராட்டிரன் சஞ்சயனைப் பார்த்து, "எனக்கு, பகவான் என்று சொன்னால் பக்தியே ஏற்படவில்லையே" என்று கூற, அப்பொழுது சஞ்சயன் கீழே சொன்னபடி அநுகூலமான பக்தியைச் சொல்லியிருக்கிறான்.

ஞானகார்யமான பக்தி வேறு. இது ஏற்பட பூர்வமாக ஆநுகூல்யம் அத்வேஷம் என்கிற பக்தி வேறு. ஞான கார்யமான பக்தியை பரபக்தி, பரஞானம், பரமபக்தி என்று சொல்வதுமுண்டு. பக்தி முற்றுகிற போது பரஞானம் என்றும் பரமபக்தி என்றும் நிலைகளை அடைகின்றது. பரபக்தி ஆவது ஸம்ச்லேஷ விச்லேஷைக சுகதுக்கத்வம் "*யஸ்த்வயா ஸஹஸஸ் ஸ்வர்க:*" என்பது உதாரணம். பரஞானமாவது மானஸ ஸாக்ஷாத்காரம், பரம பக்தியாவது "*நச சீதா*" இத்யாதிப்படியே நின்னலால் என்றிருக்கை.

"*சூழ்விசும்பணிமுகிலுக்குக் கீழ் எல்லாம் பரபக்தி. சூழ்விசும்பணிமுகில் - பரஞானம். முனியே நான்முகன் - பரமபக்தி*" என்ற இம்மூன்றுக்கும் திருவாய்மொழியில் உதாரணம் பார்த்துக் கொள்ளலாம். அதாவது, *பரபக்தி என்பது பிரிந்த போது ஆற்றாமையும் கலந்தபோது ஆறியிருத்தலும் ஆகும்.*

**" வ்ருக்ஷே வ்ருக்ஷே ச பச்யாமி சீரக்ருஷ்ணாஜினாம்பரம்"**

வா.ரா.ஆரண்ய-39-14

**"க்ருஹீததநுஷம் ராமம் பாசஹஸ்தமிவாந்தகம்
அபி ராமசகஸ்ராணி பீத: பச்யாமி ராவண "**

வா.ரா.ஆரண்ய-39-15

**"ராமபூதமிதம் சர்வமரண்யம் ப்ரதிபாதி மே
ராமமேவ ஹி பச்யாமி ரஹிதே ராக்ஷஸாதிப"**

வா.ரா.ஆரண்ய-39-16

**"த்ருஷ்ட்வா ஸ்வப்பன கதம் ராமமுத்ப்ரமாமி விசேதன:
ரகாராதீநி நாமாநி ராமத்த்ரஸ்தஸ்ய ராவண"**

வா.ரா.ஆரண்ய-39-17

**ரத்நாநி ச ரதாஸ்சைவ வித்ராஸம் ஜனயந்தி மே"**

வா.ரா.ஆரண்ய-39-18

என்றும்

***"எம்பிக்கும் என் அன்னை தனக்கும் இறுதிக்கோர்
அம்பு உய்க்கும் போர் வில்லி தனக்கும் அயல் நிற்கும்
தம்பிக்கும் என் ஆண்மை தவிர்ந்தே தளர்வுற்றேன்
கம்பிக்கும் என் நெஞ்சு அவன் என்றே கவல்கின்றேன்"***

ஆரணிய காண்டம் - மாரீசன் வதைப்படலம் - 17

என்றும் கூறப்படுகிற மாரீசன் நிலை, சூர்ப்பணகை நிலை அடுத்து இராவணன் நிலையையும் பார்க்க வேண்டும். இராம பாணத்தாலே அடிபட்ட மாரீசனுக்கு எங்கும் இராமன் உருவமே தோன்றிக் கொண்டிருக்கிறது. இராவணன் காமவெறியினால் சீதையையே நினைத்துக் கொண்டிருக்க அவள் உருவமே எங்கும் தோன்றுகிறது. இப்படியே சூர்ப்பணகை இராமனையே நினைத்துக் கொண்டிருக்க அவளுக்கும் இராமன் உருவமே எங்கும் தோன்றுகிறது. இவ்விருவரது நிலையையும் ஓரிடத்தில் சேர்த்து கம்ப நாட்டாழ்வார் அழகுபடுத்தியிருக்கிறார்.

***"பொய்ந்நின்ற நெஞ்சிற் கொடியாள் புகுந்தாளை நோக்கி,
நெய்ந்நின்ற கூர்வாளவன். நேருற நோக்கு ; நங்காய்!
மைந்நின்ற வாட்கண் மயில்நின்றன வந்து, என்முன்னர்
இந்நின்றவ ளாம் கொல் இயம்பிய சீதை? யென்றான்"***

ஆரணிய காண்டம்-சூர்ப்பணகை சூழ்ச்சிப்படலம்-148

***"செந்தா மரைக்கண்ணொடும் செங்கனி வாயி னொடும்
சந்தார் தடந்தோளொடும் தாழ்தடக் கைகளொடும்
அந்தார் அகலத்தொடும் அஞ்சனக் குன்றம் என்ன
வந்தான் இவன்ஆகும்அவ் வல்வில் இராமன் என்றான்,"***

ஆரணிய காண்டம்-சூர்ப்பணகை சூழ்ச்சிப்படலம்-149

***"பெண்பா லொருநானிதுகண்டது பேதை நீயின்று
எண்பாலு மிலாததோர் ஆணுரு என்றி என்னே
கண்பா லுறும் மாயை கவந்நுதல் கந்த நம்மை
மண்பா லவரே கொல் விளைப்பவர் மாயை என்றான்,"***

ஆரணிய காண்டம்-சூர்ப்பணகை சூழ்ச்சிப்படலம்-150

என்று இங்கு கூறப்பட்ட மாரீசன், இராவணன், சூர்ப்பனகை இவர்களுடைய நிலையும் பரஞானத்திற்கு உதாரணங்களாகும். பரமபக்தி தடுத்தும் வளைத்தும் பேசுவது. பெரியாழ்வார் முதலானாருடைய பாசுரங்களில் விளக்கமாகப் பார்க்கலாம்.

ஒருவன் ஒரு ஞானியிடம் சென்று பகவான் என் கண்களில் படுவனா? என்று கேட்ட போது ப்ரத்யக்ஷாவகமம் காண முடியும் என்று சொல்லியிருக்கிறார். பக்தி இருந்தால் தான் பகவான் கிட்டுவான். அதற்கு அவன் ஞானியைப் பார்த்து எனக்குப் பக்தி இருக்கிறது. ஆனால் பகவான் எனக்குத் தென்படவில்லையே என்றதும் அந்த ஞானி அவனைப் பார்த்து நாளை நதிக்கு ஸ்நாநம் செய்யச் செல்வேன். நீ அங்கு வா என்றார். அப்படியே அவனும் அதிகாலையில் நதிக்குச் சென்றான். அப்பெரியார் அவனைத் தண்ணீரில் முழுகச் சொன்னார். அவன் தண்ணீரில் முழுகினபோது அப்பெரியார் அவன் தலையை எழுந்திருக்க முடியாதபடி அழுத்தினார். சிறிது நேரத்தில் அவன் மூச்சுத் திணறியது. பெரியவர் அவனை விட்டுவிட்டார். ஜலத்திலிருந்து எழுந்திருந்த அவன் திகைப்படைந்து நின்ற போது அப்பெரியவர் சொன்னார், "அப்பனே ஜலத்தில் என்னால் அழுத்தப்பட்டிருந்தபோது உன் மனம் எப்படி இருந்ததோ அதேபோல இச்சம்சாரத்திலிருந்து எழுந்திருக்கத் துடிப்புக் கொண்டவன்தான் பரமாத்மாவைச் சாக்ஷாத்கரிக்க உரியவன், உனக்கு உண்மையில் அவ்வளவு துடிப்பு இருந்திருந்தால் நிச்சயமாக நீயும் பகவானைப் பார்த்திருக்கலாம், அத்துடிப்பு உடையவனுக்கு பகவான் கட்டாயம் தன்னைக் காட்டுவான்" என்றார்.

இந்தத் துடிப்பு நிலைக்குத் தான் பரமபக்தி என்று பெயர். பரபக்தியினாலே ப்ரஹ்ம தரிசனம் ஏற்படும். பரஞ்ஞானத்தாலே ஸாக்ஷாத்காரம் உண்டாகும். பரம பக்தியினாலே ப்ராப்தி உண்டாகும்.

இதைத்தான் சங்கிரஹ ச்லோகத்தில்

**"ஏகாதசே ஸ்வயாதாத்ம்ய ஸாக்ஷாத்காராவலோகநம் |**
**தத்தமுக்தம் விதிப்ப்ராப்த்யோ: பக்த்யேக உபாயதா ததா ||"**

என்று சொல்லப்பட்டது.

இனி 12ஆம் அத்தியாயத்தின் ஸாரார்த்தத்தைப் பார்ப்போம். 12ஆம் அத்தியாயத்தில் பக்தியின் உயர்வு கூறப்படுகிறது. பக்தி உண்டாவதற்கு உபாயம். இது செய்ய முடியாதவனுக்கு ஆத்ம நிஷ்டை, பகவதாராதனம், பகவத் பக்தனிடத்தில் அதிக அன்பு இவை சொல்லப்பட்டுள்ளன.

**"பக்தே: ச்ரைஷ்ட்யம் உபாயோக்தி: அசக்தஸ்ய ஆத்ம நிஷ்டதா |**
**தத்ப்ரகாராஸ்து அதி ப்ரீதி: பக்தே த்வாதச உச்யதே ||"**

என்பது சங்கிரஹ ச்லோகம்.

பரமாத்மாவை அவனது கல்யாண குணங்களோடுகூட இடைவிடாமல் அன்போடு சிந்திக்கிற சிந்தனை பக்தியாகும். "*பக்தஸ்ஸன் மந்மநாபவ. மாமேவைஷ்யஸி*" என்று கீழே சொல்லியிருப்பதனால் பகவத்ப்ராப்திக்குச் ஸாதநம் பக்தி என்பது தெரிகிறது. பாபிகளுக்கு சுலபமாக அது ஏற்படாது. அதற்கு சுலபமான வழி ஒன்று உண்டு. அது அவனுடைய குணங்களைச் சிந்தனை செய்வது. அவன் பாபத்திற்கு அது பரிகாரமாகும். இந்த அத்தியாயத்தில் அர்ஜுனன் முதன் முதலில் ஒரு கேள்வி கேட்டிருக்கிறான்.

**"ஏவம் ஸததயுக்தா யே பக்தாஸ் த்வாம் பர்யுபாஸதே |**
**யே சாப்யக்ஷரமவ்யக்தம் தேஷாம் கே யோகவித்தமா: |"**

(12-1)

என்று "*ஏவம் ஸததயுக்தாயே*" என்ற இந்த வாக்கியத்தில் ஒருவித அதிகாரி "*யே சாப்யக்ஷரம்*" என்றவிடத்தில் வேறுவித

அதிகாரி சொல்லப்பட்டிருக்கிறார்கள். இவ்விருவருள் எவர் உயர்ந்தவர் என்பது சீக்கிரமாகப் பலனைப் பெற்று அநுபவிப்பவர் யார் என்பது அர்ஜுனனுடைய கேள்வி. இதன் கருத்து சிறிது விரிவாகப் பார்க்கலாம்.

**"மய்யாவேச்ய மநோ யே மாம் நித்யயுக்தா உபாஸதே !**
**ச்ரத்தயா பரயோ பேதாஸ்தே மே யுக்ததமா மதா: !!"**

(12-2)

**"யே த்வக்ஷரமநிர்த்தேச்யமவ்யக்தம் பர்யுபாஸதே !**
**ஸர்வத்ரகமசிந்த்யம் ச கூடஸ்தமசலம் த்ருவம் !!"**

(12-3)

**"ஸந்நியம்யேந்த்ரிய க்ராமம் ஸர்வத்ர ஸமபுத்தய:**
**தே ப்ராப்நுவந்தி மாமேவ ஸர்வபூத ஹிதே ரதா: "**

(12-4)

**"க்லேசோSதிகதரஸ் தேஷாமவ்யக்தாஸக்த சேதஸாம் !**
**அவ்யக்தா ஹி கதிர்து:க்கம் தேஹவத்பிரவாப்யதே !!"**

(12-5)

ஆறாவது அத்தியாயத்தின் சாரப்பொருளை அனுபவித்த போது இவற்றின் பொருள் கூறப்பட்டது. ஆத்ம யோகியைக் காட்டிலும் பரமாத்ம யோகி சிறந்தவன் என்றும் அருளிச் செய்திருக்கிறான். அங்கே பகவத் அபிப்பிராயம் என்ன? பரமாத்ம யோகி உயர்ந்தவனாகக் கூறப்பட்டதற்கு காரணம் யாது என்றால், ஜீவாத்மாவாகிற ப்ரயோஜனத்தைக் காட்டிலும் பரமாத்மாவாகிற ப்ரயோஜனம் சிறப்புடையதால் அந்தப் பிரயோஜனத்தைப் பெற விரும்புகிற பரமாத்ம யோகி உயர்ந்தவன் ஆகிறான். இவ்விடத்தில் அர்ஜுனனுக்குச் சந்தேகமான விஷயம் எது? தெரியாதது எது? என்பது முக்கியமான விஷயம். இங்கு சம்பிரதாயத்தில் செய்யப்பட்ட சர்ச்சையைப் பார்க்க வேண்டும். ஆசார்யனும் எம்பெருமானும் சேதனனுக்கு உபகாரர்கள். இவர்களில் யாருக்கு உயர்வு என்றால் பகவானுக்கு என்று சொல்லப்பட்டிருக்கிறது. ஆசார்யன் பகவானை உபகரிக்கிறான். பகவான் ஆசார்யர்யனை உபகரிக்கிறான். இவருள் ஆசார்யனை உபகரிக்கிற பகவானுக்கு உயர்வு உண்டு. இவ்வுயர்வு எதனால் வந்தது என்றால் பகவானைவிட உயர்ந்தவனாகிற ஆசார்யனை, அதாவது உயர்ந்த பொருளை பகவான் இவனுக்கு உபகரித்ததால் பகவான் உயர்ந்தவன் ஆகிறான் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

ஈச்வரனைப் பற்றுகை கையைப் பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி, ஆசார்யனைப் பற்றுகைக் காலைப் பிடித்துக் காரியம் கொள்ளுமோபாதி, *"ஆசார்யன் இருவருக்கும் உபகாரகன், ஈச்வரனுக்கு சேர வஸ்துவை உபகரித்தான், சேதனனுக்குச் சேஷியை உபகரித்தான்"* என்று தொடங்கி *"பகவல்லாபம் ஆசார்யனாலே" "ஆசார்ய லாபம் பகவானாலே" "உபகார்ய வஸ்து கௌரவத்தாலே" "ஆசார்யனிற் காட்டில் மிகவும் உபகாரகன் ஈச்வரன்"* என்று இவ்விஷயம் ஸ்ரீவசனபூஷணத்தில் (சூத்திரம்-937-939) நிரூபிக்கப்பட்டு இருக்கிறது. இது மாதிரி தாழ்ந்த பிரயோஜனத்தை உபகரிக்கின்ற ஜீவாத்ம யோகத்தைக் காட்டிலும் உயர்ந்த பிரயோஜனத்தை அதாவது மோக்ஷத்தை உபகரிக்கின்ற பரமாத்ம யோகம் சிறந்தது என்பதாம்.

**"யோகிநாமபி ஸர்வேஷாம் மத்கதே நாந்தராத்மநா |**
**ச்ரத்தாவாநன் பஜதே யோ மாம் ஸமே யுக்ததமோ மத: ||"**
(6-47)

என்ற ஆறாம் அத்தியாய ச்லோகத்தில் இவ்வர்த்தம் அர்ஜுனன் மனதில் ஏற்கனவே பதிந்து இருக்கிறது. *"ஏவம் ஸதத யுக்தாயே"* இதற்குப் பொருள், எம்பெருமானையே பரம பிரயோஜனமாக அடையவேண்டும் என்று ஆசைப் பட்டிருக்கிறவர்கள் என்பதாம். சுருக்கமாகப் பரமாத்ம யோகி என்று கூறலாம். *"யேசாபி அக்ஷரம் அவ்யக்தம்"* இங்கு ஜீவாத்ம யோகி சொல்லப்படுகிறான். கீதையில் முக்கியமாக கவனிக்க வேண்டியது அந்தந்த இடங்களில் பதங்களுக்கு என்ன பொருள் என்பது தான். இதுதான் நன்கு கவனித்துச் சொல்ல வேண்டியது.

*"அக்ஷரம் அவ்யக்தம் பர்யுபாஸதே"* என்ற இந்த இடத்தில் பதப்பொருள் சொல்வது மிகவும் கஷ்டம். அக்ஷர சப்தத்திற்கு சிலவிடங்களில் மூலப் பிரக்ருதி என்றும் சில இடங்களில் ஜீவன் என்றும் சில இடங்களில் பரமாத்மா என்றும் பொருள் சொல்லப்பட்டுள்ளது. இங்கு தனக்குத் தானே பிரகாசிக்கும் ப்ரத்யகாத்மாவான ஜீவன் சொல்லப்படுகிறான். இப்பொழுது விளக்கப்பட்ட விஷயம் ஏற்கனவே கீழ் அத்தியாயத்தில் அர்ஜுனனுக்குத் தெரிந்ததாகும். கீழே இப்படித் தெரிந்து கொண்ட விஷயத்தையே மீண்டும் இங்குக் கேட்டிருப்பதால் அர்ஜுனனுடைய மனதில் வேறு விதமான கருத்து இருக்க வேண்டும் என்று தெரிகிறது. அது எதுவென்றால் கீழ்ச்

சொல்லப்பட்ட அதிகாரிகளுள் எந்த அதிகாரிக்குப் பலன் சீக்கிரமாகக் கிடைக்கிறதோ அவன் சிறந்தவனாவான். அவன் யார்? என்பதைத் தெரிந்து கொள்ளவே அர்ஜுனன் இங்கு ப்ரச்னம் பண்ணுகிறான் என்று தெரிகிறது. இவ்வர்த்தம் பதில் சொல்லுகின்ற பகவத் வாக்யத்தில் ஸ்பஷ்டமாகும். "*மையா வேச்ய*" என்று தொடங்கி பகவான் பரமாத்ம யோகிக்குத் தான் சிறப்பை அதிகமாகச் சொல்லிக் கொண்டு போகிறான். பரமாத்ம யோகிக்குத் தான் பலன் சீக்கிரமாக கைபுகுகிறது என்கிறான். கிருஷ்ணனுக்கு எது முக்கிய-மென்றால் கண்ணனைத் தவிர வேறிடத்தில் மனசு போகக் கூடாது என்பது தான். "*மறந்தும் புறந்தொழா மாந்தராக*" இருக்க வேண்டுமென்று பகவத் அபிப்பிராயம். "*மந: மையாவேஸ்ய*" - நமக்குப் ப்ராப்யமான பலம் கிருஷ்ணனேதான் என்கின்ற மனத்தை என்னிடம் வைக்கவேண்டும். மேலான ச்ரத்தை வேண்டும். என்னோடு கூடவேணும் என்கிற எண்ணம் வேண்டும் என்ற பரமாத்ம யோகியைக் கொண்டாடுகிறான்.

"*யேது அக்ஷரம்*" - உன்னை உபாசிக்கிறவர்கள் எவர்? அக்ஷரத்தை உபாசிக்கிறவர் எவர்? இருவருள் சிறந்தவர் யார்? என்று அர்ஜுனன் கேட்டிருக்கிறதாக அங்குச் சொல்லப்பட்டி-ருக்கிறது. அதற்கு ஆதாரம் இங்கு நன்றாகப் புலனாகிறது. "*யேது*" என்று இங்கு சொல்லுகிற விசேஷணங்கள் எல்லாம் ஜீவாத்மாவிற்கு. ஜீவாத்மாதான் என்று சொல்வதற்கு 700 ச்லோகங்களும் பொருந்தும். வேறுவிதமாகச் சொன்னால் ஒன்றும் பொருந்தவே பொருந்தாது. இங்கு நம் சுவாமியினுடைய சூக்ஷ்ம த்ருஷ்டி அதியாச்சர்யமாகப் பிரகாசிக்கிறது. எந்த வஸ்துவிற்கு மாறுதல் இல்லையோ அதற்கு அக்ஷரம் என்று பெயர். இது முக்கிய வ்ருத்தியால் நாராயணனைச் சொல்லும். ஸ்வரூப விகாரம் ஸவபாவ விகாரம் என்று விகாரம் இரண்டு உண்டு.

காய் பழமாகிற இடத்தில் ஸ்வரூபம் சுபாவம் இரண்டும் மாறுவதைப் பார்க்கிறோம். பிரஹ்மத்திற்கும் அதன் குணங்களுக்கும் இந்த விகாரங்கள் கிடையாது. கண்ணன், பதினாறாமாயிரவர் தேவிமார்களுடன் க்ரஹஸ்தாச்ரமத்தில் இருக்கிறபோது ஒரோரு தேவியும் தன் அழகு முதலியவற்றால் செருக்குடன் இருக்கிறாள். அங்கு அவர்கள் வேண்டுமானால் செருக்காக எண்ணிக்கொள்ளலாமே ஒழிய அதனால் கண்ணனுக்கு ஒருவிதமான

விகாரமும் கிடையாதென்று சுகரோ சொல்லியிருக்கிறார். "*உள்ளூறும் சிந்தை நோய் எனக்கே தந்து*" (திருநெடுந்தாண்டகம் 23) என்கிற திருமங்கை மன்னன் பாசுரத்தில் "எனக்கே" என்ற பதத்துக்கு வியாக்கியானம் பண்ணுகிற பொழுது, "கலவி இருவர்க்கும் ஒக்குமாகில் ஆற்றாமை இருவர்க்கும் ஒவ்வாதோ? எனக்கே தந்து என்பான் என் என்னில், என்னைப் போலே அன்றியே பிறர் முகம் பார்க்க வேண்டாதபடியான ஸ்வாதந்திரியத்தை உடையவர் பிரிந்து போகையாலே அவர்க்கு இல்லை என்னுமிடம் கண்டிலையோ என்கிறாள்" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இதனால், பகவான் தன்னோடு கலக்கின்ற பொருள்களுக்கு விகாரத்தை உண்டு பண்ணுவன். ஆனால்தான் விகாரமடைய மாட்டான் என்ற பொருள் தேறி நின்றது. இப்படி அக்ஷர சப்தம் பரமாத்மாவின் சிறப்பை எடுத்துச் சொல்லுவதாக இருந்தாலுங்கூட இங்கு ஜீவாத்மாவைத் தான் சொல்லுகிறது, முன்பு பரமாத்மாவைச் சொல்லிவிட்டபடியால்.

*ஜீவனுக்கு அவிகாரத்வமாவது* - தர்ம பூதஜ்ஞானத்துக்கு சங்கோச விகாஸங்களாகிற விகாரங்கள் இருந்தாலும் ஆத்ம ஸ்வரூபத்துக்கு விகாரம் ஏற்படுவதில்லை. அதுதான் "*அவிகாரம்*" எனப்படும். "*அநிர்தேஸ்யம்*" என்ற பதத்திற்கு நம் ஸ்வாமி சொல்லுகிற வழி வேறு. மற்றப்போர் சொல்லுகிற வழி வேறு. மற்றப்பேர் சொல்லுகிற கட்சியை மறுத்துச் சொன்னால்தான் தினவு தீரச் சொன்னதாக ஆகும்.

ஜீவாத்மாவைச் சில சப்தம் சொல்லமாட்டா. ஜீவாத்மாவையோ, பரமாத்மாவையோ ஒரு சப்தமும் சொல்ல-மாட்டா என்று சிலருடைய வாதம். ஜீவனோ ப்ரஹ்மமோ சப்தத்திற்கு விஷயம் அன்று என்றால் சாஸ்திர யோநித்வாத் என்று சொல்லப்படுகிற வேதாந்த காலக்ஷேபமே செய்யக்கூடாது. கண் முதலான இந்திரியங்களால் காண முடியாததுபற்றி அவ்யக்தம் என்று சொல்லப்படுகிறது. கர்மாநுகுணமாக தேவாதி சரீரங்களுள் புகுவதால் சர்வத்ரகம் என்று சொல்லப்-படுகிறான். பரிசுத்த ஜீவன் என்னோடு ஒத்தவனாக என்னை விட்டுப் பிரியாதவனாக நானே என்று சொல்லலாம்படி இருப்பதால் என்னையே அடைகிறான் என்று சொல்லலாம். இந்த ஜீவாத்ம யோகிக்கு கஷ்டம் ரொம்ப அதிகம். காரணம் என்னிடத்திலேயே மனமில்லாததால்,

**"க்லேசோऽதிகதரஸ்தேஷாம் அவ்யக்தா ஸக்தசேதஸாம்" |**

(12-5)

என்று ஜீவாத்ம யோகியைப் பற்றிச் சொல்லிவிட்டு மறுபடியும் தன்னிடம் பக்தி செய்கிற அதிகாரிகளைச் சொல்ல ஆரம்பிக்கிறான்.

**"யே து ஸர்வாணி கர்மாணி மயி ஸந்ந்யஸ்ய மத்பரா: |**
**அநந்யேநைவ யோகேன மாம் த்யாயந்த உபாஸதே ||**

(12-6)

**"தேஷாமஹம் ஸமுத்தர்த்தா ம்ருத்யு ஸம்ஸார ஸாகராத் |**
**பவாமி நசிராத் பார்த்த மய்யாவேசித சேதஸாம் ||"**

(12-7)

**"மய்யேவ மந ஆதத்ஸ்வ மயி புத்திம் நிவேசய |**
**நிவஸிஷ்யஸி மய்யேவ அத ஊர்த்வம் ந ஸம்சய ||"**

(12-8)

**"அத சித்தம் ஸமாதாதும் ந சக்நோஷி மயி ஸ்திரம் |**
**அப்யாஸயோகேந ததோ மாமிச்சாப்தும் தநஞ்ஜய ||"**

(12-9)

எவர்கள் லௌகீக வைதீகமென்ற காரியங்களைச் செய்கிற போது பகவதாராதனமாகவே செய்கிறார்களோ அவர்களை ம்ருத்யுவாகிற ஸம்சாரக்கடலிலிருந்து பகவான் தாண்டிவிக்கிறான். இப்படி என்னிடமே மனத்தை வைத்து காரியம் செய். இப்படி பக்தியின் உயர்வு கூறப்பட்டு விட்டது. இனி உபாயத்தைப் பற்றிச் சிறிது சொல்லப்படுகிறது. *"யோக காலம் என்றும் பக்தி காலம் என்றும் யோக பக்திகளைச் செய்கின்ற காலங்களுக்கு வித்தியாசம் உண்டு. கர்மாநுஷ்டான காலமாகவோ ராஜஸ தாமஸ காலமாகவோ இருக்கக்கூடாது. உனக்கு சித்தத்தை என்னிடம் வைக்க முடியாமற் போனால் அதற்கு அப்யாஸம் பண்ண வேண்டும்"* என்கிறான்.

பகவத் சிந்தனத்தை அப்யாசத்தால் செய்கிற முறை அழகாகக் கூறப்பட்டது.

**"கருஹாத் ப்ரவ்ரஜிதோ தீர: புண்யதீர்த்த ஜலாப்லுத: |**
**சுசௌ விவிக்த ஆசிநே: விதிவத்கல்பிதாஸநே ||"**

பாகவதம் - 2-1-16

**"அப்யசேந்மநஸா சுத்தம் த்ரிவ்ருத் ப்ரஹ்மாக்ஷரம் பரம் |**
**மநோயச்சேஜ்ஜிதஸ் ச்வாஸ : ப்ரஹ்மபீஜம் அவிஸ்மரண் ||"**

பாகவதம் - 2-1-17

**"நியச்சேத்விஷயேப்யோऽஷான்மநஸா புத்திஸாரதி:|**
**மந: கர்மபி ராக்ஷிப்தம் சுபார்த்தே தாரயேத்தியா ||"**

பாகவதம் - 2-1-18

**"தத்ரைகாவயவம் த்யாயேத் அவ்யுசின்னேந சேதஸா |**
**மநோ நிர்விஷயம் யுக்த்வாதத: கிஞ்சன ந ஸ்மரேத் |**
**பதம் தத்பரமம் விஷ்ணோ: மநோ யத்ர ப்ரஸீததி ||"**

பாகவதம் - 2-1-19

**"ரஜஸ்தமோப்யாம் ஆக்ஷித்தம் விமூடம் மந ஆத்மந: |**
**யச்சேத்வாரணயா தீரோ: ஹம்தி யா தத்க்ருதம் மலம் ||"**

பாகவதம் - 2-1-20

**"யஸ்யாம் ஸந்தார்யமாநாயாம் யோகிநோ பக்திலக்ஷண: |**
**ஆசு சம்பத்யதே யோக ஆச்ரயம் பத்ரமீக்ஷத: ||"**

பாகவதம் - 2-1-21

என்று ஸ்ரீபாகவதத்தில் கூறிய ப்ரகாரத்தை இங்கு நினைவு படுத்திக் கொள்வது. "*நின்றவாநில்லா நெஞ்சம்*" (திருமொழி-1-1-4) என்றும் "*சஞ்சலம் ஹி மந:*" என்றும் மனதின் சஞ்சலத் தன்மை சொல்லப்பட்டிருக்கிறது. "*மந்திபாய் வடவேங்கடமாமலை*" (அமலநாதிபிரான்-3) என்ற இடத்தில் ஒரு ரசமான பொருள் சொல்வதுண்டு. திருமலையில் மரங்களில் சஞ்சரிக்கின்ற குரங்குகள் கனிகளைப் பறிப்பதற்காகப் பார்ப்பதுண்டு. ஒரு பழத்தைப் பார்த்து, பார்த்த அக்கனியை விட்டு வேறு ஒரு கனியை நோக்கிப் பாயுமாம். பார்த்த கனி ஒன்று, பாய்கின்ற கனி ஒன்று என்று சொல்வர். அந்த மாதிரி இல்லாமல் இருக்கிற பகவத் சிந்தநத்தில் அப்யாஸம் நிறைய வேண்டும். அப்யாசம் கூட உனக்கு இல்லை என்கிறான் அர்ஜுனனைப் பார்த்து.

***"அப்யாஸேऽப்யஸமர்த்தோऽஸி மத்கர்மபரமோ பவ |***
***மதர்த்தமபி கர்மாணி குர்வந் ஸித்தி மவாப்ஸ்யஸி ||"***

(12-10)

இங்கு சுவாமியின் வ்யாக்யான அழகைப் பார்க்க வேண்டும். அவனவனுக்குச் சேர ஆராதனத்தை அவசியம் செய்ய வேண்டும். ஸ்வார்த்த பூஜை, பரார்த்த பூஜை இரண்டையும் செய்ய வேண்டும். பரார்த்த பூஜை என்பது லோக க்ஷேமத்திற்காக. இந்த சித்தாந்தத்திற்கும் கைங்கர்யத்துக்கும் மிகவும் பொருத்தம். கீதையில் சொல்லுகிற விஷயம் உத்தர கீதையிலும் வருகிறது.

"பத்ரம், புஷ்பம், பலம் தோயம் யோமே பக்த்யா ப்ரயச்சதி |"

(9-26)

என்று கீதையில் பகவத் ஆராதநம் சொல்லப்பட்டிருக்கிறது. ஆழ்வார்கள் அநேக இடங்களில் இவ்விஷயத்தை உபதேசித்திருக்கிறார்கள்.

*"பரிவதில் ஈசனைப் பாடி விரிவது மேவலுறுவீர்*
*பிரிவகையின்றி நன்னீர் தூய் புரிவதுவும் புகை பூவே"*

(திருவாய்மொழி-1-6-1)

என்ற பாசுரத்தில் பகவான் சுலபமாக ஆராதிக்கத் தகுந்தவன் என்று உபதேசிக்கிறார் நம்மாழ்வார்.

*"கள்ளார் துழாயும் கணவலரும் கூவிளையும்*
*முள்ளார் முளரியும் ஆம்பலும் முன் கண்டக்கால்*
*புள்ளாய் ஓர் ஏனமாய்ப் புக்கிடந்தான் பொன்னடிக்கென்று*
*உள்ளாதார் உள்ளத்தை உள்ளமாகக் கொள்ளோமே"*

(திருமொழி-11-7-6)

என்று திருமங்கை ஆழ்வாரும்

"....*தூயோமாய் வந்து நாம் தூமலர் தூவித் தொழுது*
*வாயினால் பாடி மனத்தினால் சிந்திக்கப்*
*போய பிழையும் புகுதருவான் நின்றனவும்*
*தீயினில் தூசாகும் செப்பு*..." (திருப்பாவை-5) என்று ஆண்டாளும்

பகவத் ஆராதனத்தைப் பற்றிச் சொல்லியிருக்கிறார்கள். ஒன்றுமில்லாத ஏழைக்குத் தான் பத்ரம் புஷ்பம் என்று சொன்னது என்கிறார்கள். அது பொருத்தமில்லை. காசுக்காக இந்த அபார்த்தத்தைச் சொல்லக்கூடாது. அவனது சக்திக்குச் சேர செய்யவேண்டும் என்பது தான் உண்மை. சக்தியுடன் இருப்பவர்கள் க்ரஹாராதனத்திற்கு வாத்யம்கூட வைக்க வேண்டும் என்பது பகவத் அபிப்பிராயம். இது உத்தரகீதை விஷயம். "*மத்கர்ம*" என்றது இங்கு ஆலய நிர்மாணம் உத்ஸவம் போஜ்யாஸனம் விநியோகம் இது முதலானவைகள் என்று சுவாமி வ்யாக்யானம் செய்திருக்கிறார்.

**"மத்கர்ம பரமோபவ"** - "*மதீயாநி, கர்மணி, ஆலயநிர்மாண, உத்யாநகரண, ப்ரதீபாரோபண, மார்ஜந, அப்யுக்ஷண, உபலேபந, புஷ்பாஹரண, பூஜாப்ரவர்த்தந, நாம சங்கீர்த்தந, ப்ரதக்ஷிண, ஸ்துதி, நமஸ்காராதீநி தாநி, அத்யர்த்தப்ரியர்த்வேந ஆசர*" - என்பது சுவாமியின் திவ்ய சூக்தி. இப்படிச் செய்தால் அப்யாசம் படிப்படியாக வரும் என்கிறார். இது முடியாதவனுக்கு,

**"ஸர்வ கர்ம பலத்யாகம் தத: குரு யதாத்மவாந் |**

(12-11)

என்று அவனவனது கர்மாவைச் செய்கிற போது நான் இச்செயலைச் செய்கின்றவன் என்கிற எண்ணத்தையும் இன்ன பலன் வேண்டும் என்கிற பலாபிமானத்தையும் விட்டு விட்டு செய்தாலே போதுமானது என்கிறார்.

ஆத்ம சிந்தனம் பண்ணினால் பகவத் பக்தி எப்படி உண்டாகும். ஒரு உதாரணம், ஒரு ராஜகுமாரன் குழந்தையிலேயே மாதா பிதாக்களை விட்டுத் தவறிப் போய் விடுகிறான். காட்டில் வளர்ந்து வருகிற அவன் ஒரு சமயம் தன் தந்தையான ராஜாவைப் பார்க்கிற போது தன்னையும் பார்த்து அவரையும் பார்க்கிறான். தனக்கும் அவனுக்கும் உள்ள ஒற்றுமையால், இவன் "*நம் பிதா*" என்று அறிகிறான். இது போல ஆத்ம சிந்தனம் பண்ணுகிற பொழுது பரிசுத்த ஜீவாத்மாவுக்கும் பரமாத்மாவையும் காணும்படி வருகிறது.

ஆகையினால் ஆத்ம சிந்தனமும் பகவந் பக்திக்கு அடிப்படையானது என்று சொல்வதில் தவறொன்றுமில்லை. கண்ணன் தேவையிடுகிறவன் என்றும் இராமன் தேவையிடாதவன் என்றும் சம்பிரதாயத்தில் சொல்லுவதுண்டு. "*துயரமே தரு துன்ப இன்ப வினைகளாய்*" (திருவாய்மொழி-3-6-8) என்ற பாசுரத்தில் "*தயரதற்கு மகன் தன்னையன்றி மற்றிலேன் தஞ்சமாகவே*" என்ற இடத்தில் ஓர் ஐதீஹத்தை நம்பிள்ளை அருளிச் செய்திருக்கிறார். "எம்பெருமானார் திருவாராதநம் பண்ணிப் போருவது ஒரு பிள்ளையிறே! இங்ஙனே இருக்கச் செய்தே ஒரு நாள் ஒரு ஸ்ரீவைஷ்ணவர் சக்கரவர்த்தி திருமகனை எழுந்தருளப் பண்ணிக் கொண்டு வந்து கொடுத்தாராய், அவரைப் பார்த்து, இந்த "***மாமேகம் சரணம் வ்ரஜ***" என்று தேவையிடாதார் எழுந்தருளினார் என்றாராம்" என்று நம்பிள்ளை ஈடு.

"அத்வேஷ்டா ஸர்வபூதாநாம் மைத்ர: கருண ஏவ ச |"
(12-13)

என்று தொடங்கி சேதன க்ருத்யங்களை அருளிச் செய்கிறான். "ஸர்வ" ஸப்தத்திற்கு "சத்ரு விஷயத்திலும்" என்பது அர்த்தம். மற்ற இடங்களில் சொல்ல வேண்டியதில்லை. உனக்கு ஒருவன் கஷ்டங்களை உண்டு பண்ணினால் உன்னுடைய பாபம் அவன் கொடுக்கிற கஷ்டத்தின்மூலம் வருகிறது என்றும், ஒருவன் நன்மை செய்தால் நீ செய்த புண்ணியம் அவன் செய்த நன்மை மூலம் வருகிறதென்றும் எண்ண வேண்டும்.

"மைவாஸ்மான் சாத்வ்யஸூயேதா ப்ராத்ர்வைரூப்யசிந்தயா |
சுகதுக்கதோ ந சாந்யோஸ்தி யத: ஸ்வக்ருதபுக் புமான் ||"
பாகவதம் - 10-54-38

என்று பாகவதத்தில் பகவத்வசனம் காண்கிறது. ருக்மணியைத் தேரில் ஏற்றிக் கொண்டு போகும் பொழுது பின் தொடர்ந்து வருகிற மைத்துனனான ருக்மியை

"உருப்பிணி நங்கையைத் தேரேற்றிக் கொண்டு
விருப்புற்றங்கே விரைந்தெதிர் வந்து
செருக்குற்றான் வீரம் சிதையத் தலையைச்
சிரைத்திட்டான் வன்மையைப் பாடிப்பற
தேவகி சிங்கத்தைப் பாடிப்பற"

பெரியாழ்வார் திருமொழி-3-9-3)

என்று ஆழ்வார் அருளிச் செய்தபடி ருக்மியைத் தலையைச் சிரைத்து அவமானப் படுத்தினான்.

"சைலேன பத்வா தமஸாதுகாரிணம்
ச ஸ்மஸ்ரு கேசம் ப்ரபவன் வ்யரூபயத்"
பாகவதம் - 10-54-35

என்று சுகரும் அருளிச் செய்தார். அந்த சமயத்தில் பகவான் கண்ணன் ருக்மணியின் மனத்தைச் சமாதானப் படுத்துவதற்கு பலராமனை நோக்கித் தத்துவங்கள் பலவற்றை அருளிச் செய்கிறான். அங்கு,

"ஜந்மாதயஸ்து தேஹஸ்ய விக்ரியா நாத்மந க்வசித் |
கலாநாமிவ நைவேந்தோர் ம்ருதிர்ஹ்யஸ்ய குஹூரிவ ||"
பாகவதம் - 10-54-47

என்று ஞானத்தை உபதேசித்திருக்கிறான். குற்றம் செய்தவர் பக்கல் பொறையும் இத்யாதி. *"மித்ராமித்ர கதாகுத:"* - கர்மயோகம் செய்கிறவனுக்கு அமைய வேண்டிய குணங்கள் இவை. பக்தி பண்ணுகிறவனிடம் தனக்கு அதிகப் ப்ரீதி என்பதை

**"யே து தர்ம்யாம்ருதமிதம் யதோக்தம் பர்யுபாஸதே |**
**ச்ரத்ததாநா மத்பரமா பக்தாஸ்தேSதீவ மே ப்ரியா: ||"**

(12-20)

என்று பகவான் அருளிச் செய்திருக்கிறான். இந்த அர்த்தத்தை ஆளவந்தார் சங்கிரஹ ச்லோகத்தில்

**"பக்தே: ச்ரைஷ்ட்யம் உபாயோக்தி: அசக்தஸ்ய ஆத்ம நிஷ்டதா |**
**தத்ப்ரகாராஸ்து அதி ப்ரீதி ! பக்தே த்வாதச உச்யதே ||"**

என்றருளிச் செய்தார்.

**பன்னிரெண்டாம் அத்தியாயம் முற்றும்**

# பதின்மூன்றாம் அத்தியாயம்

இப்பொழுது நடக்க வேண்டியது, பதின்மூன்றாவது அத்தியாயம். 13,14,15,16,17,18 இந்த ஆறு அத்தியாயங்களும் அந்திம ஷட்கம் எனப்படும். ஒவ்வொரு (அத்தியாயத்திலும்) ஷட்கத்திலும் நமக்கு சம்சயம் ஏற்படாதபடி இந்த ஷட்கத்தினால் நிச்சயம் செய்கிறாரென்று இந்த ஷட்கத்தின் சாரம்.

ப்ரதான புருஷவ்யக்த ஸர்வேச்வர விவேசநம் கர்மதீர் பக்திரித்யாதி *"பூர்வ சேஷா அந்திமோதித:"* என்று ஆளவந்தார் சங்கரஹித்திருக்கிறார். 1 முதல் 12ஆம் அத்தியாயங்களில் நடந்த விஷயங்களையும் நன்கு சோதனம் பண்ணி இந்த ஷட்கத்தினால் அருளிச் செய்கிறான் என்று பரமாசாரியரான ஆளவந்தார் அருளிச் செய்த சங்கிரஹ ச்லோகத்தின் தாத்பர்யம் ஆகும். இப்பொழுது நடக்க வேண்டிய அத்தியாயத்தில் "தேகத்தைப் *பற்றியும். ஆத்மாவைப் பற்றியும். ஆத்மாவை அடைய சாதனங்களைப் பற்றியும். பந்தத்திற்குள் காரணத்தைப் பற்றியும்"* சங்கிரஹ ச்லோகத்தில் அருளிச் செய்திருக்கிறார்.

**"தேஹஸ்வரூபம் ஆத்மாப்திஹேது: ஆத்ம விசோதநம் |**
**பந்த ஹேது: விவேகச்ச த்ரயோதச உதீர்யதே ||"**

என்பது சங்கிரஹ ச்லோகம். இங்கு (தேகம் ஆத்மா) தேகத்தின் உண்மை நிலை ஆத்மாவை அடைய உண்மை சாதனம், சரீர சம்பந்தத்திற்குக் காரணம், ஆத்மாவையும் சரீரத்தையும் தனித்தனியாக அறிய வேண்டியவற்றையும் அருளிச் செய்திருக்கிறான் என்று ஸாரம். இங்கு தேசிகன் மூன்று ஷட்கத்தினுடைய அபிப்பிராயத்தையும் அருளிச் செய்திருப்பதாக வ்யாக்யானம் செய்திருக்கிறார்.

**ததாஹி - ப்ரதம ஷட்கம் ஹி, சாஸ்த்ரோபோத்காத**
**சாஸ்த்ராவதரணஹேதுபூத சோகநிவர்த்தக**
**ஆத்மதர்சனபாத்விகேந ஆத்மதர்ஸநஸ்யைவ**
**சாதநப்ரபஞ்சநபரசதுஷ்கேநசபிந்நம் |**

**த்விதீயம் ச ஷட்கம் ஸாதநாதிகாரி பலாதிபேத பரிகரித பக்தியோக ஸ்வரூப பரேண தநுத்பத்தி விவ்ருத்யர்த்த பரேணச, த்ருக பேதேந பிந்நம் |**

**ததா த்ருதீயம் ச ஷட்கம் த்ருகத்வயாத்மகம் |**
**தத்ர ப்ரதமாகம் ப்ரதான புருஷவ்யக்த ஸர்வேச்வர ரூபத்வ விவேசந பரம் " |**

என்று தேசிகருடைய தாத்பர்ய சந்திரிகை திவ்ய ஸூக்தி.

இனி கீதையில் ச்லோகங்களை அநுஸந்தித்து அர்த்தங்களை அநுபவிக்கலாம்.

**இதம் சரீரம் கௌந்தேய க்ஷேத்ர-மித்-யபிதீயதே |**
**ஏதத் யோ வேத்தி தம் ப்ராஹு: க்ஷேத்ரஜ்ஞ இதி தத்வித: ||**
(13-1)

*இந்த கை, கால் முதலிய அவயவத்தோடு கூடின பிண்டமானது சரீரம். அதன் உண்மையை உணர்பவனே* **க்ஷேத்ரஜ்ஞன்** *என்று சொல்லப்படுகிறான். க்ஷேத்ரத்தினுடைய உண்மையை உணர்பவன்* **க்ஷேத்ரஜ்ஞன்**. *அதாவது ஆத்மாவிற்கு* **க்ஷேத்ரஜ்ஞன்** *என்று பெயர். இந்த ச்லோகத்திற்கு சுவாமியினுடைய வ்யாக்யானம் அமைந்தது போல மற்றப் பேருடைய வ்யாக்யானம் அமையவில்லை.* வட மொழியில், அறியப்படும் பொருளுக்கு "*வேதம்*" என்றும் அறிபவனுக்கு "*வேத்தா*" என்றும் பெயர். இங்கு "*வேதம்*" "*வேத்தா*" என்று இரண்டு விதமான பொருளுக்கு இரண்டுவிதமான சொல்லைப் பார்த்தோம். அதேபோல அறியப்படும் சரீரத்திற்கு "*க்ஷேத்ரம்*" என்றும், அறிபவனாகிற ஜீவனுக்கு "*க்ஷேத்ரஜ்ஞன்*" என்றும் சொல்லப்பட்டிருப்பதைப் பார்க்க வேண்டும். *இங்கு சரீரம் வேறு ஆத்மா வேறு என்கிற உண்மையைத் தான் பகவான் அருளிச்செய்வதாக நாம் அறிய வேண்டும்.*

**"க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத | "**
(13-2)

என்ற இந்த ச்லோகத்திற்குத்தான் இன்று விஸ்தாரமாகப் பொருள் பார்க்க வேணும். உண்மைப் பொருள்களை, "*சித்து*" "*அசித்து*", "*ஈச்வரன்*" என்று மூன்று வகையில் இருப்பதாக அறியவேண்டும். உண்மைப் பொருள்களை மூன்று வகையாகப் பிரித்து சொல்கிறார்கள் விசிஷ்டாத்வைதிகள்.

"*போக்தா போக்யம் ப்ரேரிதாரம் ச மத்வா*" என்ற இந்த ச்ருதியில் ஜீவன், அசித்து, பகவான் என்கிற மூன்று பொருளும் உண்டு என்று தெரிகிறது. ப்ரஹ்மம் ஒன்றே ஒன்றுதான் உண்மையில் இருக்கும் பொருள். ஜீவன் என்றும் பரமாத்மா என்றும் இரண்டு வகையில் பிரித்துச் சொல்வது இல்லை. அந்த ப்ரஹ்மம் தான் ஜீவனாகவும், அசித்தாகவும் தோன்றுகிறது என்று அத்வைதிகளின் சித்தாந்தம். "*ப்ரஹ்ம சத்யம் ஜகந் மித்யா இதி வேதாந்த டிண்டிமக*" என்பது அவர்கள் கொள்கை. விசிஷ்டாத்வைத மதத்தில் ஜீவனும் பரமாத்மாவும் அசித்தும் தனித்தனிப் பொருள் என்று ஒத்துக் கொள்ளப்பட்டது. ஆத்மா என்கிற பொருள் ஒன்றே ஒன்று தான். ஜீவாத்மா என்றும் பரமாத்மா என்றும் இரண்டாகப் பிரித்துச் சொல்வதற்கு வழியில்லை என்பது அத்வைதிகளுடைய மதம்.

சாஸ்திரங்களைக் கொண்டு பார்க்கிற போது "*தேவ*", "*திவ்ய*", "*மனுஷ்ய*", "*ஸ்தாவரம்*" என்று பொருள் நான்கு வகையாகத் தெரிகிறது. இங்கு சரீரம்தோறும், ஜீவன் வேறு வேறாக அது ப்ரவேசித்திருப்பதாக விசிஷ்டாத்வைதிகள் சொல்கிறார்கள். அத்வைதிகளோ, பலவாறாக (தேவாதி பதார்த்தங்களாக) இருந்தாலும்கூட எல்லாச் சரீரத்திலும் இருக்கும் ஜீவன் ஒன்றே ஒன்று தான் என்கிறார்கள். அதனால் அவர்கள், "*ஏகாத்மவாதிகள்*" எனப்பட்டனர். விசிஷ்டாத்வைதிகளோ, தனித்தனி ஆத்மாவை ஒத்துக் கொண்டிருப்பதால் இவர்கள் "*நாநாத்ம வாதிகள்*" எனப்படுவர். ஒரோரு சரீரத்திலும் ஒரோரு ஆத்மா என்று விசிஷ்டாத்வைதிகள் கொள்கை. எல்லாச் சரீரத்திலும் ஒரே ஆத்மா என்பது அத்வைதிகள் கொள்கை. சரீரம் வேறு ஜீவனும் வேறு. அவற்றுள் பரமாத்மா ஒருவனே இருக்கிறான் என்பர் விசிஷ்டாத்வைதிகள். பல சரீரங்களில் ஒரு ஆத்மா இருக்கிறான் என்கிறார்கள் அத்வைதிகள். தத்வத்ரயம் விசிஷ்டாத்வைத சித்தாந்தம். ஆத்மா ஒன்றே என்பது அத்வைதம். நால்வகைச் சரீரங்களில் ஒவ்வொன்றும் எண்ணற்றவையாய் இருக்கிறன. சரீரம் தோறும் ஜீவன் வேறுபட்டவன் என்பது இந்த சித்தாந்தம். அவர்களோ சரீரம் நாலாவாக இருக்கலாம். அவற்றுள் இருக்கும் ஜீவன் ஒன்றே என்கிறார்கள். அந்தந்த சரீரம், அவற்றுள் கிருஷ்ணன் ஆத்மாவாய் இருப்பவன் என்பது அடுத்தபடி அறியவேண்டியது. இந்த மூன்றாவது ஷட்கம் ஞானத்தை அதாவது அத்வைதத்தைச் சொல்கிறதென்று

ஆதிசங்கரருடைய அபிப்பிராயம். நம் சுவாமி, கீழ்ச் சொன்ன அர்த்தங்களையே சொல்லி சொல்லாத சிலவற்றையும் உடன் சேர்த்துச் சொல்லுகிறான் பகவான் என்று இந்த ஷட்கத்தின் அர்த்தத்தைச் சொல்கிறார். கீழ் முதல் அத்தியாயத்தில் அழியும் பதார்த்தத்திற்கு (அழியக்கூடியது) கலங்கக்கூடாது. அழியாத பொருளுக்கும் கலங்கக்கூடாது என்பதை

**"அசோச்யாநந்வசோசஸ்த்வம் ப்ரஜ்ஞாவாதாம்ச்ச பாஷஸே |**
**கதாஸூநகதாஸூம்ச்ச நாநுசோசந்தி பண்டிதா: ||"**

(2-11)

என்று கூறியிருக்கிறான். அதைத்தான் இங்கு க்ஷேத்ரம் என்று அழியும் பொருளான சரீரத்தையும் க்ஷேத்ரஜ்ஞன் என்று அழியாத பொருளான ஆத்மாவையும் பேரிட்டிருக்கிறான் என்று சொல்கிறார் நம் சுவாமி. இங்கு அத்வைதிகள் என்ன பொருள் சொல்லக்கூடும் என்று அவர்கள் பக்ஷத்தை வ்யாக்யானம் செய்திருக்கிறார். நால்வகையில் இருக்கிற ஜீவனை கிருஷ்ணன் என்று தெரிந்து கொள்ளவேண்டும் என்று

**"க்ஷேத்ரஜ்ஞம் சாபி மாம் வித்தி ஸர்வக்ஷேத்ரேஷு பாரத |**
**க்ஷேத்ர க்ஷேத்ரஜ்ஞயோர் ஜ்ஞாநம் யத்த ஜ்ஞாநம் மதம் மம ||"**

(13-2)

என்ற ச்லோகத்தால் விளக்குவார்.

**ஸர்வ க்ஷேத்ரேஷு** - எல்லா (நால்வகை) சரீரங்களிலும் இருக்கிற

**க்ஷேத்ரஜ்ஞன்** - ஜீவனை,

**மாம்** - கிருஷ்ணனாக

**வித்தி** - அறிவாயாக.

இங்கு அத்வைதம் தான் சொல்லப் படுகிறது என்று அவர்கள் சொல்லுவார்கள். இங்கு முதலில் சொன்ன பொருள் நினைவுக்கு வரவேண்டும். அதாவது ஆத்மா ஒன்று என்று சொன்னது. க்ஷேத்ரேஷு என்பது பன்மை. க்ஷேத்ரஜ்ஞன் என்பது ஒருமை. இதனால் ஜீவாத்மா ஒன்று என்பது அவர்களுடைய மதத்திற்கு இந்த வாக்யம் காரணமாகக் காட்டப்படுகிறது. இங்கு பேதம் சொல்லவில்லை. அத்வைதத்தில் தான் நோக்கு என்கிறார்கள். இங்கு நம் சுவாமி என்ன சொல்கிறார் என்பதைப் பார்ப்போம். இவர் மதத்தில் பேதம் ஒத்துக் கொள்ளப்பட்டது. இவர்

பார்க்கிற வழியே வேறு. "*க்ஷேத்ரஜ்ஞம் மாம் வித்தி*" என்றிருந்தால் அத்வைதம் தான். அப்படி இல்லாமல் "*ச*" "*அபி*" என்று இரண்டு சப்தம் இருப்பதால் அப்படி சொல்வதற்கில்லை. இந்த இரண்டுக்கும் அர்த்தம் சொல்ல வேண்டும். எல்லா சரீரத்திலிருக்கும் ஜீவனையும் கண்ணனாக அறிந்து கொள் என்பது "*ச*" "*அபி*" இவற்றோடு சேர்ந்த வாக்கியத்திற்குப் பொருள். இங்கு குறிக்கப்பட்ட (உண்மை). "*ச*" காரம் எதைக் கூட்டிக் கொள்கிறது என்று கண்டால் (அநுக்த ஸமுச்சயம்) உம்மையின் அர்த்தம் தெளிவாகும். அதாவது இந்த உம்மை, சரீரத்தைக் குறிக்கிறது. "*எல்லாச் சரீரத்தையும் எல்லா ஜீவனையும் கண்ணனாகத் தெரிந்து கொள்*" என்று பொருளாகிறது. இனி உம்மையால் க்ஷேத்ரத்துக்கும் கிருஷ்ணனுக்கும் எப்படி ஐக்யம் சொல்வது என்பர். க்ஷேத்ரத்துக்கும் ஜீவனுக்கும் எப்படி சம்பந்தமோ அப்படியே கண்ணனுக்கும் ஜீவனுக்கும் (சம்பந்தம்) ஐக்கியம். இங்கு ஸ்வரூப ஐக்கியம் சொல்ல-முடியாது. சங்கராசாரியார் "*ச*" "*அபி*" இந்தச் சொற்களுக்கு அர்த்தம் சொல்லவேயில்லை. இராமாநுஜர் இவற்றிற்கு அர்த்தம் சொல்லவேண்டும் என்கிறார்.

**" எதிர்மறை சிறப்பு ஐயம் எச்சம் முற்று அளவை**
**தெரிநிலை ஆக்கமொடு உம்மை எட்டே "**

(நன்னூல் சூத்திரம் - 425)

என்பதால் இதனைத் தெளியலாம். ஆகவே ஜீவனையும் என்ற உம்மையால் சரீரத்தையும் தெரிந்து கொள் என்று புலனாகிறது. கீழே சொல்லப்பட்ட விஷயங்களைப் பார்த்தால் ஜீவனும் கண்ணனும் ஒன்று. அசேதனமும் கண்ணனும் ஒன்று என்று சொல்லப்பட்டதாகிறது. அவற்றை இங்கே சொல்லிக் கொள்ளவேண்டும்.

**"அஹமாத்மா குடாகேச ஸர்வபூதாசய-ஸ்தித: |"**

(10-20)

என்று தொடங்கி இதுவரையில் சொல்லிவந்த விஷயம் ஒருவிதம். இனிமேல் சொல்கிற விஷயம் ஒருவிதம். இங்கு இதை ஊன்றிக் கவனிக்க வேண்டும். சமஸ்கிருத பாஷையில் சாஸ்திரங்களில் சாமாநாதிகரண்யம் வையதிகரண்யம் என்று சில முறைகள் உண்டு. இவ்விடத்தில் அவற்றை அவசியம்

தெரிந்து கொள்ள வேண்டும். வாக்கியம் என்றால் என்ன? என்று கேட்டால் "*பதசமூஹ*": என்று ஒரு லக்ஷணம். "*சாமாநாதிகரண்யம்*" என்ற வாக்கியத்திற்கு இனி பொருளைப் பார்க்கலாம். பல சொற்கள் ஒரே வேற்றுமை உடையதா-யிருந்தால் அது "*சாமாநாதிகரண்யம்*" எனப்படும்.

**" பிந்ந ப்ரவ்ருத்தி நிமித்தாநாம்**
**சப்தாநாம் ஏகத்ர ஸமந்வய : ஸாமாநாதி கரண்யம் "**

என்பது இலக்கணம். **தேவதத்த:** ***யுவா. ஞானீ. ஆசார சீல:*** இந்த சப்தங்கள் எல்லாம் ஒரே வேற்றுமை உடையனவாய் இருந்து ஒரே பொருளைக் குறிப்பதால் இது சாமாநாதிகரண்ய வாக்யம் எனப்படும். அழகு, ஆசாரம், இளமை முதலிய குணங்கள் எல்லாம் தேவதத்தனிடத்தில் இருக்கிறது. தேவதத்தன் என்றால் அறிவு, அழகு, இளமை எல்லாம் இருக்கிறவன். ஆகவே ஒரே வேற்றுமையுடைய பல சொற்கள் தேவதத்த பதத்தோடு சேர்ந்திருப்பதால் எல்லாச் சொற்களும் ஒரே (அர்த்தத்தில்) விஷயத்தில் பொருந்தி இருக்கிறது. இங்கு பல சொற்களையும் அவை ஒரே வேற்றுமையாய் இருப்பதையும் எல்லாம் ஒரே பொருளைக் குறிக்கிறதையும் பார்த்தோம். 10ஆம் அத்தியாயத்தில் பல பொருள்களையும் எடுத்து நான் நான் என்று சொல்லுகிறபோது *அஹம் ரவி:, அஹம் சசீ:, அஹம் சங்கர:, அஹம் பாவக:, அஹம் மேரு:, அஹம் ப்ருகு:* என்று இப்படி சாமானாதிகரண்ய வாக்யமாகவே சொல்லியிருக்கிறான். "*அச்வத்த: ஸர்வ வ்ருக்ஷாணாம்*" (10-26) "*அக்ஷராணாம் அகாரோஸ்மி*" (10-33) என்று கூறியிருக்கிறான். இங்கு ஒரு கேள்வி. கிருஷ்ணனும் அசுவத்த மரமும் ஒன்றாக முடியுமா? அகாரமும் கிருஷ்ணனும் ஒன்றா? இங்கு இந்தப் பகுதிகளுக்குப் பொருள் சொல்வது எப்படி என்றால் இங்கு ஒரு விஷயம் தெரிந்து கொள்ள வேண்டும். "*அப்ருதக்ஸ்தித விசேஷணம்*" என்பது ஒன்று. அதாவது எதைவிட்டு எது பிரியாமல் இருக்காதோ அதற்கு "*அப்ருதக்ஸ்திதி*" என்று பெயர். ஆத்மாவை விட்டு சரீரம் பிரிந்திருக்காது. அப்படியே இந்தப் பொருள்கள் கண்ணனை விட்டுப் பிரிந்திருக்காது. கண்ணனுக்கும் மற்ற பொருள்களுக்கும் அப்ருதக்ஸ்திதி சொல்லி மற்றப் பொருள்களெல்லாம் அவனுக்கு அப்ருதக் ஸ்திதி விசேஷணமாக (அவனை விட்டுப் பிரியாதிருக்கும் பொருளாக) ஸ்பஷ்டமாக

சாமாநாதிகரண்ய வாக்யத்தாலே சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி இருக்க அத்வைதம் எப்படிச் சொல்லமுடியும்?

"*விசேஷணம்*" "*விசேஷ்யம்*" என்பதற்குச் சரியான முறையில் பொருள் தெரிய வேண்டும். அதன் பிறகு *அப்ருதக் ஸ்திதி விசேஷணம், பேதகம், பேத்யம், வ்யாவர்த்தகம், வ்யாவர்த்யம்* இவற்றையும் கவனிக்க வேண்டும். ஒரு வஸ்த்ரத்தை எடுத்துக் கொள்வோம். கறுப்பு, சிவப்பு, வெளுப்பு என்கிற நிறம் உடையதாய் இருக்கிறது. மஞ்சள் வஸ்திரம் எடுத்து வா என்று சொல்லப்பட்டிருக்கிறது. அங்கு மஞ்சள் நிறம் என்பது விசேஷணமாயும், வஸ்திரம் என்பது விசேஷ்யமாயும் இருப்பது எப்படி என்றால் மஞ்சள் என்பது வெண்மை முதலிய மற்ற நிறங்களை விலக்குகிறது. அதனால் அதாவது மற்ற வஸ்திரங்களைக் காட்டிலும் வேறுபடுத்திக் காண்பிப்பதனால் அந்த விசேஷணம் எனப்படுகிறது. வேறுபடுப்பது (வ்யாவர்த்தகம்) எதுவோ அது விசேஷணம். வேறுபடுத்தப்படுகிறது (வ்யாவர்த்யம்) எதுவோ அது விசேஷ்யம் என்று விசேஷ்ய விசேஷணங்களைப் பற்றிப் பார்த்தோம். பிறிதின் இயைபு நீக்கிய விசேஷணம்.

"*சீதோ பவ ஹநூமத:*" என்ற இடத்தில் அனுமாருக்குக் குளிர்ந்திருக்க வேண்டும் என்று பிராட்டி சங்கல்பித்தாள். இவ்விடத்தில் இலங்கையை தகிக்க வேண்டும் என்ற அர்த்தமே கிடையாது. திருவடிக்குச் சுடாதிருக்க வேண்டும் என்பதனால் இலங்கைக்குச் சுடவேண்டுமென்பது குறிப்பு. இந்த விசேஷணம் *வ்யாவர்த்தக விசேஷணம்* என்று பெயர். இனி அப்ருதக்ஸ்தித விசேஷணம், ப்ரதக்ஸ்தித விசேஷணம் என்பனவற்றைக் காணவேண்டும். **குண்டலீ. தண்டீ. புருஷ:** இது *ப்ரதக்ஸ்தித விசேஷணம்.* குண்டலமும், கம்பும் இவனோடு சேர்ந்தே இருக்க வேண்டுமென்ற கட்டாயமில்லை. **சுக்லபட:** ரக்த: பட: என்ற இந்த விசேஷணம் *அப்ருதக் ஸ்தித விசேஷணம்.* இங்கு வஸ்திரத்தினிடத்தில் உள்ள சிவப்பு, வெண்மை இவை ஒருநாளும் வஸ்திரத்தை விட்டுப் பிரிந்து நிற்கவே நிற்காது. இங்கு நம் சுவாமி இந்த வாக்கியங்களைப் பற்றி விசாரிக்கிறார். சாமாநாதிகரண்ய வாக்யமா, வையதி கரண்ய வாக்யமா? அதில் ப்ரதிக்ஸ்தித விசேஷணமா, அப்ருதக்ஸித்த விசேஷணமா? என்று விசாரிக்கிறார். அதன் பிறகு மதுப்பரத்யம் இருக்கிறதா என்று பார்க்கிறார். மதுப்பரத்யம் இல்லையென்றால் அது ப்ருதக்ஸ்தித

விசேஷணம்தான். எந்த வஸ்துவை விட்டுப் பிரியாதிருக்குமோ அது சாமாநாதிகரண்யமாகத் தான் இருக்கும். இங்கு "*ச*" "*அபி*" என்ற இரண்டையும் க்ஷேத்ரஜ்ஞ சப்தத்தோடு கூட்டிக் கொண்டு வ்யாக்யானத்தில் நன்றாக விசாரித்திருக்கிறார். சரீராத்ம பாவத்திற்குச் சேர அருளிச் செய்யப்பட்டிருக்கிற விஷயத்தையும் இங்கு கவனிக்க வேண்டும். விசிஷ்டா-த்வைதத்திற்கு, பிறர் என்னென்ன குறை சொல்லக்கூடுமோ, அவற்றையெல்லாம் இங்கு எடுத்து நன்றாகப் பரிஷ்காரம் பண்ணியிருக்கிறார் நம் ஸ்வாமி. சக்ரவர்த்தி திருமகனை வால்மீகி "*ஸ்வதோஷ பரதோஷ வித்*" என்று அருளிச் செய்தார். இந்த மதத்தில் குறையில்லாமல் போனாலும் பிறர் என்னென்ன குறை சொல்லக்கூடும் என்று பார்த்து அவற்றை-யெல்லாம் எடுத்து விளக்கியிருக்கின்றார் சுவாமி. ஆக, "*க்ஷேத்ரஜ்ஞம் ச அபி மாம் வித்தி*" என்ற இவ்விடத்தில் ஸர்வமும் அதாவது நால்வகையான சரீரங்களும் அவற்றுள் இருக்கும் ஜீவனும் கிருஷ்ணனுக்குச் சரீரம். அவை கண்ணனுக்கு அப்ருதக்ஸ்தித விசேஷணம். அவனை விட்டுப் பிரியாதிருக்கும் பொருள்கள் என்று எவன் அறிகிறானோ அவன் ஞானி. அதனால் எல்லாம் அவனது என்பதாயிற்று. என்னது என்று நாம் ஒன்றைச் சொல்லிக் கொள்ள யோக்யதையில்லை. இந்த அத்தியாயத்தில் க்ஷேத்ரம் க்ஷேத்ரஜ்ஞன் இந்தப் பதங்கள் தான் முக்கியமாக விசாரிக்க வேண்டிய பதங்கள்.

இரண்டாம் அத்தியாயத்தில் சொன்னது போராமல் இங்கு விஸ்தாரமாயும் கூடமாயும் (மறைமுகமாயும்) சொல்லுகிறான். சரீரத்திலுள்ள லக்ஷணங்களை அழகாகச் சொல்லுகிறான்.

**"மஹாபூதாநி அஹங்கார: புத்தி: அவ்யக்த மேவ ச |**
**இந்த்ரியாணி தசைகஞ்ச பஞ்சேந்த்ரிய கோசரா: ||"**

(13-5)

**"இச்சாத்வேஷ: ஸுகம் து:க்கம் ஸங்காதச் சேதநா த்ருதி: |**
**ஏதத் க்ஷேத்ரம் ஸமாஸேந ஸவிகார முதாஹ்ருதம் ||"**

(13-6)

இச்சா, த்வேஷ: சுகம் துக்கம் இவற்றை விசிஷ்டாத்வைதிகள் ஆத்ம தர்மம் என்பர். அத்வைதிகள் அப்படிச் சொல்லமாட்டார்கள். சரீர சம்பந்தத்தால் தான் அவை ஏற்படுகின்றன. சரீர கார்யமாய் ஆத்மாவிடத்தில் உண்டாகின்றன. "*சேதநாத்ருதி:*" - ஜீவாத்மாவுக்கு

ஆதாரமாய் இருக்கிறது. "*அசேதநம்*" - போக மோக்ஷங்களை அனுபவிப்பதற்குச் சாதனம் சரீரம். இது ப்ரயோஜனம். இனி ஆத்மாவை அடைவதற்கு இன்றியமையாது வேண்டுவன.

**"அமாநித்வமதம்பித்வம் அஹிம்ஸா க்ஷாந்திரார்ஜவம் |**
**ஆசார்யோபாஸநம் சௌசம் ஸ்த்தைர்ய மாத்ம விநிக்ரஹ: ||"**

(13-7)

**"இந்த்ரியார்த்தேஷு வைராக்ய மநஹங்கார ஏவ ச |**
**ஜந்ம ம்ருத்யு ஜராவ்யாதி துக்க தோஷாநுதர்சநம் ||"**

(13-8)

என்பன ஆகும். சரீரத்தைப் பற்றித்தான் இச்சையும் த்வேஷமும் ஏற்படுகின்றன. "*ஒட்டகைக்கு வேப்பிலையிடம் ஆசை*", "*வேம்பின் புழு வேம்பன்றி உண்ணாது*" (பெரியதிருமொழி-11-8-7) என்பது திருமங்கையாழ்வார் திவ்ய ஸூக்தி. சரீர சம்பந்தத்தைப் பற்றித் தான் அமாநித்வம் முதலியன ஏற்படுகின்றன. இந்த குணங்களோடு கூடி எவன் பரமாத்ம சிந்தனை செய்கிறானோ அவனுக்குத் தான் ஆத்ம க்ஷேமம் உண்டு என்கிறான்.

தேசிகர், ரகஸ்யத்ரய ஸாரத்தில் அல்பாயுசு, ரோகம், தாரித்திரியம் இவற்றைப் பிரார்த்திக்க வேணும் என்கிறார். தீர்காயுசு பாபம் செய்யக் காரணம். ஆரோக்கியம் சாஸ்திரத்தை மீறுவதற்குக் காரணம். ஐச்வர்யம் ஸர்வானர்த்தங்களுக்கும் காரணம். அர்த்தம், அநர்த்தம் என்று பஜகோவிந்தத்தில் ஆதி சங்கரர் கூறியிருக்கிறார்.

**"அர்த்தம் அநர்த்தம் பாவய நித்யம் நாஸ்தி**
**ததஸ்சுக லேசஸ்ஸத்யம் |**
**புத்ராதபி தநபாஜாம் பீதி: சர்வத்ரைஷா விஹிதாரீதி: ||"**

பஜகோவிந்தம்

**" ஜ்ஞேயம் யத்தத் ப்ரவக்ஷ்யாமி**
**யத்ஜ்ஞாத்வாம்ருதமச்னுதே |**
**அனாதிமத்பரம் ப்ரஹ்ம ந ஸத்தந்நாஸதுச்யதே ||"**

(13-12)

**"ஸர்வத: பாணிபாதம் தத்ஸர்வதோऽக்ஷிசிரோமுகம் |**
**ஸர்வத: ச்ருதி மல்லோகே ஸர்வமாவ்ருத்யதிஷ்ட்டதி ||"**

(13-13)

இவை முதல் ஜீவாத்ம விஷயம். இவை கீழே சொல்லப்-படவில்லை. இங்கு இந்த ச்லோகங்களைப் பற்றி சர்ச்சை செய்யப்படுகிறது. "*அநாதி மத் பரம் ப்ரஹ்ம*" இங்கு பதச்சேதம் எப்படி? ஜீவாத்மாவைப் பற்றிச் சொல்கிறது இந்த அத்தியாயம்.

**<u>பங்கஜோது</u>**

**"காரணங் குண ஸங்கோஸ்ய ஸதஸத்யோநி ஜந்மஸு"** ||
(13-21)

முக்குணமும் இவனைப் பிறக்கும்படி பண்ணுகிறது. இதைப் பற்றி நாளை விவரமாகப் பார்க்கலாம்.

<u>விவேகஸ்ய:</u>

தேகயாத்திரைக்கு வேண்டிய விஷயங்களை அதற்குச் சேர விசாரிக்கிறோம். அரிசி விலை முதலியன பற்றி விசாரிக்கிறோம். அதுமாதிரி ஆத்மக்ஷேமத்திற்குச் சேர விசாரிக்க வேண்டிய அம்சங்கள் சரீரம் வேறு ஆத்மா வேறு என்பன போன்ற விஷயங்கள். பகவானுக்குச் சரீரம் எல்லாம் என்று அறிகிறபோது நமக்கு ஆத்மக்ஷேமத்திற்கு குறைவில்லை.

**பதின்மூன்றாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினான்காம் அத்தியாயம்

14வது அத்தியாயத்தின் ஸாரப்பொருளை இப்பொழுது அனுபவிக்க வேண்டும்.

**"குணபந்த விதாதேஷாம் கர்த்ருத்வம் தந்நிபந்த்தநம் |**
**கதித்ரய ஸ்வமூலத்வம் சதுர்தச உதீர்யதே ||"**

என்பது சங்கிரஹ ச்லோகம். 13ஆம் அத்தியாயத்தில், ஜீவன் ஒரோரு ஜன்மாவிலும் பிறப்பதற்குக் காரணம் இந்த குணசங்கம் என்று அருளிச் செய்திருக்கிறார்.

**"காரணங் குண ஸங்கோऽஸ்ய ஸதஸத்யோநி ஜந்மஸு" ||**
(13-21)

என்ற ச்லோகம் இதற்குப் பிரமாணம். முக்குணங்களும் இந்த ஜீவனை எப்படி பந்தப்படுத்துகிறது என்பதை இந்த அத்தியாயத்தில் விஸ்தாரமாக அருளிச் செய்கிறான் பகவான். குணங்களிடம் கர்த்ருத்வத்தை வைக்க வேண்டும் என்று கூறுகிறான். மூன்று விதமான பலன்களையும் அருளிச்செய்கிறான். இவ்விஷயங்களை கீதா ச்லோகங்களைக் கொண்டு அனுபவிக்கலாம்.

**"பரம்பூய: ப்ரவக்ஷ்யாமி ஜ்ஞாநானாம் ஜ்ஞாந முத்தமம் |**
**யஜ்ஜ்ஞாத்வாமுநய: ஸர்வே பராம் ஸித்திமிதோ கதா: ||"**
(14-1)

**"இதம் ஜ்ஞாநம் உபாச்ரித்ய மம ஸாதர்ம்ய மாகதா: |**
**ஸர்க்கேऽபி நோபஜாயந்தே ப்ரளயே ந வ்யதந்தி ச ||**
(14-2)

இவற்றில் சரீரம், ஆத்மா என்ற இரண்டு உண்மைப் பொருளை உணரவேண்டும். ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற முக்குணங்களும் ஆத்மாவிற்கு நேருக்குநேர் இருக்கும் குணங்கள் இல்லை. இப்படி ஆத்ம குணமாக இல்லாமல் இருந்தபோதிலும் இவை சரீர சம்பந்தத்தால் ஒரு விதமாக ஆத்மாவிற்கு வந்து சேரும் என்ற உண்மையை முதன் முதலில் நம் உள்ளத்தில் கொள்ள வேண்டும். சுருக்கமாகச் சொன்னால் இம்முக்குணங்களைப் பற்றிய ஞானம் முதலில் நமக்கு உண்டாக வேண்டும். மகான்கள் இந்த ஞானத்தால் நல்ல கதியைப் பெற்றிருக்கிறார்கள்.

**"ஸத்வம் ரஜஸ் தமயிதி குணா: ப்ரக்ருதி சம்பவா: |
நிபத்நந்தி மஹாபாஹோ தேஹே தேஹிநம் அவ்யயம் ||"**
(10-5)

என்று தொடங்கி அவற்றைச்சொல்ல ஆரம்பிக்கிறான் பகவான். இங்கு முதன் முதலில், முதலில் உள்ள இரண்டு ச்லோகங்களுக்கு விஸ்தாரமாகப் பொருளைப் பார்க்கலாம். நம் சுவாமி மிகவும் ஊன்றிப் பார்த்துப் பொருள் சொல்லியிருக்கிறார். முதலில் இந்த ச்லோகத்தில் இருக்கும் சங்கடம் தெரிய வேண்டும். "*பரம்*" என்ற சொல்லுக்கு "*உத்க்ருஷ்டம்*" என்றும் "*வேறுபட்டது*" என்றும் இரண்டு பொருள்கள் உண்டு. மேல் "*உத்தமம்*" என்று இருப்பதால் "*பரம்*" என்பதற்குச் சிறந்தது என்று பொருள் சொல்ல இயலாது. இனி அந்யம் என்று பொருள் சொன்னால் பூய: என்பது பொருந்தாது. "*பரம்*" என்ற சொல் உத்க்ருஷ்டம் என்ற பொருளைச் சொல்லாமல் "*அந்யம்*" என்ற பொருளைச் சொல்கிற-தென்றால் பூய: என்பது பொருந்தாதே. அதை எப்படி நிர்வகிக்கிறது? என்ற கேள்வி வர, அதை ஆச்சரியமாக விளக்கி-யிருக்கிறார் நம் சுவாமி. கீழ்ச்சொன்ன விஷயம்தான். ஆனாலும் அந்யம் தான்.

க்ஷேத்ரத்தையும், க்ஷேத்ரஜ்ஞனையும் 13வது அத்தியாயம் சொல்கிறது. க்ஷேத்ரம் என்பது அசித்தைத்தான் சொல்லும். அதில் ஸத்வாதி குணங்கள் ஒருவிதமாய் அடங்கி இருக்கின்றன. ஆகவே "பூய:" என்பதும் மீண்டும் "பரம்" "அந்யம்" என்றும் சொன்னது, ஒருவிதமாகப் பொருத்தமாகிறது. ப்ரக்ருதியில் அடங்கி இருப்பதால் ஸத்வாதிகளை "பூய:" என்றும் சொல்லி-விடலாம். கீழ் ப்ரக்ருதியைச் சொல்லி இங்கு வேறுபட்ட குணங்கள் இருப்பதாகச் சொல்வதால் அதை அந்யம் என்றும் சொல்லிவிடலாம். "*ஆயுதாநாம் அஹம் வஜ்ரம்*" என்ற இடங்களில் "*சக்கரம்*", "*பாஞ்சஜந்யம்*" முதலியவற்றோடு எப்படிப் பொருத்தமாகச் சொல்வது. இருந்தாலும் அங்கு மற்ற ஆயுதங்களில் வஜ்ராயுதம் சிறந்தது என்று எப்படிப் பொருள் சொல்கிறோமோ அவ்வாறே இங்கு ஞானத்தில் "*பரமாத்ம ஞானம்*" உயர்வாக இருக்கிறதென்று கொள்ள வேண்டும். *ஸத்வம் முதலிய மூன்று குணங்களில் ஸத்வமாய் இருக்கிறேன்* என்று கீழே சொல்லப்-பட்டிருக்கிறது. ப்ரக்ருதத்தில் இங்கு அது கூறப்பட்டிருத்தலால்

"*இத:*" என்பதற்கு "*ஸம்ஸார மண்டலாத்பரம் ஸித்திம் அவாப்தா:*" (ஸம்ஸார மண்டலத்திலிருந்து மேலான மோக்ஷத்தை அடைந்துள்ளார்கள்) "*இந்த ஸம்ஸாரத்தைப் போக்கி*" என்று பொருள் கூறப்பட்டது.

**மம ஸாதர்ம்யம் ஆகதா:** என்பது "*பரமம் ஸாம்யம் உபைதி*" என்ற மோக்ஷத்தைச் சொல்கிறது. இந்த ச்ருதி, "*என்னோடு ஒத்தவர்களாக ஆகிவிடுகிறார்கள்* ", "*கர்ம சம்பந்தம் நன்கு விட்டுப்போனவுடன் பகவத் சாதர்ம்யத்தைப் பெறுகிறான்*" என்று சொல்கிறது. கீழ் ஏழு லோகம், மேல் ஏழுலோகம் இந்த 14 லோகங்கள் கொண்டதற்கு "*அண்டம்*" என்று பெயர். ஸத்வகுணம் பெற்ற ஜீவன்கள் பரமபதத்தை அடைந்து ஸ்ருஷ்டி ப்ரளயம் இவை இல்லாமல் இருக்கிறார்கள். இந்த அண்டத்திற்குட்பட்ட ஜீவன்களுக்கு அவை (ஸ்ருஷ்டி, ப்ரளயம்) உண்டு. ஸத்வ குணம் முதலிய மூன்றையும் நன்றாக அறிவாயே ஆனால் மோக்ஷத்தைப் பெறுவாய் என்கிறான் பகவான்.

**"மமயோநிர் மஹத் ப்ரஹ்ம தஸ்மிந் கர்ப்பம் ததாம்யஹம் |**
**ஸம்பவ: சர்வ பூதாநாம் ததோ பவதி பாரத ||"**

(14-3)

**"ஸர்வயோநிஷு கௌந்தேய மூர்தய: சம்பவந்தி யா: |**
**தாஸாம் ப்ரஹ்ம மஹத் யோநி: அஹம்பீஜப் ப்ரத: பிதா ||"**

(14-4)

இந்த இரண்டு ச்லோகங்களாலும், *நான்தான் இந்த ஜீவன்களை முக்குணங்களால் கட்டுகிறேன்* என்கிறான். "*ஸத்வம், ரஜஸ், தமஸ்*" என்று தொடங்கி தத்துவங்களை அழகாக அருளிச் செய்கிறான். அவற்றை அவசியம் அறிய வேண்டும். ஓர் உதாரணம். தங்கக் கட்டியோ சவரனோ நம்மிடம் இருக்கிறது. அவற்றைக்கொண்டு ஆபரணமோ பாத்திரமோ செய்கிறோம். அவற்றிலிருந்து பாத்திரம், ஆபரணம் இவை உண்டாகிறாப் போலே அசேதனங்களுக்கெல்லாம் மூலமாக மூலப்ரக்ருதி என்று ஒன்று உண்டு. அவை ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற இம்மூன்றினுடைய கூட்டம், இதற்கு "*ஸ்வரூபாநுபந்தி*" என்று பெயர். புஷ்பங்களில் மணம் இருப்பது போல ப்ரக்ருதியிடம் சேர்ந்தே முக்குணம் இருக்கும். அரும்பு மலரும்போது ஆரம்பத்தில் எப்படி மணம் வீசுகிறதோ அப்படியே ஸ்ருஷ்டி

காலத்தில் கார்யம் (ப்ரபஞ்சம்) பிரகாசிக்கும்பொழுது இக்குணங்கள் நன்கு விளங்கும். ப்ரக்ருதியிடத்திலும் முக்குணங்கள் உண்டு. ப்ரக்ருதியின் காரியங்களிடத்திலும் முக்குணங்கள் உண்டு. ஆனால் ப்ரக்ருதியில் இருக்கும்போது அரும்பில் வாசனைபோலே புலப்படுவதில்லை. கார்யங்களில் இருக்கும் போது மலர்ந்த பூவில் வாசனைபோலே நன்றாக விளங்கும். இப்படிப்பட்ட குணங்கள் இந்த ஜீவனைப் பந்தப்படுத்துவதால் மேலும்-மேலும் இவனுக்குப் பிறப்பு உண்டாகிறது. இதை

**"ஸத்வம் ரஜஸ்-தம இதி குணா: ப்ருக்ருதி ஸம்பவா: |**
**நிபத்நந்தி மஹாபாஹோ தேஹே தேஹிநம் அவ்யயம் ||"**

(14-5)

என்று கூறுகிறான்.

லோகத்தில் சில துறைகளில் இருந்து நாம் ஜெயம் பெற வேண்டுமென்று விரும்புகிறோம். அதுபோல இவன் நம் சரீரத்திலுள்ள முக்குணங்களையும் ப்ரக்ருதியையும் எவன் ஜெயிக்கிறானோ அவன்தான் ஜெயசீலன், வீரன். மற்றவற்றில் ஜெயிக்கின்ற ஜயம், ஜயம்அன்று என்று கூறுகிறான் பகவான். இது கிருஷ்ண ஸித்தாந்தம்.

***"நிறப் பெரும் படைக்கலம் நிறத்தின் நேர் உற,***
***மறப் பயன் விளைக்குறும் வன்மை அன்றுஅரோ***
***இறப்பின், திரு எலாம் இழப்ப எய்தினும்,***
***துறப்பிலர் அறம் எனல் சூரர் ஆவதே."***

அயோத்தியா காண்டம் - தைலம் ஆட்டு படலம் - 29

என்று கம்பர் கூறியதையும் இங்கு ஒப்பு நோக்கவேண்டும். சரீரத்தில் முக்குணங்கள் அடங்கி இருக்கின்றன. அவை, மேலுக்குப் பார்க்கின்றபோது தெரியாது. கார்ய சமயத்தில் தெரிந்துகொள்ளலாம். இக்குணங்கள்தான் நம்மை பந்தப்படுத்துகின்றன. இங்கு "*மஹாபாஹோ*" என்பதற்கு இரண்டு பொருள். ஒன்று, "*ஏ அர்ஜுனா! நீ வில்லாளி என்று பெயர்பெற்றவன்*". மற்றது, "*இந்த குணங்களை ஜெயிக்க உன் தோள் வலிமை போராது.*" என்பதாகும்.

**"ஸ்நேஹோ மே பரமோ ராஜந் த்வயி நித்யம் ப்ரதிஷ்டித: |**
**பக்திச்ச நியதா வீர பாவோ நாந்யத்ர கச்சதி ||"**

வா.ரா.உத்தர காண்டம் -40-15

என்ற இந்த ச்லோகத்தில் *"வீர"* என்பதற்கு தோற்ற துறை இருக்கும்படி என்று வ்யாக்யானம் செய்ததுபோல இங்கும் கூறப்பட்டது. இந்த ச்லோகத்தின் பொருள் சிறிது விரிவாகக் கூறலாம். எளிமைபற்றி உண்டாகும் அன்பு சிநேகம். மேன்மை பற்றி உண்டாகும் அன்பு பக்தி என்று சிநேக பக்திகளுக்கு லக்ஷணம். *"வீர பாவோ நாந்யத்ர கச்சதி"* இராவணனை வென்ற நமக்கு வீரம் குறைவோ? அதனால் இவரை (அனுமாரை) அழைத்துச் செல்லலாம் என்று நீ எண்ணாதே. என்னை உன்னால் வெல்ல முடியாது. *"கூடாரை வெல்லும் சீர்க் கோவிந்தா"* நீ. *கூடுவோரை வெல்ல முடியாது.* இரண்டாவதாக *மஹாபாஹோ* என்பதற்கு, ஹே, அர்ஜுனா! எப்படி நீ துருபதனைக் கட்டி வைத்தாயோ அப்படியே இக்குணங்கள் ஆத்மாவைக் கட்டுகின்றன என்று உதாரணபரமாகவும் சொல்லலாம். நமக்குச் சத்ருக்கள் இக்குணங்கள் தான். இவற்றை ஜெயிக்க உபாயம் பக்திதான் என்று பகவான் சொல்லப்போகிறான். ஸத்வம் எப்படிக் கட்டுகிறது என்றால்,

**"தத்ர ஸத்வம் நிர்மலத்வாத் ப்ரகாசகம் அநாமயம் |**
**ஸுக சங்கேந பத்நாதி ஜ்ஞாந சங்கேந சாநக ||"**

(14-6)

என்று தொடங்கி அருளிச் செய்கிறான். இந்த சரீரத்தில் ஸத்வ ரஜஸ் தமோ குணங்கள் என்கிற மூன்றும் உண்டு. தமோ குணம் நூறு மடங்கு. ரஜோ குணம் பத்து மடங்கு. ஸத்வ குணம் ஒரு மடங்கு என்று இருக்கிறதாக வைத்துக் கொள்வோம். இங்கு ஒன்று தெரியவேண்டும். பத்து மடங்குள்ள ரஜோகுணமும், நூறு மடங்குள்ள தமோ குணமும் பூஜ்ய ஸ்தானத்திற்கு வரவேண்டும். அப்பொழுது தான் ஸத்வ குணம் கார்யகரமாகும். மிச்ர ஸத்வம் இவனைக் கட்டுகிறது. *"மலம்"* என்பதற்கு தமஸின் ஸ்வபாவம் (இயல்பு) சுக விரோதியான ஸ்வபாவம் என்று பொருள். தமஸ் என்ற இக்குணத்திற்கு மலம் என்ற ஆபரணம் கிடையாது. எவனுக்கு ஸத்வ குணம் மேலோங்கி நிற்கிறதோ அவனுக்கு நோயே இருக்காது. நம் உடலில் உள்ள குணத்தை நாமே அறிந்து கொள்ளலாம். ஒவ்வொன்றையும் உள்ளபடி எவன் உணர்கிறானோ அவனுக்குச் ஸத்வம் உண்டு என்று அறியலாம்.

அந்த ஸத்வம் சுகம், ஞானம் இவற்றில் புத்தியை உண்டாக்குகிறது. அவற்றின் சாதநத்தைக் கொண்டு அவற்றின் பலத்தை அனுபவிக்கப் பிறக்கின்றான். இப்படி மிஸ்ர ஸத்வம் இவனைக் கட்டுகிறது என்பதை "*தத்ரஸத்வம்*" என்றதால் கூறுகிறான்.

இராவணன் சீதாபகாரத்தைச் செய்ய வேணும் என்றால் அவனுக்கு எவ்வளவு தமஸும் ரஜஸும் இருக்க வேண்டும். அவன் சேதுபந்தனம் பண்ணின சமயம் வேத பாராயணம் பண்ணச் சொல்கிறான். அதற்குக் காரணம் சொற்ப ஸத்வ குணம் இருந்தது தான். இது கடப்பாரையை விழுங்கி சுக்குக் கஷாயம் சாப்பிடுவது போன்றது. இங்கு இரண்யனைப் பற்றி ஒரு வரலாறு. இரண்யன் ஒருநாள் ப்ரகலாதனை அழைத்து "உன்னைக் கொல்ல எவ்வளவோ முயன்றேன் உனக்கு அதிருப்தி ஏற்படவேயில்லை. நான் செய்த செயல் ஒன்றும் உன்னைக் கொல்லவில்லை. என் செயல் கார்ய கரமாகாமல் போய்விட்டது என்று சொல்லி மேலும். நீ மரணமடையாதவன். என் கார்யம் பலிக்கவில்லை. நீ மஹான் " என்று கூறி சில காலம் வெறுமென இருந்திருக்கிறான். இதுவும் ஸத்வ குண கார்யம். இங்கு தாத்பர்யம் இன்னும் வரவில்லை. பார்க்கலாம். ஒருவன் பாபத்தையே செய்கிறான். புண்யத்தையே செய்கிறானென்று சொல்லமுடியாது. இரண்டும் சேர்ந்து செய்திருப்பன். இவற்றிற்கு ப்ராரப்த கர்மாக்கள் என்று பெயர். குணமுள்ள பத்தினி, குணமுள்ள பிள்ளை, அளவில்லாத தனம், மதிப்பு இவையெல்லாம் போய் விடுகின்றன. அப்பொழுது ஜனங்கள் விசாரிக்க வருகிறார்கள். அப்பொழுது பேசிக் கொள்கிற வார்த்தையில் ப்ராரப்த கர்மம் என்று சொல்லக் கேட்கிறோம். உயர்வில் விசாரிக்கிற பொழுது உனக்கு இப்படி வந்திருக்கிறதே இதற்கு ப்ராரப்த கர்மம் தானே காரணம் என்றால் யாராவது இசைவார்களா? இங்குதான் கண்ணன் சொல்வது நன்கு புரிய வேண்டும். ப்ராரப்தம் என்பதைக் கஷ்டத்தில் மட்டும் சொல்லக்கூடாது. சுகத்திலும் அப்படியே சொல்ல வேண்டும். கஷ்டம் பாப கர்ம பலன். சுகம் புண்ய கர்ம பலன். இப்படி அறிந்தால் தான் அவற்றில் ருசி ஏற்படாது என்கிறான்.

***"சமது:க சுகம் தீரம் ஸோऽம்ருதத்வாய கல்பதே ||"***

(2-15)

என்று 2ஆம் அத்தியாயத்தில் அருளிச் செய்திருக்கிறான். பத்து வருஷம் வாழ்ந்தவனுமில்லை, கெட்டவனுமில்லை என்று லோகத்தில் சொல்லுவார்கள்.

***"திக்கு நோக்கிய தீவினைப் பயன் எனச் சிந்தை***
***நெக்கு நோக்குவோர், நல்வினைப் பயன் என நேர்வோர்,***
***பக்கம் நோக்கல் என்? பருவரல் இன்பம் என்றிரண்டும்***
***ஒக்க நோக்கிய யோகரும் அருந்துயர் உழந்தார் "***

அயோத்தியா காண்டம் - நகர் நீங்கு படலம் - 211

என்ற பாடலில் கம்பர் ஸம்ஸாரிகளும் யோகிகளும் சுக, துக்கங்களில் எப்படி இருப்பர் என்பதை உணர்த்தி இருக்கின்றார். "*ஸுக சங்கேந பத்நாதி*" என்பதைப் பார்த்தோம். இனி "*ஞான சங்கேண*" என்று கூறியதைப் பார்ப்போம். லோகத்தில் ஞானத்தையே பலம் என்று விரும்பியிருக்கின்ற அதிகாரியும் உண்டு. விஷயாதிகளில் ஆனந்தம் ஏற்படுவது போல ஞான-ரசத்தில் எல்லோர்க்கும் ஈடுபாடு ஏற்படாது. இருந்தாலும் சிலருக்கு ஞானமே போதுமென்று திருப்தி ஏற்படுகிறது. "*ந போதாத் அபரம் சுகம்*" என்றது. இதற்குப் பிரமாணம் சங்கீதம் கேவலம் சப்தம்தான். அது லக்ஷணத்தோடு கூடியிருந்தால் எவ்வளவு ஆகர்ஷகரமாய் இருக்கிறது. சப்தத்திற்கே இவ்வளவு ரஸ்யதை இருக்குமானால் அர்த்தத்தில் ஆராய்ச்சி ஏற்பட்டால் எவ்வளவு சுவையாக இருக்கும். இப்பொழுது பெருமாள் புறப்பாடு ஆகின்றது. கீதையாகிற ஞானயக்ஞத்தில் நாம் இருக்கிறோம். நாம் இப்படியே இருந்தால் நமக்கு ஜென்மாந்திரம் உண்டு. காலக்ஷேபம் சொல்லிக் கொண்டிருக்கிறது (புறப்பாட்டுக்கு) கோயிலுக்குப் போகத் தடையாய் இருக்கிறது. இது தான் ஞானசங்கம். இது ஸத்வ குணமானாலும் இதற்குப் பிறப்பு உண்டு. இனி ரஜோகுணத்தைப் பற்றிச் சொல்கிறான்.

***"ரஜோ ராகாத்மகம் வித்தி த்ருஷ்ணா ஸங்க ஸமுத்பவம் |***
***தந்நிபத்நாதி கௌந்தேய கர்ம ஸங்கேந தேஹிநம் ||"***

(14-7)

இங்கு சில த்ருஷ்டாந்தங்கள் எல்லாம் சொல்கிறார் தேசிகர். கர்ம யோகத்திலேயே (செயலைச் செய்வதிலேயே) எவனுக்கு நோக்கமோ அவனுக்கு ரஜோ குணம் இருக்கிறது என்றான். இதற்கு உதாரணம் ஒருவன் ராஜ மஹிஷியைத் தனக்கு ஆக்கிக் கொள்ள வேண்டுமென்று ஆசைப்படுகிறான். பண்டித ஜெகன்னாதன் மிகச் சிறந்த அறிவாளி. ஆனால் அபசரிதம் உள்ளவன். காளிதாஸனது சரிதமும் அப்படியே. ஜெகன்னாதன்

அப்பய்ய தீக்ஷிதரிடம் தனக்குப் பிராயச்சித்தம் கேட்கிறான். அவர் ப்ராயச்சித்தம் கிடையாது என்கிறார். உடனே அவருடைய நூல்களுக்கு எல்லாம் மறுப்பு எழுதுகிறான். ரசகங்காதரத்தின் முதல் ச்லோகம் சப்த ரசத்திற்காக "*கங்காலஹரி*" என்ற ஒரு க்ரந்தம் எழுதியிருக்கிறான். அதில் 64 ச்லோகங்கள் உண்டு. கங்கைக்கரைப் படித்துறை மண்டபத்தில் இருந்து கொண்டு இவன் இரண்டு ச்லோகங்கள் சொல்ல, ஒருபடி ஜலம் அதிகமாகப் பெருகும். மொத்தம் 32 படிகள் உண்டு. 64 ச்லோகம் முடியும்பொழுது கங்காதேவியே இவனைக் கொண்டு போயிருக்கிறாள். இப்படிப்பட்டவன் துருஷ்க ஸ்திரீயோடு அனுபவிக்கிறான். இது ரஜோகுண கார்யம்.

திருந்தாத பிள்ளைகளைத் திருத்த முயற்சிசெய்தல் ரஜோ குண கார்யம். பைசா ப்ரயோஜனம் இல்லாமல் சென்னை, பாம்பே என்று இப்படி ஊர் சுற்றுதல், இதுவும் ரஜோ குண கார்யம். தேக சம்மந்தம் பெற்ற பந்துக்களிடத்தில் ஆசை. ஸ்திரீ புருஷ அனுபவம், சங்கீத அனுபவம், இவையெல்லாம் ரஜோகுணத்தைப் பற்றியவை. பெஞ்சு, நாற்காலி, ஈஸிச்சேர் முதலானவைகளை ஓரிடத்தில் இருந்து மற்றோர் இடத்திற்கு மாற்றிச் செய்து கொண்டிருப்பர். இதுவும் ரஜோகுண கார்யம்.

அடுத்து தமோகுணம்.

**"தமஸ்து அஜ்ஞாநஜம் வித்தி மோஹநம் ஸர்வதேஹிநாம் |**
**ப்ரமாதாலஸ்ய நித்ராபி: தந்நிபத்நாதி பாரத ||"**

(14-8)

இங்கு (தமஸஸ்து) துகாரத்திற்குப் பொருள் ஸத்வம், ரஜஸ் இவற்றைப் பெற்றும் பிரயோஜனமில்லை, சுத்த ஸத்வம் பெற்றிருந்தாலும் சரி, தமோகுணம் மட்டும் கூடவே கூடாது என்று அர்த்தம். அஜ்ஞானம் - *விபரீத ஞானம்*. நித்திரை - *தூக்கம்*. வெறுமே கண்ணை மூடிக்கொண்டு இருப்பது *ஆலஸ்யம்*. விழித்துக் கொண்டிருந்தும் விஷயங்களை அறியாமல் இருப்பது *ப்ரமாதம்*. இங்ஙனம் கூறப்பட்ட ஸத்வ, ரஜஸ், தமோ குணங்கள் மூன்றும் உன்னைக் கெடுக்கக்கூடியவை என்று அறிவாயாக - "*நிஸ்த்ரைகுண்யோ பவார்ஜுன*" (2-45). வாதத்தில் ஜெயிக்க வேணும் என்ற எண்ணத்தோடு ப்ராமணன் வாதம் பண்ணினால், கழுகாகப் பிறப்பான் என்று சொல்லப்படுகிறது. மணவாளமாமுனிகள் வாதங்களுக்கே சென்றவர் இல்லை.

**"நாந்யம் குணேப்ய: கர்த்தாரம் யதா த்ருஷ்டாநுபச்யதி |**
**குணேப்யச்ச பரம் வேத்தி மத்பாவம் ஸோऽதிகச்சதி ||"**

(14-19)

எவனொருவன் நம்மால் ஒன்றும் நடக்கவில்லை. எல்லாம் குணங்களாலேயே நடைபெறுகின்றன என்று எண்ணுகிறானோ அவன் என்னை அடைகிறான்.

**"ப்ரக்ருதே: க்ரியமாணாநி குணை: கர்மாணி ஸர்வச: |**
**அஹங்கார விமூடாத்மா கர்த்தாஹமிதி மந்யதே ||"**

(3-27)

என்ற மூன்றாம் அத்தியாயத்திலும் அருளிச் செய்திருக்கிறான்.

ஒருவன் நற்காரியங்களைச் செய்வது விசேஷமில்லை. அவற்றைச் செய்யும் போது "*நான் செய்பவன*" என்று எண்ணாமல் இருப்பது தான் விசேஷம். "*நரி இடப்பக்கம் போனால் என்ன வடப்பக்கம் போனால் என்ன. மேல் விழுந்து பிடுங்காமல் இருந்தால் போதும்*" என்று சொல்வது போல புண்யம் செய்தாலும், பாபம் செய்தாலும் "*நான் செய்தேன்*" என்று எண்ணாமல் இருந்தால் போதும் என்பது கிருஷ்ண சித்தாந்தம்.

இனி, "*தந்நிவர்த்தந ப்ரகாரம்*" கீழ்க்கூறிய ரஜஸ் தமஸ் குணங்களைக் காற்கடைக் கொள்ள வேண்டும். சில இடங்களில் வேலைக்காரன் சொல்கிறபடி ப்ரபு கேட்பான். ஸத்வ குணம் முதலிய குணங்கள் சொல்கிறபடி ப்ரபு என்று சொல்லப்படுகிற ஜீவன் கேட்கிறான்.

**"ப்ரகாசம் ச ப்ரவ்ருத்திம் ச மோஹமேவ ச பாண்டவ |**
**ந த்வேஷ்டி சம்ப்ரவ்ருத்தாநி ந நிவ்ருத்தாநி காங்க்ஷதி ||"**

(14-22)

**"உதாஸீநவதாஸீநோ குணைர்யோ ந விசால்யதே |**
**குணாவர்த்தந்த இத்யேவ யோऽவதிஷ்டதி நேங்கதே ||"**

(14-23)

**"ஸமது:க ஸுகஸ்வஸ்த: ஸமலோஷ்டாச்ம காஞ்சந: |**
**துல்ய ப்ரியாப்ரியோ தீரஸ் துல்ய நிந்தாத்ம ஸம்ஸ்துதி: ||**

(14-24)

ஆத்மா என்றும், மற்றது என்றும் பார்க்கவேண்டும், மற்ற விஷயங்களுக்குச் சேர அதிருஷ்டமும், த்ருஷ்டமுமுண்டு. அப்பொழுது வெறுப்போ விருப்போ இருக்கலாகாது.

"*வாடினேன் வாடி*" (பெரியதிருமொழி (1-1-1) என்ற திருமொழியில் ஆத்மாவை வெய்யிலில் வைத்து, உடம்பை நிழலில் வைத்துப் போந்தார் ஒருவர் ஆயிற்று என்று கூறியபடி இல்லாமல் சரீர விஷயத்தில் உதாசீனர்களாக இருக்க வேண்டும். "*சமதுக்க சுக ஸ்வஸ்த*: "(14-24) என்பதால் கூறுகிறான். எவனுக்கு ஆத்ம க்ஷேமம் ஏற்படும் என்றால், சரீரபோஷண வ்யாபாரத்தில் ஈடுபாடு இல்லாமல் ஆத்ம விஷயச் செயல்களில் ஈடுபடு-கிறானோ அவனுக்கே க்ஷேமம் உண்டு. நகரம் அபிவ்ருத்தி-யடைகிறதும், கிராமங்கள் அழிந்து வருவதும் பார்த்தால் சரீர போஷக வ்யாபாரம் நன்கு முன்னேறி வருகிறது என்பது தெரிகிறது. ஒட்டாஞ்சல்லியையும், தங்கத்தையும் ஒன்றாகப் பாவிக்க வேண்டும். "*சமலோஷ்டாச்ச காஞ்சந*:" என்கிறான் பகவான். சிலர் கல்லையும், மண்ணையும் தங்கம் போல பாவிப்பர். தங்கம் இருக்கிறபோதே இப்படி இருக்க வேண்டும் என்று சொன்னபடி. இங்கு கூரத்தாழ்வான் சரித்திரம் தான் பொருத்தமாக இருக்கும். "*சமலோஷ்டாஞ்ச காஞ்சந*:" என்பதை அநுஷ்டித்துக் காட்டினார் கூரத்தாழ்வான்.

**"மாநாவமாநாயோஸ்-துல்யஸ்-துல்யோ மித்ராரிபக்ஷயோ: |**
**ஸர்வராம்ப-பரித்யாகீ குணாதீத: ஸ உச்யதே ||"**

(14-25)

நம் சந்ததிகளுக்கு நாம் எவ்வளவு பாடுபடுகிறோம். பிள்ளை இல்லை என்று ஸ்வீகாரம் செய்து கொள்கிறோம். இச்செயல்களெல்லாம் மேல் பிறப்பு எடுக்கக் காரணங்கள் ஆகும். ஸந்ததிகள் இல்லையென்றால் அது வைராக்ய ஹேதுவாகக் கொள்ளவேண்டும்.

**"ப்ரஹ்மணோ ஹி ப்ரதிஷ்டாஹ மம்ருதஸ்ய அவ்யயஸ்ய ச |**
**சாச்வதஸ்ய ச தர்மஸ்ய ஸுகஸ்யை காந்தி கஸ்ய ச ||"**

(14-27)

இங்கு மோக்ஷம், கைவல்யம், செல்வம் மூன்றையும் பகவான் தான் நிர்வகிப்பவன் என்பது சொல்லப்படுகிறது.

**"குணபந்த விதாதேஷாம் கர்த்ருத்வம் தந்நிபந்த்தநம் |**
**கதித்ரய ஸ்வமூலத்வம் சதுர்தச உதீர்யதே ||"**

என்பது சங்கிரஹ ச்லோகம்.

**பதினான்காம் அத்தியாயம் முற்றும்.**

# பதினைந்தாம் அத்தியாயம்

பதினான்காம் அத்தியாயத்தில் ஸத்வம், ரஜஸ், தமஸ் என்ற குணங்கள் ஜீவாத்மாவை பந்தப்படுத்தும் விஷயத்தை அருளிச்செய்தான். முக்குணங்களையும் பகவான் சொல்கிறபடி அறிந்து அவற்றை ஜெயிக்க வேண்டும். அவற்றை ஜெயிக்கிற சிறந்த சாதனம் பகவத் பக்தி என்று கடைசியில் அருளிச்செய்தான்.

**"அசிந்மிச்ராத் விசுத்தாச்ச சேதநாத் புருஷோத்தம: |**
**வ்யாபநாத் பரணாத் ஸ்வாம்யாத் அந்ய: பஞ்சதசோதித: ||"**

என்பது பதினைந்தாம் அத்தியாயத்தின் சங்கிரஹ ச்லோகம்.

**"யோ மாமேவ-மஸம்மூடோ ஜாநாதி புருஷோத்தமம் |**

(15-19)

என்ற இந்த அத்தியாய ச்லோகத்தால் தன்னிடம் பக்தி பண்ணுகிறவன் முக்குணங்களைக் கடக்க முடியும் என்கிறான். "*மாம்*" என்ற இடத்தில் சொல்லப்பட்டவன் ஸாக்ஷாத் பரமாத்மா என்பதை இந்த அத்தியாயத்தில் அருளிச் செய்கிறான்.

சித்து, அசித்துக்களில் விடாது வ்யாபித்து தரித்து ஸ்வாமியாய் இருப்பவன் புருஷோத்தமன் என்று விலக்ஷணமாகச் சொல்லப்பட்டிருக்கிறான். இப்படிப்பட்ட பகவான்தான் பக்திக்கு விஷயம். இந்த அத்தியாயத்தில் பகவான் கண்ணன் முதல் நாலைந்து ச்லோகங்களில் சில உண்மைகளை அருளிச் செய்கிறான். அவை முக்கியமாகத் தெரிந்து கொள்ள வேண்டிய விஷயம். அதனைக் கூறிப் பிறகு சங்கிரஹ ச்லோக வ்யாக்யானத்தை எடுத்துக் கொள்ளலாம்.

**"ஊர்த்வ மூலம் அதச்சாகம் அச்வத்தம் ப்ராஹுரவ்யயம் |**
**சந்தாம்ஸி யஸ்ய பாணாநி யஸ்தம் வேதஸ வேதவித் ||"**

(15-1)

என்றது முதல் ச்லோகம். கீழ் முக்குணங்களைப் பற்றி நன்கு அறிய வேண்டும் என்றான். இங்கு எவன் சரீரத்தை உள்ளபடி உணர்கிறானோ அவன் வேதாந்தத்தை உணர்கின்றவன் என்கிறான். இந்த ச்லோகத்தில் சரீரத்திற்கு "*அச்வத்தம்*"

என்று பெயர் கொடுக்கப்பட்டு இருக்கிறது. "*ச்வ:*" என்றால் நாளை என்பது பொருள். எது நாளை இருக்கப்போகிறது என்ற அறுதியிட முடிகிறதோ அதற்கு "*ச்வத்தம்*" என்று பெயர். அங்ஙனம் அறுதியிட முடியாமல் இருப்பதற்கு "*அச்வத்தம்*" என்று பெயர். இந்த சரீரம்

**"*நெருநல் உளனொருவன் இன்றில்லை என்னும்*
*பெருமை யுடைத்துஇவ் வுலகு*"**

(திருக்குறள் -336)

என்ற திருக்குறளில் கூறியபடி இன்று இருக்கும் சரீரம் நாளை இருக்குமென்று அறுதியிட முடியாததாதலால் இதற்கு "*அச்வத்தம்*" என்று பெயர் கொடுக்கப்பட்டது. "*மின்னின் நிலையில*" (திருவாய்மொழி-1-2-2) என்றும் "*மாமழை மொக்குளின் மாய்ந்து மாய்ந்து*" (திருவாய்மொழி-4-1-6) என்றும் சரீரத்தின் உண்மையை ஆழ்வார் அருளிச்செய்திருக்கிறார். லோகத்தில் அஸ்திரமானது மின்னல். ஆழ்வார், மின்னலைக் கூட ஸ்திரப் பொருள் என்று கருதி மின்னலைக் காட்டிலும், சரீரம் அஸ்திரம் என்று 5ஆம் வேற்றுமை காட்டி அருளிச்செய்தார். மின்னல் தோன்றி மாயும். சரீரம் மாய்ந்தும் தோன்றும் என்று இங்கு உண்மைப் பொருள். இப்பொருள் நம் மனதில் நன்கு படவேண்டும். சரீரத்தை எப்படித் தெரிந்து கொள்ளவேண்டும் என்பதை பகவான் இங்கு சொல்கிறான். சரீரமாகிற வ்ருக்ஷம் மேலே வேரும் கீழே கிளைகளுமாய்த் தலைகீழாக இருக்கும் மரம் போன்றது. "*பூ:, புவ:, ஸுவ:, மஹ:, ஜந:, தப:, ஸத்ய:*" என்று மேல் ஏழு லோகங்கள் ஸத்ய லோகத்தில் இருக்கும் பரஹ்மாவை மூலமாகக் கொண்டது இச்சரீரம். பசு, பக்ஷி, தேவ, மனுஷ்ய, தாவரங்கள் முதலியன. "*அவ்யயம்*" என்பதற்குப் பொருள், சரீர சம்பந்தப்பட்ட வீடு, நிலம் முதலியவற்றில் நம்முடையது என்று அபிமானம் இருக்கிற பர்யந்தம் சரீர சம்மந்தம் போகவே போகாது. எந்த ஜீவனுக்கு இப்படிப்பட்ட பற்று அறவே விட்டுப் போகிறதோ, அஜ்ஜீவனுக்குத் தான் இச்சரீர சம்மந்தம் அறவே விடும். நம் சமூகத்தில் பற்றின்மை அறவே யாருக்கும் ஏற்படுவதில்லை. ப்ரவாஹரூபேண வந்து கொண்டே இருக்கும். இதனால் அழிவில்லாதது என்று "*அச்வத்வத்தைக்*" கொண்டாடுகிறான் ஈச்வரன். "*யஸ்ய சந்தாம்ஸி பர்ணாநி*" "*யஜேத ச்வர்க்ககாம:*" "*யஜேத பசுகாம:*" என்று காம்ய காண்டத்தில் சரீரத்தை விருத்தி அடையச் செய்ய இப்படிச் சில

கர்மங்கள் சொல்லப்பட்டுள்ளன. ஆகவே அவை இம்மரத்திற்கு இலை ஸ்தாநத்தில் இருக்கின்றன. இப்படி எவன் சரீரத்தை உணர்கிறானோ அவனுக்குப் பிறப்பில்லை. ஒரே சரீரத்தில் முக்குணங்களும் உண்டு. அச்சரீரம் நிலைபெற்றதில்லை. நால்வகைப் பிறப்பிலும் தோன்றுபவை இம்மரத்துக்குக் கிளைகளாகச் சொல்லப்படுகின்றன. இச்சரீரத்தின் உண்மையை உணர்கிறவன் ஆத்ம க்ஷேமத்தைப் பெறுகிறான். இப்படி கீதார்த்தத்தை பார்க்கிறபோது இந்நூல் ஆத்ம க்ஷேமத்தை உணர்த்த வந்ததேயொழிய லோக விஷயத்தை உணர்த்த வந்ததில்லை என்பது ஸ்பஷ்டமாகத் தெரியவில்லையா? "*அதஸ்ச்சோர்த்வம் ப்ரஸ்ருதாஸ்தஸ்ய சாகா*" என்பது அடுத்தது. இப்பொழுது சொன்ன ச்லோக அர்த்தம் மனதில் படுவதற்கு ஒரு உதாரணம். மேல் மாடியில் ஒரு மண் சட்டியில் ஒரு கொடியை நட்டு அது மேலிருந்து கீழே படர்கிறது. இரண்டாம் மாடியில் மற்றொரு தொட்டியில் மேலிருந்து வருகிற கொடியைப் பதியம் போட்டால் கீழேயும் படரும் மேலேயும் படரும். இது நன்றாக மனதில் படும்.

**"அத்ச்ச ஊர்த்வம் ப்ரஸ்ருதாஸ் தஸ்ய சாகா**
**குணப்ரவ்ருத்தா விஷய ப்ரவாலா: |**
**அத்ச்ச மூலாந்யனுஸந்ததாநி**
**கர்மாநுபந்தீநி மநுஷ்ய லோகே ||"** 15-2)

புருஷனைக் காட்டுகிறது "*கர்மாநுபந்தீநி*" என்ற தொடர். ப்ரஹ்மாவினிடத்திலிருந்து தேவாதிகளாகப் பிறக்கின்றனர். பூமியில் புண்யங்களைப் பண்ணி தேவாதிகளாகப் பிறக்கின்றனர் ஜீவர்கள். இப்படி மாறி மாறி வருகிற சரீர சம்மந்தத்தைப் போக்கிக் கொள்ள வேணும் என்கிறான் பகவான். ஞானம் ஏற்படுகிற பர்யந்தம் இச்சரீரம் மாறிமாறி வந்து கொண்டேயிருக்கும். இவ்வுண்மையை அதிகமான ஜனங்கள் தெரிந்து கொள்ளாமல் இருக்கிறார்கள். இதைப்பற்றி யாரும் தெரிந்து கொள்ளவில்லை என்று பகவானே சொல்லியிருக்கிறான்.

**"ந ரூபமஸ்யேஹ ததோபலப்யதே**
**நாந்தோ ந சாதிர் ந ச ஸம்ப்ரதிஷ்டா |**
**அச்வத்தமேநம் ஸுவிரூட மூலம்**
**அஸங்கசஸ்த்ரேண த்ருடேந சித்வா ||"** (15-3)

சரீர ரக்ஷணத்தைப் பற்றி கீதா சாஸ்திரம் அவதரிக்கவில்லை என்பதும் ஸ்பஷ்டம். பீஷ்மாசாரியார் சரதல்பத்தில் கிடக்கிறார். அவர் நல்ல கதி அடைந்தால் தத்வார்த்தங்களை யார் இனி சொல்லப் போகிறார்கள் என்று சொல்லியிருக்கிறார்கள். "*ஞானாந் அல்பீ பவிஷ்யந்தி பீஷ்மம் அஸ்தங்கதே*" என்பது பாரதவசநம். இங்கு ஒரு விசாரம். பீஷ்மர் போனால் வ்யாசர், நாரதர். கண்ணன் இவர்கள் இருக்கிறார்களே இப்படி இருக்க அப்படிச் சொல்லுவானேன்? என்று அப்படி ஒரு கேள்வி. பீஷ்மருக்கு இருக்கிற மதிப்பு யாருக்குமில்லை. பீஷ்மர் சொன்னார் என்றால் தர்மபுத்திரர் மதிப்பர். அதுமாதிரி கண்ணன் முதலானார்களுடைய வார்த்தைக்கு அவ்வளவு மதிப்பில்லை. பீஷ்மர் சொன்னார் என்றால் தர்மபுத்திரர் கேட்பர். கண்ணன் வார்த்தையைக்கூடக் கேட்க மாட்டார். "*அசுவத்தாமா ஹத:*" என்று கண்ணன் தர்மபுத்திரரைச் சொல்லச் சொல்கிறான். துரோணர் வில்லைப்போட்ட பிறகு தர்மபுத்ரர் மறுத்து விடுகிறார். தர்ம புத்திரருக்கு நரகானுபவம் இல்லாமற்போனாலும், நரக தர்சனம் ஏற்பட்டிருக்கிறது. நரக தர்சனமும் பாபபலன்தான். தர்ம புத்திரருக்கு என்ன பாபம் என்றால் பகவத் வார்த்தையை மறுத்ததுதான் பாபம் என்பது தர்ம சூக்ஷ்மமாகும்.

**"யத் த்வத் ப்ரியம் ததிஹ புண்யம் அபுண்யமந்யத்**
**நாந்யத் தயோர் பவதி லக்ஷண மத்ர ஜாது |**
**தூர்த்தாயிதம் தவ ஹி யத்கில ராஸகோஷ்ட்யாம்**
**தத்கீர்த்தநம் பரமபாவநம் ஆமநந்தி ||"**

(அதி. ஸ்தவம்-53)

என்று கூரத்தாழ்வானின் அதிமாநுஷஸ்தவ திவ்ய சூக்தி. கிருஷ்ணனை எப்படி மதித்து நினைக்க வேண்டுமோ அப்படி தர்மர் நினைக்கவில்லை என்பது பாரதத்தின் சாரமாகும். பாரதத்தில் மற்றொரு சரித்திரம். சகுனியும் தர்மரும் சூதாடினதில் தர்மர் தோற்றார். திரௌபதி தான் மிச்சம். அப்பொழுது சகுனி தர்மரைப் பார்த்து அவளை வைத்து ஆடினால் ஆடும் என்கிறான். சரித்திரத்தில் நளன், தமயந்தியை வைத்துச் சூதாடச் சொன்னபோது மாட்டேன் என்று மறுத்திருக்கிறான். இந்தக் கதையை தர்மர் கேட்டிருக்கிறார். கேட்டிருந்தும் திரௌபதியை வைத்து ஆடினார். தோற்றார். விதுரர், தர்மருக்கு திரௌபதியை வைத்து ஆட உரிமை-யில்லை என்று இருந்துவிடுகிறார். திரௌபதியை இழந்தார்களா

இல்லையா என்பது விசாரம். திரௌபதியை இழுத்து வந்தது எப்படி தர்மம் என்று கேட்க, பீஷ்மர் *"எனக்குத் தெரியவில்லை, தர்மர். அதர்மம் செய்ய மாட்டார், அவரிடமே கேளுங்கோள்"* என்று நழுவவிட்டார். இதனால் என்ன தெரிகிறது? இப்படிப்பட்ட பீஷ்மரிடம் அபிமானம் தர்மபுத்திரருக்கு இருந்திருக்கிறது. அந்த அபிமானம் கண்ணனிடம் இல்லை.

இதை அனுசரித்து மற்றொரு விருத்தாந்தம், புண்யபாபரூபமான கர்மா போவதற்கு எது உபாயம் என்று வசுதேவர் கேட்டார். அப்பொழுது அங்கு எல்லா ரிஷிகளும் இருக்கிறார்கள். நாரதரும் இருக்கிறார். ரிஷிகள் எல்லோரும் வஸுதேவருடைய இந்தக் கேள்வியைக் கேட்டுத் தலை கவிழ்ந்து கொண்டார்கள். அப்பொழுது நாரதர், *"புழைக்கடைப் பச்சிலை வீர்யம் இல்லை"* என்கிறார். வாசுதேவருக்குக் கண்ணனுடைய பெருமை தெரியவில்லை. ரிஷிகள் *"ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி"* என்று சொல்லுகிற கண்ணன் பக்கத்தில் இருக்க, வசுதேவர் இப்படிக் கேட்கிறாரே என்று தலை கவிழ்ந்து இருக்கிறார்கள். இங்கு இப்படி ஊரைச்சுற்றி வளைத்துப் பேசுகிறேனே என்றால், இங்கு கண்ணனுடைய அபிப்பிராயத்தைக் காட்டுவதற்காக இவ்வளவு தூரம் சொல்ல நேர்ந்தது. மதிப்புடையவன் வார்த்தை என்றால் அது ஏற்கக்கூடியதாய் இருக்கும். எனக்கு மதிப்பில்லை என்று கருதி பகவான் வருத்தப்படுவதையும் கவனிக்கவேண்டும். ஆத்ம க்ஷேமத்திற்காகவே கீதை பிறந்திருக்கிறது, சரீர க்ஷேமத்தைப் பற்றி வரவில்லை என்றால் என் போன்றோர் சொல்லும் வார்த்தையை எல்லோரும் கேட்க மாட்டார்கள். கபிலர், தேவஹூதிக்குச் சொன்ன உபதேசம் அவச்யம் அறியவேண்டியது. நெருப்புக்கு ஆச்ரயமான வரட்டியையே எப்படி அந்நெருப்பு ஆச்ரயாஸியாக இருந்து தகிக்குமோ, அதுபோல ஆத்ம தர்மமான ஞானாக்னியே பாபங்களைப் பஸ்பமாக்கிவிடும் என்று கூறுகிறான். *"ஞானாக்னி தக்த கர்மாணம் பஸ்மசாத் குருதே அர்ஜுன"* என்று பகவான் சொல்லியிருக்கிறான். சரீரம் இருக்கும் போது தான் ஆத்ம ஞானம் பிரகாசிக்கிறது. இப்படி ஆத்ம ஞானத்திற்கும் ஆதாரமான சரீரத்தையும் கடைசியில் வெறுத்து விலக்க வேண்டித்தான் இருக்கிறது. *"பிறப்பறுக்கலுற்றார்க்கு உடம்பும் மிகை"* (திருக்குறள்-345) என்பது

வள்ளுவர் வாக்கு. சரீரமாகிற வ்ருக்ஷத்தை வெட்டிக் கொள்ள ஸாதனம், ஒன்றிலும் பற்றில்லாமை! இது "*அஸங்க சஸ்த்ரம்*" என்று சொல்லப்பட்டது. இந்த அசங்க சஸ்த்ரத்தை எப்படிப் பெறுவது என்று அர்ஜுனன் கருதினான். இதற்கு பகவான் கண்ணன் திருவடிகளில் விழுந்துதான் பெறவேண்டும் என்பது சமாதானம்.

**"தத:பதம் தத் பரிமார்க்கிதவ்யம்**
**யஸ்மிந் கதா ந நிவர்த்தந்தி பூய: |**
**தமேவ சாத்யம் புருஷம் ப்ரபத்யே**
**யத:ப்ரவ்ருத்தி: ப்ரஸ்ருதா புராணீ ||"**

(15-4)

இதுதான் பகவான் முதலில் சொன்னது. இன்னும் பகவானிடத்தில் அப்படிக் கேட்க யாருக்காவது மனம் வருமா? அப்படிக் கேட்கும்படியான மனோநிலையையும் அவன் தான் கொடுக்க வேண்டும். "*அரோக த்ருடகாத்ரதா சித்திரஸ்து*" என்று பகவத் சந்நிதியில் ஸ்ரீசடகோபன் சாதிக்கிற காலத்தில் சொல்லி சாதிப்பார்கள். அப்படிச் சொன்னால் அது பகவானுடைய நிக்ரஹம் என்பர். சிறையிலேயே இன்னும் ஸ்திரமாக இரு என்றால் அது நல்லதாகுமா? இனிமேல்தான் இவ்வத்யாயத்தின் சாரப் பொருளைக் காணவேண்டும்.

தான் புருஷோத்தமன் என்பதை இங்கு உபதேசிக்கிறான். தன்னைப்பற்றிப் புகழ்ந்தும் சொல்கிறான். இந்த இடத்திற்கு "*புருஷோத்தம வித்யை*" என்று பெயர்.

**"ஸர்வஸ்ய சாஹம் ஹ்ருதி ஸந்நிவிஷ்ட:**
**மத்த: ஸ்ம்ருதி: ஜ்ஞானம் அபோஹநம் ச |**
**வேதைச்ச ஸர்வை: அஹமேவ வேத்ய:**
**வேதாந்த க்ருத் வேத விதேவ சாஹம் ||"**

(15-15)

ஞானமுள்ளவனிடம் இந்த லோகம் மதிப்பை வைக்காது.

விதுரர் உத்தியோக பர்வத்தில் "*ந சுத்தி: தனலாபாய*" என்று சொல்லியிருக்கிறார். இந்த வார்த்தையை மிக நொந்து கொண்டு அருளிச்செய்திருக்கிறார் விதுரர். **"ஈச்வரன் தானும் ஆசார்யத்வத்தை ஆசைப்பட்டிருக்கும்"** (ஸ்ரீவசனபூஷணம்-சூத்திரம்-433) என்று பிள்ளைலோகாசாரியர் அருளிச்செய்திருக்கிறார்.

கிருஷ்ணனிடம் ஒருவராவது வந்து, "*ஹே. கிருஷ்ணா! ஆத்ம க்ஷேமத்திற்கு அநுகுணமான வித்தியைச் சொல்லிக் கொடு*" என்று கேட்கவில்லை. ஒருவராவது கேட்கவில்லை. படிக்கவில்லை. சுவடி அவிழ்க்கவே இல்லை. அர்ஜுனன் "*சிஷ்யஸ்தேஹம்*" என்றான். உடனே பகவான் சுவடி அவிழ்த்துவிட்டான். உபதேசம் பண்ணிய பிறகுதான் இவன் அதிகாரியா, அநதிகாரியா என்று ஆலோசித்தான். "*இதம்தே நாத பஸ்காய*" என்று இறுதியில் அர்ஜுனனுடைய நிலையைத் தெரிந்து கொண்டிருக்கிறான். அர்ஜுனன் நல்ல சிஷ்யனே இல்லை. கீதையை மறந்து விட்டவன் அவன். மகாபாரதத்தில் மேலே வரப்போகும் அனுகீதை என்ற பகுதியில் இதை நன்கு உணரலாம். இராமனிடம் சிஷ்யர்களாக யாராவது ஆச்ரியத்ததுண்டா என்றால் உண்டு.

"*ப்ராது: சிஷ்யஸ்ய தாஸஸ்ய ப்ரசாதம் கர்த்தும் அர்ஹஸி*" என்ற பரதாழ்வானுடைய வசனத்தினால் தெரிகிறது. பொதுவாக லோகத்தில் நல்ல அறிவாளிகளிடம் மதிப்பு இல்லை. "*பீஷ்மே அஸ்தங்கதே ஞானாந் அல்பீ பவிஷ்யந்தி*" என்று ஏன் சொன்னான் கண்ணன் என்றால் இது அவரது (தர்மர்) மனதை அனுசரித்துச் சொன்னது. அர்ஜுனன் தன்னைப்பற்றி வண்டிக்காரன் (தேரோட்டுபவன்) என்று மட்டமாக எண்ணலாமல்லவா? ஆகையால் தன் பெருமையை "*வருணனிடம் பெருமான் காட்டினாற்போல*" இவ்விடத்தில் நன்கு சொல்கிறார். உத்ருதையம்--*ஞானோதயஸ்தாநம்.* ஒருவன் ஏதாவது அறிவதாயிருந்தால் என்னால் அறிகிறான். மறப்பதும் என்னால் தான் மறக்கிறான். எல்லா வேதங்களாலும் அறியப்படுபவன் யானே. வேதத்தில் சொல்லப்பட்ட கரும பயனைத் தருபவன் யானே. வேதத்தில் அறியப்படுபவனும் யானே. இனி, *புருஷோத்தம வித்யையைப்* பார்க்கலாம். கிருஷ்ணனை உத்தம புருஷன் என்று தெரிந்து கொண்டால் அவனுக்கு மறுபிறப்பே கிடையாது. விசிஷ்டாத்வைத சித்தாந்தத்தை பகவான் மிகத் தெளிவாக அருளிச் செய்திருக்கிறான். இது மாதிரி இடம் கீழும் இல்லை. மேலுமில்லை.

**"த்வாவிமௌ புருஷௌ லோகே க்ஷரச்-சாக்ஷர ஏவ ச**
**க்ஷர: சர்வாணி பூதாநி கூடஸ்தோSக்ஷர உச்யதே ||"**

(15-16)

**"உத்தம: புருஷஸ் த்வந்ய: பரமாத்மேத் யுதாஹ்ருத: |**
**யோ லோகத்ரயம் ஆவிச்ய பிபர்தி அவ்யய ஈச்வர: ||"**

(15-17)

**"யஸ்மாத் க்ஷர-மதீதோSஹ-மக்ஷராதபி சோத்தம: |**
**அதோSஸ்மி லோகே வேதே ச ப்ரதித: புருஷோத்தம: ||"**

(15-18)

இந்த ச்லோகங்கள் எதைச் சொல்கிறதோ அதுதான் விசிஷ்டாத்வைத சித்தாந்தம். விசிஷ்டாத்வைத சித்தாந்தத்திற்கு இந்த ச்லோகத்தை இழுக்கவில்லை. இன்றைக்கு (இந்த அத்தியாயத்தில்) விசிஷ்டாத்வைதத்தைத்தான் சொல்லப்போகிறான் பகவான். ஒரு புருஷன் "*க்ஷரம்*" என்றும், மற்றொரு புருஷன் "*அக்ஷரம்*" என்றும் இந்த ச்லோகத்தில் சொல்லப்படுகிறான். இங்கு "*லோகே*" என்று பதம் இருக்கிறது. அதையும் ஞாபகம் வைத்துக் கொள்ள வேண்டும். "*உத்தம புருஷஸ்தவந்ய:*" என்று ச்லோகத்தில் "*யோலோகத்ரயம்*" என்று லோக சப்தம் வந்திருக்கிறது. அடுத்த ச்லோகத்திலேயும் (யஸ்மாத்சரம்) "*லோகே வேதேச*" என்ற இடத்தில் லோக சப்தம் வந்திருக்கிறது. இவ்விடங்களில் "*லோகம்*" என்ற சப்தத்திற்குப் பொருள் என்ன? என்று தெரிய வேண்டும். பொதுவாக லோக சப்தத்திற்கு அங்கங்கு வேறு வேறு அர்த்தங்களும் சொல்வது உண்டு. "*த்வாஸுபர்ணா*" என்ற ச்ருதி ப்ரமாணத்தில் இரண்டு புருஷர்கள் உள்ளனவாகத் தெரிகிறது. அவர்கள் இங்கு "*க்ஷரம்*" என்றும் "*அக்ஷரம்*" என்றும் சொல்லப்படுகிறார்கள். பிரஹ்மா முதல் ஸ்தம்பம் வரை என்பதை "*ஆப்ரஹ்ம ஸ்தம்ப பர்யந்தம்*" என்று சொல்லுவர். க்ஷரம் - முக்த நிலையில் உள்ளவரும், அக்ஷரம் - இவர்க்கும் அப்பாற்பட்டிருக்கிறவன் பரமாத்மா. அசித்தோடு சேர்ந்த பத்த ஜீவனிடத்திலும் விடுபட்ட முக்த ஜீவனிடத்திலும் பகவான் பிரவேசித்திருக்கிறான். "*இப்படி சித்து அசித்து என்ற இவ்வஸ்துக்களில் நுழைந்து அவர்களை நடத்துவதாலேயும் அவற்றிற்கு அப்பாற்பட்டிருப்பதாலேயும் நான் புருஷோத்தமனாகச் சொல்லப்படுகிறேன்.*" இப்படி என்னை அறிந்தால் மோக்ஷம் உண்டு. கிருஷ்ணனிடம் ஒருவன் பக்தி பண்ணுகிறான். அவனிடம் நல்ல ஆசாரம் இல்லை. அவனைப் புகழ்வதா, இகழ்வதா என்று சர்ச்சை பண்ணி,

**"அபிசேத் ஸுதுராசார: பஜதே மாம் அநந்யபாக் |**
**ஸாதுரேவ ஸமந்தவ்ய: ஸம்யக்வ்யவஸிதோ ஹி ஸ:|| "**

(9-30)

என்று புகழத் தக்கவனாகவே பகவான் நிச்சயித்திருக்கிறான். இங்கு *ஸுதுராசார:* என்றதாலும் கிருஷ்ணபக்தி ப்ரபாவத்தால் நல்லவனாக மாறுவன் என்கிறான்.

"*ந மே பக்தப்ரணஸ்யதி*" என்றும் பகவான் கூறியிருக்கிறான். கிருஷ்ணன் உயர்ந்த தெய்வம் என்று எண்ணி நிச்சயித்த பிறகே பக்தியைப் பண்ணியிருக்கிறான். இப்படிப் பட்டவன் எப்படிப்பட்டவனாய் இருந்தால் என்ன? அவன் "*ஸம்யக் வ்யவஸிதோ ஹி ஸ: ஸாதுரேவ*" என்ற இந்த வார்த்தையைக் கேட்டதும் நம்பிக்கை வருகிறது. அடுத்தபடி வேறு யாராவது ஏதாவது சொன்னால் அது தான் சரி என்றும் தோன்றுகிறது. ஆகவே ஸம்சாரிகளுக்கு ஸ்திரபுத்தி ஏற்படுவது மிகவும் துர்லபம். இனி விசேஷ அர்த்தத்தைப் பார்க்கலாம். இராமநுஜன் (கண்ணன்) சொன்னதைத் தான் இராமாநுஜர் (எம்பெருமானார்) சொல்கிறார் என்பதை நன்கு அனுபவிக்கலாம்.

ஒருவகையிலுள்ள புருஷனுக்கு "*க்ஷரன்*" என்றும் மற்றொருவனுக்கு "*அக்ஷரன்*" என்றும் பெயர். லோகம் என்பதற்குப் "*பிரமாணம்*" என்று பெயர். "*புருஷௌ*" என்று சொன்ன புருஷ ஸப்தம் இருமையைக் குறிக்கக் கூடியதான த்விவசனமாய் இருக்கிறது என்பதையும் பார்க்க வேண்டும். இதில் அசேதநம் கலக்காது. இங்கு "*க்ஷர*" சப்தத்தால் சொல்லப்படுகிறவன் யார்? "*க்ஷரஸர்வாநி பூதாநி*" என்ற இடத்தில் ப்ரஹ்மா முதல் ஸ்தம்ப பர்யந்தம் உள்ள பொருள்கள் "*க்ஷரம்*" என்று சொல்லப்பட்டிருக்கிறது. இந்த ச்லோகத்தில் சொல்லப்பட்ட "*அக்ஷரம் ஸர்வாநி*" என்று பகுவசனத்தினால் (பன்மையினால்) சொல்லப்பட்டிருக்கிறது. சரீரம் எல்லாவற்றிற்கும் உண்டு. "*சர்வாநி பூதாநி*" சரீர சம்பந்தத்தோடு கூடியிருப்பதால் ஒருவகையில் *க்ஷரம்* என்று சொல்லப்படும். "*கூடஸ்த:*" - இங்கு சுவாமியின் விசாரம் மிக அழகு. பகவான் தான் "*அக்ஷரம்*" என்று சொல்லப்பட்டால் என்ன? என்றால் வேறுபட்டவன் என்று மேல் வருவதால் அது பொருளாகாது. "*யஸ்மாத்க்ஷரம்*

*அதீதோஹம்*" என்று மேலே வருகின்ற வாக்யம். இதனால் அக்ஷரம் என்ற சொல்லுக்குப் பகவான் என்று சொன்னால் பொருந்தாது. ப்ரஹ்மாவைச் சொல்லலாமேயென்றால் "*ஸர்வாநி பூதாநி*" என்ற இடத்தில் சொல்லப்பட்டுவிட்டான். ஆகவே இங்கு சொல்லப்படுகிற "*அக்ஷர*" சப்தத்திற்கு "*முக்தாத்மா*" என்று பொருள் கொள்ளவேண்டும் என்பது சுவாமியின் வ்யாக்யானம், விசாரம் (ஆராய்ச்சி). இங்கு க்ஷர சப்தத்தாலே சொல்லப்படுகிறவனும் புருஷன்தான். பகவான் தன்னைப் "*புருஷோத்தமன்*" என்று சொல்லிக் கொண்டிருக்கிறான். இங்கு சுவாமி வ்யாக்யானம் செய்தது போல மற்ற வ்யாக்யாதாக்கள் "*அக்ஷரம் என்பதற்குப் புருஷன்*" என்று அர்த்தம் சொல்லவேயில்லை. இதை எல்லோரும் கவனிக்க வேண்டும்.

முக்தாத்மாவைக் கூடஸ்தன் என்ற சொல்லால் எப்படிச் சொல்வது என்றால் "*கூடவத் திஷ்டதி இதி கூடஸ்த:*" என்று வ்யுத்பத்தியால் அவனைச் சொல்லும். "*க்ஷர:*" என்ற சொல்லும் மாறுதலையுடையது என்றும் "*அக்ஷர:*" என்பது மாறுதல் இல்லாதது என்றும் பொருள் உடையன. ப்ரஹ்மா முதல் ஒவ்வொரு வஸ்துவிற்கும் சரீர சம்பந்தமுண்டு. ப்ரஹ்மா சரஸ்வதியைப் படைத்தார். அவளையே கல்யாணம் செய்து கொள்ள வேண்டு-மென்று எண்ணினார். இது நியாயமா மோஹமா என்று அப்பொழுது மரீசி முதலான ப்ரஹ்மாவினுடைய பிள்ளைகள் பகவானிடம், "*எங்கள் தகப்பனாருக்கு நல்ல புத்தி உண்டாக வேண்டுமென்று*" சரணாகதி பண்ணியிருக்கிறார்கள். ஏகாந்தத்தில் அவரிடம் சென்று சிக்ஷித்திருக்கிறார்கள். இந்த சரித்திரம் மாதிரி நமக்கும் அமைவதுண்டு. இது பாகவதத்தில் சொல்லி-யிருக்கிறது. அந்தந்த சரீரத்துடன் இருக்கும் ஜீவனுக்கு சுகதுக்கங்கள் மாறிமாறி வந்து கொண்டிருக்கும். ப்ரஹ்மாவைப்-போல அவர் பிள்ளைகளுக்கு இல்லை. பிள்ளைகளுக்குள்ள இன்பம், துன்பம், அறிவு, அறியாமை அவர்க்கில்லை. அவரவர்க்குச் சேர இன்ப துன்பம் முதலானவைகள் தனித்-தனியாக இருக்கின்றன. முக்தாத்மாவைப் பற்றிச் சர்ச்சை பண்ணுகிறபோது "*சுகோ முக்த:*" "*வாமதேவோ முக்த:*" என்றபடி சுகர், வாமதேயர் இவர்கள் *முக்தர்கள்*. திருவடி, திருவனந்தாழ்வான் இவர்கள் *நித்யர்கள்*. இவர்கள் ஒருபடிப்பட்டிருப்பார்கள். சாஸ்திரங்கொண்டு ஒரு பிரிவு பிரித்திருக்கிறார்கள். அசாதாரண ஆகாரம், சாதாரண ஆகாரம் என்று இரண்டு.

ப்ரஹ்மாதிகளுக்கு அசாதாரண ஆகாரம். ஒருவர்போல மற்றொருவர் இல்லாமல் இருத்தல். முக்தர்கள் எல்லோருக்கும் ஒரே ஆகாரம். அதுபற்றி கூடஸ்தர்கள் என்று கூறப்படு-கிறார்கள். சாதாரண ஆகார வ்யுக்தி. ஸர்வாநி பூதாநி என்பது ப்ரஹ்மா முதல் எல்லாவற்றையும் சொல்கிறது. இதனால் ஜீவன் (சரீரம்) தோறும் மாறுதலையுடையதாய் இருக்கிறது. முக்தி தசையில் ஆனந்த துல்யம் என்பதை *"ரமமாணு வநே த்ரய:"* என்ற இடத்தில் வால்மீகி கூறியுள்ளார். இவ்விடத்தில் த்வைதிகள் ஆனந்த தாரதம்யவாதிகள். இப்படிச் சொல்லி *உத்தமப் புருஷஸ்து அந்ய:* என்று இந்த வஸ்துக்களைக் காட்டிலும் வேறுபட்டவனாகத் தன்னைச் சொல்லிக்கொள்கிறான்.

*"தஸ்யாஸ்சிகாயாமத்யே", "ஆத்மாநாராயணப்பர:"* வாழைமரம் தார் போடும்போது முதன்முதலில் பூ வெளி வரும். அது கீழே தொங்குகிறது. *"பத்ம கோசப் ப்ரதீகாசம்"*- வாழைப் பூ போலே ஹ்ருதயம் தொங்குகிறது. வயிற்றில் *"வைஸ்வாணரம்"* என்று ஓர் அக்கினி. அது எரிகிறது. *"தஸ்யாஸ்சிகாயாமத்யே பரமாத்மா வ்யவஸ்தித:" "நாராயண பரம்ப்ரஹ்மா"*. இவ்விஷயங்களை எல்லாம் கண்ணன்,

**"அஹம் வைச்வாநரோ பூத்வா ப்ராணிநாம் தேஹம் ஆச்சித: |**
**ப்ராணாபாந ஸமாயுக்த: பசாம் யந்நம் சதுர்விதம் ||"**

(15-14)

என்ற ச்லோகத்தில் அருளிச் செய்திருக்கிறான். *"யோ லோகத்ரயமாவிஸ்ய"* என்ற இடத்தில் லோக சப்தத்திற்கு *"லோக்யத இதி லோக:"* என்று வ்யுத்பத்தி. அசித்தில் பகவான். அசித்துடன் சேர்ந்த ஜீவனிடம் பகவான், முக்தாத்மாவிடம் பகவான். இந்த முறையில் பார்க்கின்ற பொழுது, லோகத்ரயம் என்று சொல்லப்படுகிறான். ஒவ்வொரு பொருளிலும் அவன் இருந்தும் தோஷம் தட்டாமல் இருக்கிறானே அவ்விஷயத்தைத் தான் அவ்யயம் என்று சொல்லப்பட்டது என்பதைக் கவனிக்க வேண்டும். இந்த லோக சப்தத்திற்கு வேறுவிதமாகப் பொருள் சொல்ல முடியாதென்று ஆதாரங்களைப் பலமாகக் காட்டி இருக்கிறார் ஸ்வாமி. வ்யாப்யம், வ்யாபகம், நியாம்யம், நியாமகம் என்பர். இவ்விடத்தில் பாலில் வெண்ணெய் இருக்கிறது. பால் வேறு வெண்ணெய் வேறு தான். தரிக்கிறவனும் தரிக்கப்படும் பொருளும் ஒன்றாகுமா? இப்படி வ்யாப்யனாய்

நியாமகனாய் இருக்கிற புருஷோத்தமன் தான் விலக்ஷணனாய் இருப்பவன். இந்த ச்லோகத்தில் ஜீவன் இன்ப துன்பங்களை அனுபவிக்கிறபோது இன்ப துன்ப அனுபவம் பகவானுக்கும் வரட்டுமே என்று கேட்கப்படுகிறது. "*ஸம்போக ப்ராப்திரிதி சேந் ந வைசேஷ்யாத்*" என்று ப்ரஹ்ம ஸூத்திரத்தில் வ்யாசர் இதைப் பற்றி விசாரித்து அத்தோஷங்கள் எம்பெருமானுக்கு வராது என்று கூறியிருக்கிறார். ஜீவன் கர்மத்தால் அசித் சம்மந்தத்தை உடையவனாய் இருக்கிறான். அதனால் சுக துக்கங்கள் அனுபவிக்கிறான். ஈச்வரன் கர்ம நிபந்தனமாக இல்லை. அதனால் சுக-துக்க அனுபவம் அவனுக்குக் கிடையாது. இதற்கு நம்பிள்ளை ஓர் உதாரணம் அருளிச் செய்திருக்கிறார். அதாவது சிறைச்சாலையில் குற்றவாளி சிறைத் துன்பத்தை அனுபவிக்கிறான். அதிகாரி (ராஜா) அவனைப் பார்ப்பதற்காக அங்கு செல்கிறான். இருவரும் சிறையில் இருக்கிறார்கள். குற்றவாளிக்குரிய அனுபவத்தை அவனைப் பார்க்கச் செல்கிற ராஜாவுக்குச் சொல்லமுடியுமா? அதே மாதிரி இங்கும் பகவானுக்குச் சுக துக்கங்கள் சொல்லமுடியாது என்கிறார். ச்ருதியும்,

**"த்வா ஸுபர்ணா ஸயுஜா ஸகாயா ஸமாநம் வ்ருக்ஷம் பரிஷஸ்வ ஜாதே |**
**தயோரண்ய பிப்பலம் ஸ்வாத் வத்தி அனச்னந் அந்யோ அபிசாகசீதி" ||**

என்று கூறியது. இதனால் இவற்றுள் (சேதநா அசேதந வஸ்துக்களுக்குள்) தான் தோஷம் தட்டாதவனாய் இருக்கிறான் என்று தெரிகின்றது. க்ஷரம், அக்ஷரம் இரண்டையும் கடந்தவன் நான் என்று கூறுகிறான். இதுதான் புருஷோத்தம வித்யை ஆகும். "*ஸர்வம் ஸமாப்நோஷி ததோஸி ஸர்வ:*" என்று இவ்வுண்மையை விச்வரூப அத்தியாயத்தில் அர்ஜுனன் எடுத்துரைத்தான். அவ்வுண்மையைப் பகவான், தானே சொல்லிக் கொள்கிறான் இங்கு.

"*த்வயோர் பாவ: த்விதா த்விதைவ, த்வைதம், நத்வைதம், அத்வைதம்*" என்று அத்வைதத்திற்கு வ்யுத்பத்தி அதாவது "*இரண்டு இல்லாதது*" என்று பொருள். "***விசிஷ்டஸ்ய அத்வைதம் விசிஷ்டாத்வைதம்***" என்று இதற்கு வ்யுத்பத்தி. ***சேதநா-சேதனங்களோடு கூடின வஸ்து ஒன்று*** என்பது இதற்குப் பொருள். இங்கு லோகத்ரயத்தோடு கூடிய பகவான் ஒருவன் என்கிறபோது சரீராத்ம பாவம் தானே தேறுகிறது. **அறிவில்லாத அசேதனப் பொருளிலும் அறிவுடைய முக்தாத்மாவிடத்திலும் ப்ரஹ்மா முதல் தூண் வரையிலுமுள்ள எல்லா ஜீவன்க/ளிடத்திலும்** புகுந்து,

**அவனே புருஷோத்தமன் என்று சொன்னால் அவன் ஒருவன் என்றுதானே கருத்து ஏற்படுகிறது.**

கீதையில் விஷ்ணு சப்தம், வாசுதேவ சப்தம் இவைகள் உண்டு. நாராயண சப்தம் இல்லை. நாராயண சப்தம் சொல்லாமற்போனாலும் அதனுடைய பொருளைக் கீதையில் அடிக்கடி சொல்லியிருக்கிறான். இங்கும் லோகத்ரயம் என்று உபய விபூதியையும் சொல்லி ஆவிச்ய என்று அந்த உபய விபூதியிலும் தான் நுழைந்து சரீர ஆத்ம பாவத்தோடு இருக்கிறவன் என்றும் அவற்றின் தோஷம் தன் மேல் படாமல் இருப்பவன் என்பதையும் காணலாம்.

"*பற்றற்றான் பற்று*" — (திருக்குறள் 350) என்பதற்கு **எல்லாப் பொருளையும் பற்றி நின்றே பற்றற்ற இறைவன்** என்றார் பரிமேலழகர்.

**"அசிந்மிச்ராத் விசுத்தாச்ச சேதநாத் புருஷோத்தம: |**
**வ்யாபநாத் பரணாத் ஸ்வாம்யாத் அந்ய: பஞ்சதசோதித: ||"**

என்பது சங்கிரஹ ச்லோகம்.

*அவ்யய:* என்று ஸ்பஷ்டமாக அருளிச் செய்திருக்கிறான். இப்படிப்பட்ட லக்ஷணத்தோடு கூடியவனே புருஷோத்தமன். இத்தகைய புருஷோத்தமனாகிற என்னை பஜனம் பண்ணினால் மோக்ஷம் உண்டு. இவ்விஷயத்தை எவன் தெரிந்து கொள்கிறானோ அவன் சம்சார சாகரத்திலிருந்து விடுபடுகிறான் என்கிறான்.

**பதினைந்தாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினாறாம் அத்தியாயம்

பதினாறாம் அத்தியாயத்தின் ஸாரப்பொருளை இப்பொழுது அனுபவிக்க வேண்டும். 17,18 இந்த அத்தியாயத்தின் ஸாரப்-பொருள் தனி. கீழ்ச்சொன்ன அத்தியாய விஷயங்கள், மேல் சொல்லப் போகிற அத்தியாயங்களின் விஷயங்கள், இவற்றின் சாரங்களை இவ்வத்தியாயம் அடக்கிக் கொண்டிருக்கிறது.

**"தேவாஸுர விபாகோக்திர் பூர்விகா சாஸ்த்ர வச்யதா |**
**தத்த்வாநுஷ்டான விஜ்ஞாந ஸ்தேம்நே ஷோடச உச்யதே ||**

என்று ஆளவந்தார் சங்கிரஹ ச்லோகத்தில் இவ்வத்தியாயத்தின் ஸாரப் பொருளை வெளியிட்டு இருக்கிறார்.

சிலரைத் தேவர்கள் என்றும் சிலரை அசுரர்கள் என்றும் முதன் முதலில் விரிவாக வெளியிடுகிறான். அதன் பிறகு தன் சாஸ்த்திரத்திற்குக் கட்டுப்பட்டு நடக்க வேண்டும் என்றும் அப்படி நடக்காமற்போனால் அவன்தான் அசுரன் என்றும் கடுமையாகச் சொன்ன அத்தியாயம் இது. நம் தேசத்தில் கீதையைப் பலரும் போற்றுகிறார்கள். ஆனால் இந்த அத்தியாயத்தில் சொல்லப்பட்ட விஷயங்களை மட்டும் ஏனோ கைக்கொள்-வதில்லை. முதன் முதலில் தேவப்ரக்ருதிகளாக இருக்க வேண்டும் என்றும், அசுரப்ரக்ருதிகளாக இருக்கக்கூடாது என்றும் கூறுகிறான். சாஸ்திரங்களில் நம்பிக்கை, அவற்றில் சொல்லப்பட்ட விஷயங்களில் நம்பிக்கை கொண்டு, எவன் சாஸ்திரங்கள் சொல்கிறபடி நடக்கிறானோ அவன் தேவன். இப்படி இல்லாமல் மாறாக எவன் நடக்கிறானோ அவன் அசுரன். அவ்வசுரன் என்னை ஒருபொழுதும் அடையவே மாட்டான் என்கிறான் பகவான்.

**"தஸ்மாச் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே**
**கார்யாகார்ய வ்யவஸ்திதௌ |**
**ஜ்ஞாத்வா சாஸ்த்ர விதானோக்தம்**
**கர்ம கர்த்துமிஹார் ஹஸி ||"**

(16-24)

இது கடைசி ச்லோகம், இவ்வத்தியாயத்திற்கு. இதில் "*சாஸ்த்ரம் சொல்கிறபடி நட*" என்று உபதேசித்திருக்கிறான். இப்பொழுது சொல்லப்பட்ட விஷயம் கீதார்த்த சங்கிரஹத்தின் சுருக்கமாகும். இனி இவ்வத்யாய ச்லோகங்களைக்கொண்டு சாரமான அர்த்தங்களைக் காணலாம். பொதுவாக தேவர்கள், அசுரர்கள் என்று சொல்லிக் கேட்கும்போது இந்திரன் முதலான தேவர்களும் இராவணன் முதலான அசுரர்களும்தான் நம் புத்தியில் படும். இங்கு பகவான் அவ்விதம் சொல்ல-வில்லை. பகவான் சொன்ன தேவாசுர லக்ஷணம் யாரிடம் இருக்கிறதோ அவர்களே தேவாசுரர்கள். "*விஷ்ணுபக்தி: பரோதேவ: விபரீதஸ்ததாசுர:* என்றும் சொல்வதுண்டு. இவ்வர்த்தம் மனதில் படிய இரண்டு த்ருஷ்டாந்தங்கள். பஞ்சவடியில் பிராட்டிமட்டும் தனியாய் இருக்கும் சமயம் இலக்குமணன் பிராட்டியின் பருஷவாக்யம் பொறுக்கமாட்டாமல் பெருமாள் சென்ற மார்க்கத்தைத் தேடிப் போய் விடுகிறான். அப்பொழுது இராவணன் பிராட்டியை அபகரித்துக்கொண்டு போனான். அது கண்ட மான் முதலிய மிருகங்கள் எல்லாம் பிராட்டியின் துக்கத்தைப் பார்த்து கண்ஜலம் விட்டிருக்கின்றன.

"ஹ்ரியமாணும் து வைதேஹீம் த்ருஷ்ட்வா தீநோ திவாகர: |
ப்ரதித்வஸ்தப்ரப! ச்ரீமாந் ஆஸீத் பாண்டர மண்டல: ||"

"நாஸ்தி தர்ம: குத: சத்யம் நார்ஜவம் நாந்ரு சம்ஸதா |
யத்ர ராமஸ்ய வைதேஹீம் பார்யாம் ஹரதி ராவண: ||"

"இதி சர்வாணி பூதாநி கணச: பர்ய தேவயந் |
வித்ரஸ்தகா தீநமுகா ருருது: ம்ருகபோதகா: ||"

"உத்வீக்ஷ்ய உத்வீக்ஷ்ய நயநை: அஸ்த்ரபாதாவிலேக்ஷணா: |
சுப்ரவேபிதகாத்ராச்ச பூவு: வநதேவதா: ||"

(வா.ரா.ஆ.கா.52-40-43)

என்ற ச்லோகங்களால் இவ்விடத்தை வால்மீகிரிஷி பேசியிருக்கிறார். இதே சமயத்தில்

"த்ருஷ்ட்வா சீதாம் பராம்ருஷ்டாம் தீநாம் திவ்யேந சக்ஷுஷா ||"

"க்ருதம் கார்யம் இதி ச்ரீமாந் வ்யாஜஹார பிதாமஹ: |
ப்ரக்ருஷ்டா வ்யதிதாஸ்ச்சாஸந் சர்வே தே பரமர்ஷய: ||"

(வா.ரா.ஆ.கா.52-12-13)

என்று ப்ரம்மா சந்தோஷப்பட்டதாகவும் சொல்லியிருக்கிறார். இத்தகைய தேவர்களை தேவர்கள் என்றும், கீழே சொன்ன மான் முதலிய விலங்குகளை விலங்கு என்றும் எப்படிச் சொல்வது? இப்படிப்பட்ட தேவர்களை அசுரர்களாகவே சொல்ல வேண்டும் என்று பகவானின் திருவுள்ளம். இராவணவதத்திற்காக சீதாபகாரத்தை பகவான் வ்யாஜமாகக்கொண்டானே. வேறொன்றை வ்யாஜமாக ஆக்கிக் கொண்டிருக்கலாகாதா என்று அந்த சமயத்தில் ப்ரஹ்மா நினைத்திருந்தால், அது தேவ குணத்துக்குச் சேர பொருத்தமாய் இருந்திருக்கும்.

தேவேந்திரன் ஒரு சமயம், அதாவது பகவான் நரகாசுரனை வதம் பண்ணி இந்திரனுக்கு உபகாரம் பண்ணின அதே சமயத்தில் சத்யபாமை பாரிஜாத புஷ்பத்தை விரும்ப இந்திராணி கொடுக்க மாட்டேன் என்று மறுக்க பகவான் பெரிய திருவடி மூலமாக பாரிஜாதச் செடியையே அபகரிக்கப் போனபோது தேவேந்திரன், பகவான் செய்த நன்றியையும் மறந்து வஜ்ராயுதத்தை எடுத்துக்கொண்டு யுத்தத்திற்கே வந்ததாக சரித்திரம். "*என்னாதன் தேவிக்கு*" (பெரியாழ்வார் திருமொழி-3-9-1) என்ற பாசுரத்தில் ஆழ்வாரும் பேசியிருக்கிறார். இச்சரித்திரம் கீழேயும் சொல்லப்பட்டிருக்கிறது. பாகவதம், ஹரிவம்சம் இவற்றிலும் இக்கதையைப் பார்க்கலாம்.

**"கத்வா சுரேந்த்ர பவநம் தத்வாதித்யை ச குண்டலே |**
**பூஜித: த்ருதசேந்த்ரேந சஹேந்த்ராண்யா ச ஸப்ரிய: ||"**

பாகவதம் - 10-59-38

**"சோதிதோ பார்யயோத்பாட்ய பாரிஜாதம் கருத்மதி |**
**ஆரோப்ய சேந்த்ரான் விபுதாந் நிர்ஜித்ய உபாநயத்புரம் ||"**

பாகவதம் - 10-59-39

என்று பாகவதத்தில் சொல்லப்பட்டிருக்கிறது. இக்கதையைச் சொன்ன சுக முனிவரே

**"யயாச ஆநம்ய கிரீடகோடிபி:**
**பாதௌ ஸ்ப்ருசந்நச்சுதமர்த்தசாதநம் |**
**சித்தார்த்த ஏதேந விக்ருஹ்யதே மஹாந்**
**அஹோ சுராணாம் ச தமோ திகாட்யதாம் ||**

பாகவதம் - 10-5

என்று மிகவும் தேவதைகளை வெறுத்துப் பேசி இருக்கிறார். இத்தகைய இந்திரனை அசுரன் என்று சொன்னால் குற்றமேது? ஆகவே தேவாசுரவிபாகத்தை இவ்விதம் கூறாமல் (தேவர்களை தேவர்கள் என்றும் அசுரர்களை அசுரர்கள் என்றும் சொல்லாது) தனியாகச் சொல்கிறான்.

ஏகாதசி அன்று உபவாசம் இருந்தால் தான் உபவாசமாகும். வேறு தினத்தில் இருந்தால் அதுக்கு பகவதாஜ்ஞா அதிலங்கநம் பண்ணின பாபம் உண்டு. அதாவது ஆத்மாவைச் ச்ரமம் படுத்தினவர்களாக ஆவர். பகவான் நம்முடைய ஹிதத்தைத் தேடுகிறவன். அவன் சொற்படி நாம் நடக்காமல் போனால் நம்மை சிக்ஷிக்க அவனுக்கு உரிமை உண்டு. தேசிகன் இவ்விஷயத்தைக் கடுமையாகச் சொல்லி-யிருக்கிறார். இந்த அத்தியாயத்தில் "*ஆசா பாசசதைர்ப்பத்தா:*" (16-12) என்ற ஒரு ச்லோகத்தைப் பார்த்தாலே போதும். நாம் எல்லோரும் அசுரர்கள் என்பதைச் சொல்லவே வேண்டாம். இதைப் பிறகு விளக்கமாகப் பார்க்கலாம். இவ்வத்தியாயத்தின் முதல் ச்லோகம்.

**"அபயம் ஸத்வ ஸம்ஸூத்தி: ஜ்ஞாந யோக வ்யவஸ்திதி: |**
**தாநம் தமச்ச யஜ்ஞச்ச ஸ்வாத்யாயஸ் தப ஆர்ஜவம் ||"**
(16-1)

**"அஹிம்ஸா ஸத்யம் அக்ரோத: த்யாக: சாந்தி-ரபைசுநம் |**
**தயா பூதேஷ்-வலோலுப்த்வம் மார்த்தவம் ஹ்ரீரசாபலம் ||"**
(16-2)

**"தேஜ: க்ஷமா த்ருதி: சௌச-மத்ரோஹோ நாதிமாநிதா |**
**பவந்தி ஸம்பதம் தைவீமபிஜாதஸ்ய பாரத ||"**
(16-3)

எவனிடத்தில், நாம் சொல்லுகிற இந்த தேவ லக்ஷணங்கள் உண்டோ அவன் தேவன். எவனிடம் நாம் சொல்கிற இந்த அசுர லக்ஷணம் உண்டோ அவன் அசுரன். அசுர குணம் உடையவன் என்னைக் கிட்டவே மாட்டான். மேலும் மேலும் பிறப்பான். பயமில்லாதவன் தேவன். மழையில்லை, உணவுப் பொருள் இல்லை. அடுத்த மாதம் என் செய்வோம் என்று இவற்றைப்-பற்றிய பயம் உண்டாகிறதே. அது கூடாது. வயலில் நெல் பயிரிடப்படுகிறது. அதற்குப் பூச்சி விழுவதாகவும் அதனால் விளைச்சல் போய்விட்டது என்றும், இப்பொழுது சொல்லக்

கேட்கிறோம். எனக்குத் தெரிந்து முன்பு இந்த மாதிரிக் கேட்டதேயில்லை. இதனால் பயப்படுகிறோமே அது கூடாது. கிழத்தன்மை முதலியவற்றை அனுபவிக்கிற போது கஷ்டம் ஏற்படுகிறது. அது கூடாது.

மத்வாசாரியார் ஒரு த்ருஷ்டாந்தத்தை அழகாக அருளிச் செய்திருக்கிறார். அதைப் பார்த்தால் உண்மை மனதில் படும். ஒரு பிரபு குதிரை ஒன்று வாங்கினானாம். அக்குதிரை தன் வீட்டிற்கு வந்தது முதல் நொண்ட ஆரம்பித்ததாம். குதிரை நொண்டுகிறதைப்பற்றி எஜமானனுக்கு மிகக் கவலை உண்டாகி-விட்டதாம். சிலநாள் சென்று அக்குதிரையை விற்று அதற்குரிய பணத்தைப் பெற்று விடுகிறான். குதிரை நொண்டுவதைப் பற்றின கவலையிலிருந்து அவன் விடுதலை அடைகிறான். இந்த த்ருஷ்டாந்தத்தை அவர் விசாரிக்கிறார். குதிரைக்காரன் கவலைப்பட்டதற்கும், கவலையிலிருந்து விடுபட்டதற்கும் காரணம் என்ன? என்று. குதிரை நொண்டுவதற்காகவே உண்மையில் கவலைப்பட்டால் வேறிடத்தில் போயும் குதிரை நொண்டத்-தான் செய்கிறது. அதனால் கவலை தீர வழியில்லை. "*அந்தக் குதிரை என்னுடையது*" என்ற அபிமானம் இருந்தது. அதனால் கவலை ஏற்பட்டது. இப்பொழுது இவனது இல்லாமல் வேறொருவனுடையதாக ஆனதால் கவலை நீங்கிவிட்டது என்று ஒரு சாரப்பொருளை இங்குக் காட்டியிருக்கிறார். மற்றோர் உதாரணம்.

ஒருவன் ஒரு கன்னிகையை விவாஹம் செய்து கொள்கிறான். அவளுக்கு நோய் வருகிறது. அதனால் அப்புருஷன் சிரமப்-படுகிறான். இங்கு சிரமத்திற்குக் காரணம் என்னுடைய மனைவி என்னைச் சேர்ந்தவர் என்று எண்ணுகிற எண்ணம்தான் வருத்தத்திற்குக் காரணம். ரூபாயைக் கொடுத்து துன்பத்தை விலைக்கு வாங்கினாற்போலே என்னது என்ற அபிமானத்தால் துக்கப்படுகிறான் என்பது. இவ்வுதாரணங்களால் தெரிகிற-தல்லவா? "*ஈச்வர குடும்பத்திற்கு யார் பரிவது*" (கங்குலும் பகலும் ப்ரவேசம் திருவாய்மொழி-7-2) மனது ரஜோ குணம், தமோ குணம் கலந்து இருக்கக்கூடாது. இங்கு தமஸ் என்பதற்கு மனம் என்பது பொருள். ரஜோ குணம், தமோ குணம் இவை ஆகாரத்தால் உண்டாகின்றன. சாஸ்திரார்த்தம் மனதில் பட்டதும் "*ஆத்ம சிந்தனம், பரமாத்ம சிந்தநம்* " இவற்றில் நிலை நிற்க வேண்டும். நியாயமான முறையில் பொருளைத் தேடி ஸத்பாத்திரத்தில் விநியோகம் பண்ண வேண்டும். தானத்திற்கு

லக்ஷணமெல்லாம் சொல்லப்படுகிறது. இங்கு சொல்லிவருகிற விஷயத்தைக் கேட்டால் நமக்குக் கஷ்டமாகத்தான் இருக்கும். அநியாயமான முறையில் (Black Market) பணம் சம்பாதிக்கிற-வர்களைப் பகவான் எவ்வளவோ வைகிறான்.

**"ஈஹந்தே காமபோகார்த்தம் அந்யாயேந அர்த்த ஸஞ்சயாந் " ||**

(16-12)

என்று கூறியிருக்கிறான்.

***"அறனீனும் இன்பமும் ஈனும் – திறனறிந்து***
***தீதின்றி வந்த பொருள் "*** - என்றும் (திருக்குறள் 754)

***"அருளொடும் அன்பொடும் வாராப் பொருளாக்கம்***
***புல்லார் புரள விடல்"*** (திருக்குறள் 755)

என்றும் பொருளீட்டல் பற்றித் திருவள்ளுவரும் கூறியிருக்கிறார்.

ஒரு ராஜா பூரி (இனாம்) கொடுக்கின்றான். பெரும் கூட்டம். எல்லோரையும் உள்ளுக்குள்ளே அடைத்து வைத்துத் தான் வாசலில் நின்று கொண்டு ஒவ்வொருவருக்காக பூரி கொடுத்து வெளியே அனுப்பிக் கொண்டிருக்கிறான். பூரி வாங்கிச் சென்றவர்களில் ஒருவன் ராஜா கொடுத்த பூரியை வீட்டில் வைத்துவிட்டு மறுமுறை பூரி வாங்க வேண்டும் என்ற எண்ணத்தோடு மதிள் சுவர் ஏறிக் குதித்து மாளிகைக்குள் நுழைந்து கூட்டத்தோடு கூட்டமாய் மீண்டும் வருகின்றான். மதிள் ஏறிக் குதித்ததில் அவன் உடம்பு காயம் ஏற்பட்டி-ருக்கிறது. வரிசையில் வருகின்ற போது ராஜா அவனைப் பார்க்கிறான். அவனைப் பார்த்ததும் ராஜாவிற்கு அடையாளம் தெரிந்துவிட்டது. அவனைப் பார்த்து ராஜா, இப்பொழுது-தானே வாங்கிக் கொண்டு போனாய், மீண்டும் வந்திருக்-கிறாயே, நீ எப்படி வந்தாய்? உன் உடம்பில் எல்லாம் காயம் ஏற்பட்டிருக்கிறதே என்று ராஜா கேட்டான். அதற்கு அந்த யாசகன் சொல்கிறான், ஐயா, எனக்கு மூன்று மனைவிகள் உண்டு. அவர்களுக்கு பசி, தாகம், ஆசை என்று பெயர். அவருள் முதல் இருவரையும் அவ்வப்பொழுது சமாதானப்-படுத்தினால் சமாதானம் அடைந்து விடுவார்கள். "*ஆசை*" என்கிற மூன்றாவது மனைவி மட்டும் எவ்வளவு கொடுத்தாலும் சமாதானம் அடைவதே இல்லை. அதனால் தான் சுவர் ஏறிக்

குதித்து மீண்டும் வந்தேன் என்றானாம். அவன் பேச்சின் ரசத்தைக் கேட்டு மீண்டும் ராஜா பூரி கொடுத்தனுப்பினான் என்று ஓர் சரித்திரம் சொல்வதுண்டு. இதை பகவான் இங்கு அழகாகச் சொல்லியிருக்கிறான்.

**"ஆசாபாச சதை: பத்தா: காமக்ரோத பராயணா: |**
**ஈஹந்தே காமபோகார்த்த-மந்யாயேநார்த்த ஸஞ்சயாந் ||"**

(16-12)

என்று (அருளிச் செய்கிறான்) இங்கு காம சப்தத்திற்கு அர்த்தம், தான் விரும்பின விஷயத்தை அனுபவிக்க முடியாமல் எவன் தவிக்கிறானோ அந்நிலைக்குத் தான் "*காமம்*" என்று பெயர். இப்படிப்பட்ட காமத்திற்குத் தடை ஏற்படுகிற போது அது கோபமாக மாறுகிறது. அதற்குப் பொருள் தேவைப்படுகிறது. அதனால் அநியாயமான வழிகளில் பணத்தைச் சம்பாதிக்க வேண்டி வருகிறது. அதைத் தான் "*ஈகந்தே காம போகார்த்தம் அந்யாயோ அர்த்த ஸஞ்சயாந்*" என்று பகவான் கூறியிருக்கிறான். சுருக்கமாகச் சொன்னால் இப்பொழுது லோகம் இருக்கிற ஸ்வபாவம்தான் அசுர ஸ்வபாவம். இதற்கு வேறு த்ருஷ்டாந்தம் காட்ட வேண்டியதே இல்லை.

ப்ராஹ்மணன் வேதாத்யயனம் பண்ண வேண்டும். அத்யயனம் பண்ணுகிற போது இவன் எப்படி இருக்க வேண்டும்? என்ற விஷயங்களையெல்லாம் சொல்கிறான். வேதம், "*கர்ம காண்டம், ஞானகாண்டம்*" என்று இருவகையில் இருக்கிறது. கர்ம காண்டத்தில் சொல்லப்பட்ட விஷயங்களை பகவத் ஆராதனமாக எண்ணிச் செய்ய வேண்டும். தேவைகளைக் குறைத்துக் கொள்வது தபஸு. சிலர் பல வேஷ்டிகளை வைத்துக் கொண்டு, வண்ணானுக்குப் போட்டு அப்படியே உடுத்திக் கொள்கிறார்கள். ஆகாரத்தை ஆறுவேளை, எட்டு வேளை என்று அடிக்கடி சாப்பிடுவது இதெல்லாம் கூடாது என்று பகவான் சொல்கிறான். போக்ய சங்கோசம் வேணும் என்று பகவானுடைய அபிப்பிராயம். "ஒருவேளை *சாப்பிட்டால் யோகி*, இருவேளை *சாப்பிட்டால் போகி*, மூன்று வேளை *சாப்பிட்டால் ரோகி*" என்றுகூடச் சொல்வதுண்டு. அதிக ஆகாரம் அல்ப ஆயுசுக்குக் காரணம் என்று சொல்வார்கள். அப்படியே படுக்கை முதலிய சகல போக்யங்களையும் குறைத்துக் கொள்ளவேணும். சுருக்கமாகச் சொன்னால் எந்த விஷயத்திலும்

சுருக்கம் (எளிமை) சங்கோசம் வேணும். (சுருக்கம்) இதுதான் தபஸு. மனோ, வாக்கு, காயங்கள் ஒருபடிப்பட்டிருந்தால் ஆர்ஜவம் எனப்படும். இனி,

**"தம்ப: தர்ப: அபிமாநச்ச க்ரோத: பாருஷ்யமேவ ச |**
**அஜ்ஞாநம் சாபிஜாதஸ்ய பார்த்த ஸம்பதம் ஆஸுரீம் ||"**

(16-4)

வித்யை, தனம், குலம் இவற்றால் தன்னிடத்தில் இருப்பதற்கு மேல் கர்வம் உண்டாகிறது. இது அசுர சுபாவம். சக்கரவர்த்தி திருமகன் கல்யாண குணத்தை வால்மீகி சொல்கிறபோது "*உச்ய மாநோபி பருஷம் நோத்தரம் ப்ரதிபத்யதே*" என்று அருளிச் செய்திருக்கிறார். யாராவது பருஷமாகப் பேசுவார்களேயானால் பெருமாள் பதில் பேச மாட்டாராம். அப்படிப் பேசினாலும் மெதுவாக, இனிமையாகப் பேசுவாராம். பருஷ வசனங்களைச் சொல்லாமல் இருந்தால் வாக்கிற்கு ஒரு தபஸ் சித்திக்கிறது என்கிறான் பகவான். முதல்நாள் பட்டாபிஷேகம் என்று நிச்சயித்து மறுநாள் ராஜ்யம் கிடையாது. வனத்துக்கு போ என்று பெருமாளைப் பார்த்துச் சொன்ன வார்த்தைக்கு மேலாக ஒரு பருஷ வார்த்தை உண்டா? கிடையாது. அப்பொழுது பகவான் இராமன் எப்படி இருந்திருக்கிறான் என்பதைக் காணவேண்டும். இவ்வாறு தேவாசுர ஸ்வபாவத்தை பகவான் சொல்லக் கேட்ட அர்ஜுனன் தன்னைக் குறித்து நான் தேவனோ அசுரனோ என்று எண்ணத் தொடங்குகிறான். அவன் மனம் குழம்புகிறது. இப்பொழுது அர்ஜுனனுக்கு ஏற்பட்டிருக்கிற இந்த நிலை வருவது உலகத்தில் மிக அரிது. இந்நிலையில் பகவான் அர்ஜுனனை நோக்கி, "*நீ தெய்வீக சம்பத் உடையவன்*" என்று கூறுகிறான்.

**"தைவீசம்பத் விமோக்ஷாய நிபத்நாயாஸுரீ மதா |**
**மா சுச: சம்பதம் தைவீ மபிஜாதோ஽ஸி பாண்டவ ||"**

(16-5)

என்பது கிருஷ்ணன் வாக்கு. இப்படிச் சொல்லி மீண்டும் அசுர ஸ்வபாவத்தை விஸ்தாரமாகச் சொல்ல ஆரம்பிக்கிறான்.

**"ப்ரவ்ருத்திம் ச நிவ்ருத்திம் ச ஜநா ந விதுராஸுரா: |**
**ந சௌசம் நாபி சாசாரோ ந ஸத்யம் தேஷு வித்யதே ||"**

(16-7)

**"அஸத்யம் அப்ரதிஷ்டம் தே ஜகதாஹுரநீச்வரம் |**
**அபரஸ்பர ஸம்பூதம் கிம் அந்யத் காம ஹேதுகம் ||"**

(16-8)

இவ்விரண்டு ச்லோகங்களும் முக்கியமானவை. நாமும் பகவான் சொல்கிற லக்ஷணத்தை ஒத்துப் பார்த்து, நம்மிடம் ஆஸுர ஸ்வபாவம் இருந்தால், அதை விலக்கிக் கொள்ள வேண்டும். பகவானிடம் பிரார்த்தித்துத் தேவ குணத்தைப் பெறவேண்டும். இந்த ச்லோகத்தில் முதன் முதலில் ப்ரவ்ருத்தி தர்மம் இன்னது நிவ்ருத்தி தர்மம் இன்னது என்று அறியாதவர் அசுரகுணம் உடையவர் என்று சொல்கிறான். அவர்களிடம் சந்தியாவந்தனம், ஆசாரம், உண்மை பேசுதல் இவை முதலிய நல்லொழுக்கங்கள் இருக்க மாட்டா என்பது பகவத் அபிப்பிராயம்.

ஒரு தர்மத்தை நாம் செய்கிறபோது இகலோகத்திலோ, பரலோகத்திலோ ஒரு பலனை விரும்பிச் செய்யக்கூடாது. அசுரன் ஒரு பலத்தை விரும்பாது செய்யமாட்டான். ஹிம்சை பண்ணுவான். அவனுக்கு ப்ரவ்ருத்தி தர்மமும் நிவ்ருத்தி தர்மமும் தெரியாது. தேகத்தை (மணல்) மண் இவற்றைப் பயன் படுத்திக்கொண்டு சுத்தமாக வைத்துக் கொள்ள-மாட்டான். மண், ஜலம் இவற்றிற்கும் தேகசுத்திக்கும் தொடர்பு உண்டு. பகவத் சிந்தனைக்கும் மனசு சுத்திக்கும் சம்மந்தம் உண்டு.

***"புறந்தூய்மை நீரான் அமையும் அகந்தூய்மை***
***வாய்மையாற் காணப் படும்"*** (திருக்குறள்-298)

என்றார் திருவள்ளுவர். "*அஸத்யம் அப்ரதிஷ்டம்*" என்ற இந்த ச்லோகத்திற்குக் கொஞ்சம் விரிவாகப் பொருளைப் பார்க்கலாம். இவ்வுலகமும் இங்குள்ள யாவும் பகவானால் உண்டுபண்ணப்-பட்டவை. "*ஸத்யம் ஞானம் அநந்தம் ப்ரம்ஹ*" என்ற இந்த சுருதியிலுள்ள ஸத்ய சப்தத்தால் சொல்லப்படுகிறவன் பகவான். இவ்வுலகமும் ஸத்யமில்லை. எல்லாம் பகவானாகிற ஆத்மாவைப் பற்றித்தான் இருக்கின்றன என்று சொல்லவும் உண்மையில்லை. பொய். "*அஸத்யம் அப்ரதிஷ்டம்*" "*புருஷனும் ஸ்த்ரீயும் சேர்ந்தால் குழந்தை பிறக்கிறது, இங்கு தெய்வம் எதற்கு*" என்று எவன் சொல்கிறானோ அவன் "*அசுரன்*" என்கிறான் பகவான். "*அஸ்தி, அஸ்தி, அஸ்தி*" என்று சொல்கிறவன் ஆஸ்திகன். "*நாஸ்தி, நாஸ்தி, நாஸ்தி*" என்று சொல்பவன் நாஸ்திகன் என்று பாணிநி

மகரிஷியே இலக்கணம் வகுத்திருக்கிறார். இப்படிச் சொல்லிக் கொண்டு வந்து கடைசியில்

**"த்ரிவிதம் நரகஸ்யைதத் த்வாரம் நாசநமாத்மந: |**
**காம: க்ரோதஸ்ததா லோபஸ்தஸ்மாதேதத் த்ரயம் த்யஜேத் ||"**

என்கிறார். (16-21)

***"காமம் வெகுளி மயக்க மிவை மூன்ற***
***னாமங் கெடக்கெடு நோய் "*** (திருக்குறள் 360)

என்றார் திருவள்ளுவர்)

**"ஏதைர் விமுக்த: கௌந்தேய தமோத்வாரைஸ்-த்ரிபிர்நர: |**
**ஆசரத் யாத்மந: ச்ரேய: ததோ யாதி பராம் கதிம் ||"**

(16-22)

காமம், கோபம், லோபம் இவை கூடாது என்கிறான். காமம், கோபம் இவற்றின் பொருள் இங்கேயே கீழே சொல்லப்-பட்டது. லோபம் (லோபி) - தானும் அனுபவிக்கமாட்டான் பிறர்க்கும் கொடுக்கமாட்டான். இவனும் அசுரன் தான். இம்மூன்றும் நரக வாசல்கள் ஆகும். ஆத்மாவை இவை அழிக்கக்கூடியவை.

**"ய: சாஸ்த்ரவிதிமுத்ஸ்ருஜ்ய வர்ததே காமகாரத: |**
**ந ஸ ஸித்திம் அவாப்நோதி ந ஸுகம் ந பராம் கதிம் ||"**

(16-23)

**"தஸ்மாச் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே**
**கார்யாகார்ய வ்யவஸ்திதௌ |**
**ஜ்ஞாத்வா சாஸ்த்ர விதாநோக்தம்**
**கர்ம கர்த்துமிஹார்ஹஸி ||"**

(16-24)

இந்த நான்கு (21 முதல் 24) ச்லோகங்களும் மிக முக்கியம். இங்குதான் கவனிக்க வேண்டும். எவன் சாஸ்திரமாகிற கட்டளையை விட்டுவிட்டுத் தன் விருப்பத்திற்குச் சேர இருக்கிறானோ அவனுக்கு ஒரு நல்ல பலனும் உண்டாகாது. பரகதியும் கிடையாது. *"ஒன்றை விடுவதற்கோ ஒன்றைக் கொள்வதற்கோ உனக்கு அதிகாரம் இல்லை, சாஸ்திரம் சொன்னபடி செய்ய நீ கடமைப்பட்டவன்"* என்று பகவான் அர்ஜுனனை நோக்கிக் கூறுகிறான். சாதாரணமாக சமஸ்க்ருதம்

படிக்கிறவர்களுக்கும் கூட இந்த ச்லோகத்தைக் கேட்கிற-போது பொருள் சுலபமாகப் புலப்படும்.

மண்பாடு என்று சொல்லுவார்கள். அயோத்தியில் பிறந்தவர்க்கெல்லாம் இராமபக்தி உண்டாகும் என்று சொல்லு-வார்கள். இங்கு அயோத்தியில் இருந்த கூனிக்கு மட்டும் இராமனிடத்தில் பக்தி ஏற்படாமல் இருந்ததற்கு காரணம் என்ன? என்று விசாரித்து ஆசார்யர்கள் ஓர் சமாதானம் சொல்லியிருக்கிறார்கள். அதாவது "*ஞாதிதாஸி யதோ ஜாதா*" என்ற ச்லோகத்துக்குப் பொருள் சொல்கிறபோது உடாலி என்பவர் "*யத: குதஸ்ச்சிஜ் ஜாதா*" என்று வ்யாக்யானம் பண்ணினார். இத்தேசத்திலே பிறந்தாளாகில் பெருமாளுக்கு விரோதம் செய்யாளாகையினாலே எங்கேயோ ஓரிடத்தில் பிறந்தாள். ஒரு விழுந்தான் கிடக்கை என்கிறது. இந்நிலத்தில் பிறவாமை இவளுக்கு கொடுமை விளைந்தது என்கிறானிறே உடாலி. தேசந்தானே எல்லா நன்மைகளையும் பிறப்பிக்கவற்றா-யிருக்கும் காணும் என்று ஆசார்யர்கள் இந்த ச்லோகத்திற்கு வ்யாக்யாநம் செய்தார்கள்.

நம் தேசத்தில் பிறந்தவர்களுக்கு சாஸ்திரங்களில் நம்பிக்கை உண்டு. ஆனால் இப்பொழுதோ கூனி போல நம் தேச மக்களுக்கு மனமே மாறிப்போய்விட்டது. இந்த மண்பாடு எங்கு போயிற்றோ தெரியவில்லை. இதற்குக் காரணமும் புலப்படவில்லை. இதுபற்றித்தான் நாம் வருத்தப்பட வேண்டி-யிருக்கிறது. கீதை நம் தேசத்தில் மிகவும் முக்கியமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. இங்கு பகவான் தன் ஆணையை எவன் மறுக்கிறானோ அவனுக்குச் சுகமே இல்லை என்கிறான். "*கார்யா கார்ய வ்யவஸ்திதௌ*" இன்னது உபாதேயம், இன்னது த்யாஜ்யம் என்பதை அறிந்து கொண்டு பகவதாஜ்ஞையை அனுசரித்து நடக்க வேண்டும். பகவதாஜ்ஞையை விட்டுவிட்டு யாருடைய ஆஜ்ஞையை கேட்டு நாம் நடக்கிறோம்? சிலர் என்னைக் கேட்கலாம். பகவதாஜ்ஞைப்படி நீ நடக்கிறாயா என்று. இது உண்மை என்றால் பகவதாஜ்ஞைப்படி நடக்கமுடிய-வில்லையே, நமக்கு என்னகதி கிடைக்குமோ என்றுதான் இனிமேலாவது அவனுடைய ஆக்ஞா பரிபாலனம் பண்ணும்படி நம்மைச் செய்யமாட்டானா என்று மனத்தில் எண்ணமுண்டு.

இங்கு தேசிகர் ஒரு விஷயம் சொல்கிறார். சரீரம் போனதும் பரமபதத்தில் எனக்கு இருப்பு வேண்டுமென்று பிரார்த்திக்கிறார்கள். இங்கு ஒரு சிக்ஷை பண்ணுகிறார் அவர். அதாவது என் சரீரம் போனதும் உன் திருவடியில் சேர்ப்பது இருக்கட்டும். நான் பிறந்த பிறவிகளில் உன் ஆணையை எவ்வளவோ மறுத்திருக்கிறேன். இப்பொழுது மகான்கள் இடத்தில் இதுபற்றிக் கேட்கும்பொழுது, "*துஞ்சினார் சொல்லும் தொன்னெறி கேட்டே*" (திருமொழி-1-6-7) என்றபடி பயம் உண்டாகிறது. இந்த சரீரம் இருக்கிற பர்யந்தமாவது உன் ஆஜ்ஞைப்படி நடக்கும்படி பண்ணவேண்டும் என்று பகவானிடம் பிரார்த்தித்துக் கொள்ள வேண்டும் என்று ப்ரார்த்தனா ப்ரகாரத்தைச் சிக்ஷிக்கிறார் தேசிகர். பகவான் அருளிச்செய்த கீதையை வைத்துக் கொண்டே தங்கள் இச்சைக்குச் சேர சிலர் நடக்கிறார்களே. அது பகவான் திருவுள்ளத்துக்குச் சேரவே சேராது.

நம்முடைய பத்தினி, புத்திரர் முதலானார் நாம் சொன்ன வார்த்தையைக் கேட்காமல் போனால் நமக்கு எவ்வளவு கோபம் வருகிறது. எம்பெருமான் கண்ணனோ ஸர்வ வித பந்துவாகவும் இருக்கிறவன். அவனுடைய சாஸ்திரமாகிய ஆணையை மீறினால் நம்மைப்பற்றி அவனுக்கு எவ்வளவு கோபம் வரும் என்று பார்க்க வேண்டும். ஒரு மனுஷ்யன் பண்ணின சட்டத்தைக் காக்க எவ்வளவு கடுமையான நடவடிக்கை எடுத்துக் கொள்கிறார்கள். பகவான் பண்ணின சட்டத்தைத் தள்ளிவிட்டு எவ்வளவு நற்காரியங்களைச் செய்தாலும் உபயோகமில்லை.

கண்ணன் மேலான தெய்வம். அவனுடைய கட்டளையை அவசியம் பரிபாலனம் பண்ணவேண்டும். என்றாவது அவன் அவனுடைய ஆஜ்ஞா பரிபாலனம் பண்ண முடியவில்லையே என்ற வருத்தமாவது இருக்க வேண்டும். இந்த அத்தியாயத்தில் இதை பகவான் ரொம்ப முக்கியமாக அருளிச் செய்திருக்கிறான்.

**பதினாறாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினேழாம் அத்தியாயம்

**"அசாஸ்த்ரம் ஆஸுரம் க்ருத்ஸநம் சாஸ்த்ரீயம்**
**குணத: ப்ருதக் |**
**லக்ஷணம் சாஸ்த்ர ஸித்தஸ்ய த்ருதா ஸ்ய்த தஸோதிதம் ||"**

1) அசாஸ்த்ரம் எல்லாம் அஸாரம் 2) சாஸ்திரத்தில் சொல்லப்பட்ட விஷயம், 3) அஸாரமாவது. இம்மூன்று விஷயங்களும், இந்த அத்தியாயத்தின் சாரமாக சங்கிரஹ ச்லோகத்தில் சொல்லப்பட்டுள்ளன. இனி கீதா ச்லோகங்களைக் கொண்டு விரிவாக இவ்வர்த்தத்தை அனுபவிக்கலாம். பகவானுடைய அபிப்ராயத்தை நன்கு தெரிந்துகொண்டு அப்படியே நடப்பது-தான் உசிதம். வேறுவிதமாக நடப்பது உசிதமில்லை. அர்ஜுனா! நீ வேண்டும் என்று ஒன்றை விரும்பும் போதும் வேண்டாம் என்று ஒன்றை வெறுக்கும் போதும் உன்னுடைய இஷ்டப்படி செய்யக்கூடாது. *"தஸ்மாத் சாஸ்திரம் ப்ரமாணம் தே"* என்று கீழே அருளிச் செய்தபடி செய்யவேணும்.

சாஸ்திரம் என்ற சப்தத்திற்கு, வேதம், இதிகாசம், புராணம், உபநிஷத், ப்ரஹ்ம சூத்ரம் இவற்றத்தைத் தான் நம் ஆசார்யர்கள் அருளிச் செய்திருக்கிறார்கள். வேறுவிதமான கிரந்தங்கள் சாஸ்த்ரம் அல்ல என்றுதான் கிருஷ்ணனுடைய அபிப்பிராயமும். சாஸ்திரம் சொல்கிறபடி காரியங்களைச் செய்யவேண்டும் என்று பகவான் அருளிச்செய்கிறான்.

முதன்முதலில் அர்ஜுனன் கேட்கிற கேள்விக்கு பகவான் கிருஷ்ணனுக்கு மிகவும் சீற்றம் உண்டாயிருக்கிறது என்றுதான் நம் ஆசார்யர்கள் அர்த்தம் அருளிச் செய்திருக்கிறார்கள்.

**"யே சாஸ்த்ரவிதிம் உத்ஸ்ருஜ்ய யஜந்தே ச்ரத்தயாந் விதா: |**
**தேஷாம் நிஷ்டா து கா க்ருஷ்ண ஸத்வம் ஆஹோரஜஸ்தம: ||"**

(17-1)

வேதம் முதலான சாஸ்திரங்கள் எப்படி நடக்கவேண்டும் என்று சொல்லி இருக்கிறதோ அப்படி நடப்பது இருக்கட்டும். புறம்பாக உள்ள நூல்களிலும் சில தர்மங்கள் சொல்வது உண்டல்லவா? அவற்றிற்கு பலன் இல்லாமல் இல்லையே.

அப்பலன் *ராஜஸமா, தாமஸமா, ஸாத்வீகமா* என்று கேட்கிறான். இப்படிக் கேட்டதும் பகவானுக்கு மிகுதியாகச் சீற்றம் ஏற்படுகிறது. "*யேபி அந்ய தேவதா பக்தா: யஜந்தே ச்ரத்தயான் விதா:*" என்ற இடத்தில் சர்ச்சை செய்து கவனிக்க வேண்டி-யிருக்கிறது. இக்காலத்தில் துருஷ்கர்களுக்கு அல்லா தெய்வம். குரான் அவர்கள் நூல். கிறிஸ்தவர்களுக்கு ஏசு தெய்வம். பைபிள் அவர்கள் நூல். அவர்கள் அந்தந்த நூலில் சொல்லப்பட்ட விஷயங்களில் சிரத்தையாக இருந்து நடக்கிறார்கள். நம்முடைய வேதம் முதலான சாஸ்திரங்களை அவர்கள் ஒத்துக் கொள்வ-தில்லை. அதன்படி நடப்பதும் இல்லை. "*யே சாஸ்த்ரம உத்ச்ருஜ்ய*" என்று சொல்ல முடியாது. அப்பலன் ராஜஸமா, தாமஸமா, சாத்வீகமா என்று இவன் கேட்ட கேள்வி. பௌத்த மதம் இருக்கிறது. பகவான் நாராயணனே புத்தராக அவதரித்ததாக "*கள்ள வேடத்தைக் கொண்டு போய்ப் புறம்புக்கவாறும்*" திருவாய்மொழி-5-10-4) என்ற பாசுரத்தில் ஆழ்வாரே அருளிச் செய்திருக்கிறார். புத்தர் உபதேசித்தபடி சிரத்தையாக ஒருவன் நடக்கிறான். அவனுக்குப் பலன் இல்லை என்று சொல்ல-முடியாது. அப்பலன் ராஜசமா, தாமஸமா, சாத்வீகமா என்று இங்கு அர்ஜுனனுடைய கேள்விக்கு அபிப்பிராயம் என்றும் கொள்ளலாம்.

சாஸ்திரங்களில் வர்ணாச்ரம தர்மங்கள் சொல்லப்-பட்டுள்ளன. ஒருவனுக்குரிய தர்மத்தை மற்றவர்கள் சொல்வதற்கே ஒத்துக்கொள்ளவில்லை. செய்வதைப் பற்றிச் சொல்லவே வேண்டாம். ஸ்த்ரீகளுக்கு வேதம் ஓதுவதற்கு அதிகாரம் இல்லை. புருஷ ஸூக்தத்தில் பதினாறு ரிக்குகள் உண்டு. அவற்றைச் சொல்லி பகவானுக்கு ஆராதனம் செய்வதுண்டு. அதற்கு "*ஷோடச உபசாரம்*" என்று பெயர். ஸ்த்ரீகள் இப்படி பதினாறு உபசாரங்களை, வேதத்தைச் சொல்லி பகவானுக்கு ஆராதனை பண்ணினால், தர்மமா? உபசாரமாகுமா? என்றால் இல்லை என்றுதான் சொல்லப்பட்டிருக்கிறது. இப்படி ஸ்த்ரீகள் பூஜை செய்ய சாஸ்திரம் இடம் கொடுக்கவில்லை. ஒரு ஸ்த்ரீ, புருஷஸூக்தாதிகளைச் சொல்லி ஷோடச உபசாரத்துடன் மிகச் சிரத்தையாக பகவத் ஆராதனம் செய்கிறார். இதற்குப் பலன் இல்லை என்று சொல்லிவிடமுடியுமா? அப்பலன் ராஜசமா, தாமசமா, சாத்வீகமா என்று கூட அர்ஜுனன் கேள்விக்குக் கருத்தாகக் கொள்ளலாம். இதுதான் கேள்வியின் சாரம்.

"*வர்ணாச்ரம விரோதமான உபசாரம், அபசாரம்*" என்று ரகசிய கிரந்தங்களில் நம்முடைய ஆசார்யர்கள் அருளிச் செய்திருக்கிறார்கள். கிரஹங்களில் புருஷர்கள் திருவாராதனம் செய்வதில்லை. பத்தினி பூஜை செய்வது பரம சந்தோஷமாய் இருக்கிறது. அவர்கள் அவள் கொடுக்கிற தீர்த்தம் ப்ரசாதங்களைச் சிரத்தையாக வாங்கிக் கொள்வர். இது சாஸ்திர சம்மதமா, இல்லையா என்று விசாரித்தால் சாஸ்திர சம்மதமே இல்லை என்பது தான் சித்தாந்தம். இப்படி இருக்க ஏசு, புத்தன், அல்லா, நாராயணன் எல்லோரும் ஒன்று தான். பெயர் தான் வேறு என்று இக்காலத்தில் ஒரு புதுக்கொள்கை பரவி வருகிறது. இதைப் பற்றி அதிகமாகச் சொல்லக்கூடாது. மேலும் இக்காலத்தில் புத்தனை மிகவும் கொண்டாடிப் பேசுகிறார்கள். ஸ்ரீராமாயணத்தில் இராமன் ஜாபாலியிடம் பேசும் பொழுது புத்தனைத் திருடன் என்று கூறியிருக்கிறான். புத்த மதத்தை ஆதி சங்கரர், இராமாநுஜர், ஆனந்ததீர்த்தர் முதலானோர் யாரும் ஒத்துக்கொள்ளவில்லை. அதை எல்லோரும் கண்டித்திருக்கிறார்கள்.

ஒருசமயம் இராமகிருஷ்ண மடத்திற்கு நான் இராமநுஜ ஜயந்தி உபன்யாசத்திற்காகச் சென்றிருந்தேன். அப்பொழுது சங்கரர், இராமாநுஜர் இவர்கள் எப்படிப் புத்த மதத்தைக் கண்டிக்கிறார்களோ அவ்விதம் எடுத்துச் சொன்னேன். உபன்யாசம் முடிந்ததும், இராமகிருஷ்ண மடத்து அதிகாரி இந்த மடத்திற்கு எந்த மதத்திலும் விரோதமில்லை. இனி வரும் நாளில் புத்த ஜயந்தியையும் கொண்டாடுவோம். எல்லோரும் வரவேண்டும் என்றார். இப்படி இருக்கிறது உலகம்.

ஆக, இப்படி அர்ஜுனன் கேட்ட கேள்விக்கு பகவான், "*அசாஸ்த்ர விஹிதம் கோரம்*" (17-5) என்ற ச்லோகத்தால் பதில் சொல்கிறான். அதில் அப்படிப்பட்டவர்களுக்கு நான் பலன் கொடுக்க மாட்டேன் என்கிறான். இப்படிப்பட்ட கண்ணனும், அல்லாவும், ஏசுவும் ஒன்றுதான் என்கிறவர்கள் எவ்வளவு தான் சிரத்தையாக பூஜை செய்தாலும் அவர்களுக்குப் பலன் கொடுக்கமாட்டேன் என்கிறான்.

**"ச்ருதிர் ஸ்ம்ருதிர் மமைவாக்ஞா"**
**"ஆக்ஞா ச்சேதி மம த்ரோஹி மத்பக்தோபி ந வைஷ்ணவ:"**

என்ற ச்லோகத்திற்கு எது பொருளோ அதுதான் "*அசாஸ்த்ர விஹிதம் கோரம்*" என்ற ச்லோகத்திற்கும் பொருள். "*தஸ்மாத் சாஸ்த்ரம் ப்ரமாணம் தே*" (16-24) என்று இப்பொழுது தான் கீழ் அத்தியாயத்தில் சொல்லி முடித்திருக்கிறான். இப்படிச் சொல்லி முடித்த பிறகும் இம்மாதிரிக் கேள்வி கேட்டால் அவன் திருவுள்ளம் என்னவாயிருக்கும்? நேற்றைய தினம், நம் தேசத்தில் பிறந்தவர்களுக்கு பண்பாட்டினாலே, சாஸ்திரத்தில் அதிகமாக பக்தி இருந்தது, இப்பொழுது அதுவும் குன்றிவிட்டது என்று சொன்னேன். இப்பொழுது, "*எல்லாம் ஒன்று*" என்று சொல்கிறார்களே? இது ஒரு மயக்கம். இந்த எண்ணம் அக்காலத்திலேயே அர்ஜுனனுக்கு ஏற்பட்டிருக்க வேண்டும் என்று தோன்றுகிறது. இக்கேள்விக்கு பகவான் நேராகப் பதில் சொல்லவில்லை. உண்மை ஒருபுறம் இருக்க என்னதான் எடுத்துச் சொன்னாலும், உண்மை லோகத்தில் படுவதில்லை. இது ஒரு சிரமமான காரியம். சாஸ்திரம் சொல்கிறபடி செய்ய வேணும் என்று பகவான் சொன்னான். கீழே, உடனே அர்ஜுனன் வேறு விதமாகச் செய்தால் பலன் உண்டா? இல்லையா என்றுகூடக் கேட்காமல் "*என்ன பலன்?* " என்று கேட்கிறான். அப்பொழுது பகவானுக்குத் திருவுள்ளம் எப்படி இருந்திருக்கும்?

**"த்ரிவிதா பவதி ச்ரத்தா தேஹிநாம் ஸா ஸ்பாவஜா |**
**ஸாத்விகி ராஜஸீ சைவ தாமஸீ சேதி தாம் ச்ருணு ||"**

(17-2)

**"ஸத்வாநுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத |**
**ச்ரத்தா-மயோऽயம் புருஷோ யோ யச்-ச்ரத்த:ஸ ஏவ ஸ: ||"**

(17-3)

**"யஜந்தே ஸாத்விகா தேவாந் யக்ஷரக்ஷாம்ஸி ராஜஸா: |**
**ப்ரேதாந் பூதகணாம்ச்சாந்யே யஜந்தே தாமஸா ஜநா: ||"**

(17-4)

இந்த மூன்று ச்லோகங்களும் முக்கியமானவை. "*ச்ரத்தை*" என்பது மூன்று விதம் உண்டு. ஸாத்விகீ, ராஜஸி, தாமஸி என்று மூன்று விதம். முதலில் ருசி, வாசனை, ச்ரத்தை இவற்றிற்கு அர்த்தம் நன்கு தெரிய வேண்டும். ஒருவன் வேதத்தில் சொல்லப்பட்ட காரியத்தையோ லோகப் பிரசித்தி பெற்ற காரியத்தையோ செய்கிறான். இவற்றுள் வேதோக்தமான காரியத்தை செய்கிறான் என்று வைத்துக் கொள்வோம்.

வேதம் ராஜஸமான காரியத்தையும் தாமஸமான காரியத்தையும் தூண்டுகிறது. சிலர் "*இப்படியும் வேதம் சொல்லுமா*" என்று கேட்கலாம். வேதத்தில் இப்படிச் சொல்லியிருக்கிறது என்பது வேதத்தை அறிந்தவர்களுக்கு நன்கு தெரியும். சாதாரணமான ஒரு மனுஷனை எடுத்துப் பார்த்தால், நாம் நன்கு வாழ-வேண்டும், நம் சத்ரு வாழக்கூடாது என்ற எண்ணத்தோடு இருக்கிறதைப் பார்க்கிறோம். இப்படி எண்ணுகிறவன் தாமஸன். அவனுக்கும் சில காரியங்களை வேதம் சொல்லியிருக்கிறது. அதன்படி நடந்தால் அந்தக் காரியம் அவனுக்குச் சித்திக்கும். "*ச்யேநேந அபிசரந் யஜேத*" என்பது அவ்விஷயத்தைச் சொல்லுகிற வேத வாக்கியம். இது சூன்யம், ஏவல் போன்றது. "*யதா ச்யேநோ நிபத்ய ஆதத்தே*" என்கிறபடி கழுகு, கோழிக்குஞ்சைத் தூக்கிக் கொண்டு போவது போல, சத்ருவை அந்த ச்யேநயாகமாவது கொண்டு போய் விடும் என்று சொல்லப்பட்டிருக்கிறது. "*ரஜோ ராஜாத்மகம் வித்தி*" என்று கீழே பார்த்தோம். ஸ்திரீ புருஷர்களுடைய சேர்க்கை ரஜோ-குணத்தின் காரியம் என்று கீழே சொல்லப்பட்டிருக்கிறது. அப்சரஸ்திரீகள் மிக அழகுடையவர்கள். "*அவர்களோடு ரமீ*" என்று வேதம் சொல்லியிருக்கிறது. ஊர்வசி சாலோக்யத்தைப் பெறுவதற்காக விக்ரமன் யாகம் பண்ணினான் என்றும் சொல்லப்பட்டிருக்கிறது. மனுஷ்ய சரீரம் தாழ்ந்தது. தேவ சரீரம் உயர்ந்தது (அங்குள்ள) தேவ லோகத்திலுள்ள போகத்தை அனுபவி என்று சொல்லி மனுஷ்ய லோக அனுபவத்தை நரகம் என்றே சொல்லியிருக்கிறது. "*சாஸ்திரங்கள் பகவானை அனுபவி அவனை ஆராதனம் பண்ணு*" என்று சொல்லியிருக்கிறது. வேதமாகிற என்னுடைய சாஸ்திரத்தில் அந்தந்த குணங்கள் உடையவனுக்குச் சேர தர்மங்கள் சொல்லப்பட்டுள்ளன. மற்ற நூல்களில் எது சொல்லியிருந்தாலும் அது சரியில்லை.

அபிசார கர்மாவை முதலில் பண்ணினவனுக்கு அதன் பலனைப் பார்த்து வேதமாகிற சாஸ்திரத்தில் ருசி ஏற்படும். உதாரணமாக, இன்று அதிகாலையில் எழுந்திருந்து அநுஷ்டானம் பண்ணினால் நாளைக்கும் அந்தப் பழக்கம் வரும். விட்டுவிட்டால் வராது. அப்படியே இந்தப் பழக்கம் தொடரும். இப்படி, முதலில் தாமஸ காரியத்தைச் செய்தவனுக்கு மேலும் மேலும் அக்காரியத்தைச் செய்வதில் ருசி உண்டாகும். அப்படியே மற்ற அதிகாரிகளுக்கும் மற்ற காரியங்களில் இப்படியே

செய்து செய்து வாசனை உண்டாகி பிறகு ருசி ஏற்பட்டு இறுதியில் ச்ரத்தை உண்டாகிறது. ச்ரத்தை என்பது, தான் நினைத்த காரியத்தை சாதிப்பதற்காக நம்பிக்கை முன்னாக காரியங்களில் ஈடுபடுகிற பரபரப்பு! அந்தந்த குணத்திற்குச் சேர பூஜிக்கின்றான். இதற்குக் காரணம் வாசனா, ருசி, சுபாவம் இவைகளே. நாம் இதைச் செய்தால் இன்ன பலன் உண்டு என்று நம்பிக்கையுடன் செய்வதற்கு ச்ரத்தை என்று பெயர். இப்படி பகவான் சொல்கிற வார்த்தையைப் பார்த்தால் வேறு எந்த மதத்திற்கும் கீதையில் இடம் இல்லை என்பது இங்கு உணரவேண்டும். "*ஸத்வானுரூபா ஸர்வஸ்ய ச்ரத்தா பவதி பாரத !*" (17-3). நம் மனது ரஜோகுணம், தமோ குணமில்லாமல் இருந்தால் ஸத்வ காரியம் ஏற்படும். அவனவனுடைய மனதில் உண்டாகும் குணத்தைப் பற்றி காரியங்கள் உண்டாகின்றன. இதைத்தான் "*யஜந்தே சாஸ்விகா*" (17-4). என்று மேல் ச்லோகத்தால் சொல்லுகிறான். அசாஸ்திரீயமான காரியங்களை எவ்வளவு ச்ரத்தையாகப் பண்ணினாலும்கூட அதற்குப் பலன் கிடையாது. நம்முடைய மதக் கிரந்தங்களை நாம் விட்டுவிட்டோம். இதர மத சம்மந்தம் நமக்கு ஏற்படுகிறது. அது தவறு என்று சொன்னால் சிலருக்கு மனம் கஷ்டமாக இருக்கும். இப்படி ஆகிவிட்டது நம் சமூகம். "*அசாஸ்த்ர விஹிதம் கோரம்*" (17-5) துருஷ்கர்களுக்குச் சில பண்டிகைகள் உண்டு. பகலில் போஜனம் செய்வதில்லை. இரவில் ஒருவேளை சாப்பிடுவார்கள். உபவாசாதிகள் அவர்களுக்கு உண்டு. இவர்களைப் பார்த்து பகவான் சொல்கிறான். "*என் கட்டளையையும் செய்யாமல் மீறி என் ஆத்மாவையும் வாடும்படி பண்ணுகிறான்*" என்கிறான். நம் சமூகத்தில் கைலி கூட கட்டிக் கொள்கிறார்கள். மதுவை ஒழிக்க வேணும் என்று சொன்னார்கள். இப்பொழுது கண்ணன் சொல்வதைப் பார்த்தால், "*ஓட்டல்களை ஒழிக்க வேண்டும்*" என்று தெரிகிறது. "*தத்குருஷ்வ மதர்ப்பணம்*" என்று ஒரு ச்லோகம். "*எது செய்தாலும் கிருஷ்ணார்ப்பணம் என்று செய்ய வேண்டும்*" என்பது இதன் பொருள். இங்கு ஒரு ரசமான வ்யாக்யானம் சொல்வதுண்டு. எந்தக் காரியத்தைச் செய்கிறாயோ அதைக் கிருஷ்ணார்ப்பணம் என்று செய் என்றதும், அதற்கு அர்ஜுனன், நான் நல்ல காரியத்தைச் செய்தால்- தானே அப்படிச் செய்ய-வேண்டும். "*ந தர்ம நிஷ்டோஸ்மி*" (ஸ்தோத்ரரத்நம்-22) என்றபடி நான் ஒரு நற்காரியத்தையும் செய்யவில்லையே என்றானாம். அப்பொழுது பகவான், நீ சாப்பிடுகிறாயா இல்லையா,

சாப்பிடவேயில்லை என்று சொல்லமுடியாது. *நீ சாப்பிடுகிற பொழுது கிருஷ்ணார்ப்பணம் என்று சாப்பிடு* என்று பகவான் சொன்னானாம். "*க்ஷத்திரபந்துமன்றே பராங்கதி கண்டு கொண்டான்*" (திருமாலை-4) என்றபடி க்ஷத்ர பந்துவின் கதையை இங்கு நினைவு படுத்திக் கொள்ளவேண்டும்.

ஆகாரவகைகள், யக்ஞவகைகள் என்று ஒவ்வொன்றையும் எடுத்து ஒவ்வொன்றிலும், ராஜசம், தாமஸம், சாத்விகம் என்று சொல்லப் போகிறான். "*சாஸ்திரீயம் குணதப்ருதக்*" அசாஸ்த்ரத்தில் சூன்யம் தான். பலனே இல்லை.

**"ஆயு: ஸத்த்வ பலாரோக்ய ஸுகப்ரீதி விவர்த்தநா: |**
**ரஸ்யா: ஸ்நிக்தா: ஸ்திரா ஹ்ருத்யா ஆஹாரா: ஸாத்விகப்ரியா: ||"**
(17-8)

**"கட்வம்ல லவணாத்யுஷ்ண தீக்ஷ்ண ரூக்ஷ விதாஹிந: |**
**ஆஹாரா ராஜஸஸ்யேஷ்டா து:க்க சோகாமய ப்ரதா: ||"**
(17-9)

***"யாதயாமம் கதரஸம் பூதி பர்யுஷிதம் ச யத் |***
***உச்சிஷ்டமபி சாமேத்யம் போஜநம் தாமஸ ப்ரியம் ||"***
(17-10)

"*நான் சொல்கிறபடி சாத்வீக ஆகாரத்தை புஜிப்பானேயானால் ஞானம், ஆயுசு, பகவத் ப்ரீதி, ஆரோக்யம் இவை உண்டாகும்*" என்கிறான். பலத்தை முதலில் சொன்னால் தான் நமக்கு அதில் ஆசை உண்டாகுமென்று பலனை முதலில் சொல்லுகிறான். நற்காரியங்களைச் செய்தால் ஆயுசு முதலானவைகள் உண்டாகும். அதற்கு ஸாத்விக ஆகாரம் முக்கியம். "*ஸத்வாத் சஞ்சாயதே ஞானம்*" குக்ஷியிலுள்ள அக்னிக்கும் ப்ராணனுக்கும் வ்ருத்தி உண்டானால் தான் பலன் என்று உரை சொல்லப்பட்டிருக்கிறது. ஸத்வம் இருக்கிறவனுக்கு நற்காரியம் உண்டாகிறது. அவனுக்கு உடனே பலன் கிடைக்கும். "*உத்ஸவங்களில் பகவானுக்குத் தளிகை சமர்ப்பிக்கிற பொழுது இனிப்பான பதார்த்தங்களைத்தான் சமர்ப்பிக்க* வேண்டும்." புளியோதரை ராஜசமாகும். "*பரம ஸத்வ ஸமாச்ரய:*" என்று கொண்டாடப்படுகிறவன் ஸர்வேச்வரன். அவனுக்கு ஸாத்விகமான பதார்த்தங்களைத் தான் கண்டருளப் பண்ண வேண்டும். இந்த இடங்களில் தேசிகர் வைத்ய சாஸ்திரத்தை எடுத்துப்

பேசியிருக்கிறார். தயிரில் மதுர ரசம் உண்டு. அதனால் *"தத்யன்னம் தேவதா முக்கியம்"* என்று சொல்லப்பட்டிருக்கிறது. நெய்யை முக்கியமாகச் சொல்லுகிறார்கள். நெய்யிலேயே பக்ஷணம் செய்ய வேண்டுமென்று பகவான் திருவுள்ளமாகத் தெரிகிறது. ஸாத்விகமான ஆகாரத்தை புஜிக்கிறபோது ஜரிக்கிறதும் சுகமாக இருக்கும். பதார்த்தங்கள் கண்ணுக்கும் நன்றாய் இருக்க வேண்டும். இப்படிப்பட்ட ஸாத்விக ஆகாரங்களால் நற்காரியம் செய்ய நேரிடும். தனி உப்பைச் சாப்பிடுவது மாமிசத்துக்கு ஒப்பாகும். தாமஸம், ஒரு யாமத்திற்கு முன் பக்குவம் செய்த பதார்த்தமாக இருந்தால் அது தோஷம். உச்சிஷ்டமும், தோஷம். பகவானுக்கு விநியோகப்படாத பதார்த்தத்துக்கு, *"அமேத்யம்"* என்று பெயர். இவையெல்லாம் தாமஸமாகும். பாலை இவ்வளவு நாழிகைக்கு மேல் போனால் சாப்பிடக்கூடாது என்பர். *"கறந்த பாலில் நெய்யே போல்"* என்ற திருவாய்மொழியில் ( 8-5-10 ), *"கறந்த பால்"* என்பதற்கு "காலத்தாலும் மதனாதியாலும் தோற்றுகிற நெய் கறந்த காலத்தில் தோற்றாதிறே" என்று சொல்லியிருக்கிறார்கள். நாழிகை ஆக ஆக அதற்கு அசுத்தி உண்டாகிறது. உச்சிஷ்டம் கூடாது என்ற இவ்விடத்தில் விசாரம் உண்டு. அதாவது ஆசாரியன், பர்த்தா, பிதா இவர்களுடைய உச்சிஷ்டம் அவசியம் வேண்டும் என்று சாஸ்திரம். சபரி, ஆசார்ய உச்சிஷ்டத்தை ஸ்வீகரித்தவள். அவளுக்கு நல்ல கதி கிடைத்திருக்கிறது. பாகவதாளுடைய உச்சிஷ்டம் கூடுமா, கூடாதா என்பது பற்றி ஒரு விசாரம் உண்டு. இங்கு *"தென்னாச்சார்ய சம்பிரதாயத்தில் பாகவத உச்சிஷ்டம் கூடும்"* என்று அங்கீகரிக்கப்பட்டிருக்கிறது. *"தேசிக சம்பிரதாயத்தில் அது* **பாண்டத்ஸ்த்த சேஷம்** *என்று பரிஷ்காரம் செய்யப்பட்டிருக்கிறது."* *"பலாநிச சுபக்வாநி"* என்பது பாத்ம புராண வசநம்.

*"பத்ரம், புஷ்பம்,. பலம், தோயம் "* என்பது பகவத் வாக்யம். இங்கு உதாரணமாக நான்கு சரித்திரங்கள். துர்வாசரை துரியோதனன் திருப்தி அடையும்படி பூஜித்தான். அதனால் திருப்தி அடைந்த துருவாசர் என்ன வேணும்? என்று கேட்டார். அதற்கு துரியோதனன், வனவாசத்தில் இருக்கும் பாண்டவர்களிடம் இவ்விதமே பூஜையைப் பெற்றுக் கொள்ளும் என்றாம். அவரும் பதினாயிரம் சிஷ்யர்களோடு பாண்டவர்களிடம் வந்து

பூஜையை விரும்பின போது கண்ணனுடைய அனுக்ரஹத்தினால் அவரை திருப்தி அடையச் செய்தான் என்பது வரலாறு. இதைப் பாரதத்தில் விஸ்தாரமாகக் காணலாம். சில சாஸ்திரார்த்தம் நமக்குத் தெரியாது. ஒருவன் தீர்த்த பானம் பண்ணின டம்ளரில் மற்றவன் தீர்த்த பானம் பண்ணக்கூடாது. "*புக்த சேஷமிவோதகம்*" என்று ஸ்ரீராமாயணத்தில் பிராட்டி சொல்கிறாள். பெரியவர்கள் புஜித்த பின்தான் சிறியவர்கள் புஜிக்க வேண்டும். கண்ணன் *பாண்டஸ்த சேஷத்தை* (கீரையை) புஜித்திருக்கிறான். அது, *பத்ரம், புஷ்பம் ச்லோகத்தில் பத்ரமாகும். ஆண்டாள் சூடிக்கொடுத்தது புஷ்பமாகும்.*

மூன்று வித ஆகாரத்தையும் சொன்ன பகவானுக்கு என்ன கருத்து என்றால், ராஜஸ தாமஸ ஆகாரங்களை விலக்கி ஸத்வமான ஆகாரத்தையே புஜிக்க வேண்டும். அதனால் வரும் ஞானம் வளரும். அதனால் ஆத்ம க்ஷேமம் உண்டாகும் என்பது தான் பகவத் அபிப்பிராயம். கடைசியில் "*ஓம் தத்ஸத்தி நிர்தேஸோ ப்ரம்மணஸ்த்ருவித: ஸ்ம்ருத:*" (17-23) என்று சொல்லப்பட்டிருக்கிறது. வைதிகமான கார்யத்துக்கெல்லாம் ப்ரணவம் லக்ஷணம். கீழ்ச் சொன்ன விஷயங்களைச் சங்கிரஹித்துக் கொள்ளவேண்டும். ஸாத்விக, ராஜஸ, தாமஸ இவற்றின் பலன் சொல்லப்பட்டு இருப்பதால் வேறுவிதமாகச் செய்யக்கூடாது. அந்யதாக்ருதம் அக்ருதம். வேத சம்பந்தப்பட்ட எல்லாவற்றிற்கும் ப்ரணவம் உண்டு. மங்கள காரியத்திற்கு "*ஸத்* " என்ற சப்தம் சொல்லப்படும்.

**பதினேழாம் அத்தியாயம் முற்றும்.**

# பதினெட்டாம் அத்தியாயம்

**"ஈச்வரே கர்த்ருதா புத்தி: ஸத்வோபாதேயதாந்திமே |**
**ஸ்வகர்ம பரிணாமச்ச சாஸ்த்ர ஸாரார்த்த உச்யதே ||**

என்பது சங்கிரஹ ச்லோகம். இது 17ஆம் அத்தியாயத்தில் கிருஷ்ணன் பரக்க அருளிச் செய்த விஷயத்தை ஒன்று சேர்த்து அருளிச் செய்வதாகச் சொல்லலாம். கர்மயோகமோ ஜீவாத்மயோகமோ, பக்தியோகமோ செய்யும்போது தன்னைச் செய்கிறவனாக நினைக்கக்கூடாது என்றும் *"ஈச்வரே கர்த்ருதா புத்தி:"* என்றபடி பகவானிடத்தில் கர்த்ருத்வ புத்தியை வைக்க வேணும் என்றும் சொல்லப்பட்டுள்ளது. காரியங்களில் ரஜஸ், தமோ குணங்கள் மேலிட்டபொழுது நற்காரியங்களைச் செய்ய முடியாது. ஸத்வ குணத்தால்தான் நல்ல காரியம் செய்ய முடியும். ஆகவே அக்குணமே மேலோங்கும்படி நடக்க-வேண்டும் என்றும் சொல்லப்படுகிறது. பிராமணன் முதலிய நான்கு வர்ணங்களும் உண்டு என்பதை 4ஆம் அத்தியாயத்தில் *"சாதுர்வர்ண்யம் மயாச்ருஷ்டம்"* (4-13) என்று சொல்லியிருக்கிறான். அவற்றை இங்கு சிறிது விவரித்து, *"அந்தந்த வர்ணாச்ரமங்களுக்குத் தகுந்த கர்மத்தை சாஸ்திரங்களில் சொல்லியபடி செய்யவேண்டும், அதனால் ஆத்மக்ஷேமம் ஏற்படும்"* என்று இந்த அத்தியாயத்தில் தொகுத்துக் கூறுகிறான். கீதையில் சாரமான பொருள் எது என்று விசாரிக்கிற போது சங்கிரஹ ச்லோகத்தாலும், கீதையில் பகவத் வசனத்தாலும் *"பகவானை அடைவதற்கு வழி பக்திதான் சிறந்தது"* என்பது தெரிகிறது.

இனி, இந்த சங்கிரஹ ச்லோகத்தினுடைய கருத்தை கீதா ச்லோகங்களைக் கொண்டு அனுபவிக்கலாம். முதன் முதலில் அர்ஜுனன்,

**"ஸந்ந்யாஸஸ்ய மஹோபாஹோ தத்த்வமிச்சாமி வேதிதும் |**
**த்யாகஸ்ய ச ஹ்ருஷீகேச ப்ருதக்கேசி நிஷூதந ||"**

(18-1)

என்று கேள்வி கேட்டிருக்கிறான். அதற்கு பகவான், *"காம்யாநாம் கர்மணாம்"* (18-2) என்று தொடங்கி பதில் சொல்கிறான். இந்த சம்பாஷணையில், சங்கிரஹ ச்லோகத்தில்

முதலில் சொன்ன ஈச்வரே கர்த்ருதா என்ற விஷயத்திற்கு ஆதாரங்களைக் காணலாம். "*சந்யாசஸ்ய மஹாா பாஹோா ரிஷீகேச:*" என்ற இரண்டு சம்போதனங்களை செய்திருக்கிறான். ரிஷீகேச: என்றதில் "*ரிஷீகம்*" என்றது இந்திரியங்களையும் "*கேசி*" என்ற அசுரனை நிரசித்தவன் என்றும் குறிக்கப்படுகிறது. இந்த அவதாரத்தில் "கேசி *நிஷூதன்*" என்றும் பகவானுக்குப் ப்ரசித்தி உண்டு.

சந்நியாசமானது ஆத்ம க்ஷேமத்திற்குக் காரணமாகத் தெரிகிறது.

**"ந கர்மணா ந ப்ரஜயாதநேந த்யாகேநைகே அம்ருத்தவமானசு: வேதாந்த விக்ஞான சுநிஸ்சிதார்தா: ஸந்யாஸயோகாத்யத: ஸுத்தஸத்வா: தே ப்ரஹ்ம லோகே து பராந்தகாலே பராம்ருதாத் பரிமுச்யந்தி சர்வே !!**

என்பது ச்ருதி வாக்கியம். "*த்யாக:*" "*சந்நியாச:*" என்ற சொற்களுக்கும் ஒரே பொருளா? வேறு பொருளா? ஒரே பொருளாக இருந்தால் அது என்ன? வேறாக இருந்தால் தனித்தனியே அவற்றின் பொருள் என்ன? என்பதை "*சந்நியாசம்*" என்ற இந்தச் ச்லோகத்தில் சொல்கிறார். பகவான் த்யாக சப்தத்திற்கும் சந்நியாச சப்தத்திற்கும் மேலே சித்தாந்தம் பண்ணிச் சொல்லப் போகிறான்.

லோகத்தில் த்யாக சப்தத்திற்கு ஒருவிதமாகப் பொருள் சொல்லப்படுகிறது. சந்நியாச சப்தத்திற்கு காஷாய த்ருதண்டங்களை எடுத்துக் கொள்வது பிரசித்தம். இப்படி லோகத்தில் சொல்லப்படுகிற அர்த்தங்களை பகவான் இந்த சாஸ்திரத்தில் சொல்லவில்லை என்பது முதலில் தெரிந்து கொள்ளவேண்டிய விஷயம். கீழே 5ஆம் அத்தியாயத்தில் "*சந்நியாசம் கர்மணாம் கிருஷ்ண*"(5-1) "*சந்நியாஸ்ச கர்ம யோகஸ்ச*" (5-2), "*சந்நியாஸஸ்து மஹாபாஹோ*" (5-6) என்றும் சந்நியாச சப்தம் சொல்லப்பட்டிருக்கிறது.

அங்கு சொல்லப்பட்ட பொருளும் இங்கில்லை. அதை மேலே பார்க்கலாம்.

**"காம்யாநாம் கர்மணாம் ந்யாசம் ஸந்யாஸம் கவயோவிது: |**
**சர்வகர்ம பலத்யாகம் ப்ராஹு: த்யாகம் விசக்ஷணா: ||"**

(18-2)

என்ற இரண்டு ச்லோகங்களால் நான்கு பேர் நான்குவிதமாக சந்நியாச சப்தத்திற்கும் பொருள் சொல்கிறார்கள் என்று பகவான் சொல்கிறான். தினமும் அவரவர்கள் செய்கிற சந்தியாவந்தனத்திற்கு நித்ய கர்மா என்று பெயர். ராகு, கேது என்கிற கிரஹங்களால் கிரகணம் ஏற்படுகிற நிமித்தம் பற்றிச் செய்கிற தர்பணாதிகளுக்கு *"நைமித்திகம்"* என்று பெயர். சொர்க்கம் முதலியவற்றை அடையச் செய்யும் யாகாதிகளுக்குக் *"காம்யம்"* என்று பெயர். முதலில் சொன்ன நித்ய, நைமித்திக கர்மாக்களை அவசியம் செய்ய வேண்டும். காம்ய கர்மாவை விட்டதனால் தோஷமில்லை. சிலர் காம்ய கர்மாவை அறவே விட்டுவிடுவது தான் சந்நியாசம் என்று சந்யாச சப்தத்திற்குப் பொருள் கூறுகிறார்கள். வேதத்தில் சொல்லப்பட்ட இப்புறம்பான கர்மாக்களைச் ச்ரத்தையாகச் செய்தாலும் கூட அதற்குப் பலன் இல்லை *(மோக்ஷம் இல்லை)* என்பது கிருஷ்ண சித்தாந்தம். *"காம்யானாம் கர்மணாம்"* என்பதற்குப் பொருள் மூன்று விதமான கர்மாக்களையும் அவசியம் செய்ய வேண்டும். *(நித்யம்,. நைமித்திகம், காம்யம்)* காம்ய கர்மாக்களைத் சக்திக்குச் சேர செய்யலாம். நித்ய, நைமித்யங்களைச் சக்தி இருக்கிற பர்யந்தம் பலத்தில் ஆசை இல்லாமல் செய்ய வேண்டும் என்று சந்நியாச, த்யாக சப்தங்களுக்கு சிலர் பொருள் சொல்கிறார்கள். சிலர் பலத்தை விடுவது தான் சந்நியாச த்யாக சப்தங்களுக்குப் பொருள் என்று சொல்கிறார்கள். *"ஸர்வ கர்ம"* - இது இரண்டாவது பக்ஷம்.

**"த்யாஜ்யம் தோஷவதித்யேகே கர்ம ப்ராஹு: மநீஷிண: |**
**யஜ்ஞதாந தப: கர்ம ந த்யாஜ்யமிதி சாபரே ||"**

(18-3)

இங்கு சுவாமி வ்யாக்யானம் பண்ணும் போது *கபிலபக்ஷம்* என்று அருளிச் செய்திருக்கிறார். அது மூன்றாவது பக்ஷம். கர்மாவைப் பண்ணும்போது, இங்கேயோ, பரலோகத்தி-லேயோ ஆசைப்படுபவர்கள் கர்மயோகத்தைச் செய்யலாமே ஒழிய மோக்ஷத்தை ஆசைப்படுபவர்கள் கர்மாவைச் செய்யக் கூடாது. கர்மாவில் தோஷங்கள் இருக்கின்றன. ஆகவே

மோக்ஷத்தில் விருப்பமுடையவன் கர்மாவை விடுவதற்குத் தான் சந்நியாசம், தியாகம் என்று பொருள் சொல்வதாகச் சொல்லப்படுகிறது. வேதம் முதலான சாஸ்திரங்களில் சொல்லப்படக்கூடிய கர்மாக்களை அந்தந்த தேவதைகளின் ப்ரீதிக்காக அவசியம் செய்தே தீரவேண்டும் என்று சிலர் பக்ஷம். தன்னுடைய பொருளைப் பிறர்க்கு ஆக்குவதற்கு தானம் என்று பெயர். யோகி, போக, சங்கோஜம், தபஸ் இப்படி நான்கு பக்ஷங்களைச் சொல்லி,

**"நிச்சயம் ச்ருணு மே தத்ர த்யாகே பரதஸத்தம |**
**த்யாகோ ஹி புருஷவ்யாக்ர த்ரிவித: ஸம்ப்ரகீர்த்தித: ||"**
(18-4)

என்று சொல்ல ஆரம்பிக்கிறான். "*மேலே இரண்டு சொற்களும் லோக பிரசித்தமான அர்த்தத்தைச் சொல்கிறதாக எண்ணாதே, இவற்றின் பொருளைக் கீழேயே நான் உனக்கு ஒருவிதமாகச் சொல்லியிருக்கிறேன்.*" எது தன் திருவுள்ளத்தில் முக்கியமாகப் படுகிறதோ, அதை பகவான் கீதையில் திரும்பத் திரும்பக் கூறுவான். இங்கும் தன் கருத்தையே சொல்கிறான். இந்த அத்தியாய விஷயம் கீழேயே சொல்லப்பட்டிருக்கிறது. அதையே இங்கும் கூறுகிறான். த்யாகம் மூன்று விதம். *கர்த்ருத்வத்யாகம், மமதாத்யாகம், பலத்யாகம்* என்பன. "*மயிஸர்வாணி கர்மாணி*" (3-30) என்ற ச்லோகத்தில் இப்பொருள் சொல்லப்பட்டுள்ளது. கைமுதலான இந்திரியங்கள் தம் காரியத்தைச் செய்யும்போது ஜீவனாலே செய்கிறது என்று எப்படிச் சொல்கிறோமோ அப்படியே "*யஸ்ய ஆத்மா சரீரம்* " என்றபடி சரீரமான ஜீவன் சரீரி ஆன என்னால் செய்கிறது. உன்னால் இல்லை. "*என்னிடத்தில் கர்த்ருத்வத்தை வை*" என்று சொல்லியிருக்கிறான். இக்கருத்தைத் திரும்பத் திரும்பச் சொல்கிறான் பகவான். இந்த ஜீவன் ஒரு நல்ல காரியத்தைச் செய்வது மிக அரிது. அப்படிச் செய்தால் "*நான் செய்கிறேன்*" என்று எண்ணக் கூடாது என்கிறான். அடுத்தபடி "*என்னுடையது இது*" என்ற மமதா த்யாகத்தைச் செய்ய வேணும் என்கிறான். இந்த லோகத்திலோ பரலோகத்திலோ ஒரு பிரயோஜனத்தை விரும்பிச் செய்யலாகாது என்றும் கூறுகிறான். இதற்குப் பலத்யாகம் என்று பெயர். ஆக, இப்படி கண்ணன் "*கர்த்ருத்வத்யாகம், மமதாத்யாகம், பலத்யாகம்*"

இம்மூன்றையும் சொல்லியிருக்கிறான். "*இம்மூன்று தியாகத்தையும் எவன் செய்கிறானோ அவனுக்கு ஆத்மக்ஷேமம் ஏற்படும்*" என்கிறான். நாம் எதைச் செய்தாலும் பகவானால் தான் நடக்கிறது என்ற அர்த்தத்தை இந்த 18ஆம் அத்தியாயத்தில் ஸ்பஷ்டமாக அருளிச் செய்கிறான்.

**"அதிஷ்டாநம் ததா கர்த்தா கரணம் ச ப்ருதக்விதம் |**
**விவிதாச ப்ருதக்சேஷ்டா தைவம் சைவாத்ர பஞ்சமம் ||"**

(18-14)

சங்கிரஹத்தில் இதைப் பிரதானமாக வைத்துக் கொண்டு தான்

**"ஈச்வரே கர்த்ருதா புத்தி: ஸத்வோபாதேயதாந்திமே |**
**ஸ்வகர்ம பரிணாமச்ச சாஸ்த்ர ஸாரார்த்த உச்யதே ||**

என்று ஆளவந்தார் அருளிச் செய்தார். மனம், மொழி, மெய் என்ற திரிகரணங்களாலும் நாம் காரியம் செய்கிறோம். அக்காரியம் வேதம் முதலிய சாஸ்திரங்களோடு ஒத்ததாயும் விருத்தமாயும் இருக்கலாம். எதுவாயினும் அவற்றிற்கு ஐந்து காரணம் உண்டு. "*விவிதா ச ப்ரதக்சேஷ்டா*" என்றபடி கர்மேந்திரியம், ஞானேந்திரியம், ப்ராணாபானவ்யாநோதாந ஸமாநங்கள் என்பதும் தெய்வமும் காரணங்களாகும். "*தெய்வம் சைவாத்ர பஞ்சமம்*" என்ற இவ்விடத்தில் பரமாத்மாவின் பெருமை சிறப்பாகப் பேசப் படுகிறது. இதைப் பராசரர் அருளிச் செய்திருக்கிறார்.

நம் சரீரத்தில் எட்டு வகையான அசித்து அடங்கி இருக்கிறது. எலும்பு, நரம்பு, மாமிசம், ரத்தம், தோல் இந்திரியங்கள் ஐந்து வகைக் காற்று என்று இப்படியும் பிரிக்கலாம். பராசரர் ஒருவிதமாகக் கூறியிருக்கிறார். நம் உடம்பில் கூறப்பட்ட இத்தனை பிரிவுகளிலும் ஒவ்வொரு கணுவிலும் பகவான் இருந்து இந்தச் சரீரத்தை நடத்துகிறான் என்கிறார். மூன்று வகைக் கரணங்களாலும் காரியம் செய்யும் போது ஐவகைக் காற்றும் பகவானும் அவசியம் வேண்டும். இப்படி இருக்க "*நான் செய்தேன்*" என்று ஜீவன் நினைப்பது பொருத்தமாகுமா? இந்த ஐவகைக் காரணங்களில் ஈச்வரனிடம் கர்த்ருத்வத்தை வைப்பது, நியாயமானது ஆகும். இனி அடுத்த விஷயம் "*சத்வோ பாதேய தாம்* " இந்த சரீரம் மூன்று

வகை குணங்களுக்கு இருப்பிடமாய் இருக்கிறது. அதில் ஸத்வ குணத்தைப் பற்றிச் சுருக்கமாகத் தான் நாம் இங்கு அனுபவித்தோம். பகவான் நிறையச் சொல்லுகிறான்.

**"ஊர்த்வம் கச்சந்தி ஸத்வஸ்தா: மத்யே திஷ்டந்தி ராஜஸா: |**
**ஜகந்ய குணவ்ருத்திஸ்தா: அதோ கச்சந்தி தாமஸா: ||"**

(14-18)

என்று கீழே சொல்லியிருக்கிறான். இதற்கு அர்த்தம் பார்க்கலாம். இந்த உடலைவிட்டு ஜீவன் பிரிகிற போது ஸத்வ குணத்தோடு விட்டிருந்தால் ஊர்த்வ லோகம் அதாவது மோக்ஷத்தை அடைகிறான். தமோகுணம் அதோ கதியாகப் போகிறது. பன்றி, புல், பூண்டு, நாய், இப்படிப்பட்ட பிறப்பு உண்டு என்று சுவாமி வ்யாக்யானம். இங்கு நம்முடைய ஆசாரத்தைக் கவனிக்க வேண்டும். "*தர்பேஷு அவஸீத:* என்றபடி, சுபகாரியங்களுக்கு இரண்டு தர்பம். இது ஆசனம் ஆகும். இதன் பெருமை தெரிய வேண்டும். நாரதர், ப்ரஹ்மா, இவர்கள் வால்மீகியின் ஆசிரமத்திற்கு வந்து மிகவும் கொண்டாடுகிறார்கள். அவர்கள் அனுக்ரஹம் பெற்று வால்மீகி ஸ்ரீராமாயணத்தை பட்டோலை பண்ண நினைப்புக் கொண்டு அப்பொழுது கால்களை அலம்பிக் கொண்டு தர்பங்களைப் பரப்பி அதில் உட்கார்ந்து கொண்டு எழுதுகிறார் என்கிறார். இங்கு *தர்பாசனம்* சொல்லவேண்டிய காரணம், *தர்பாசனத்தால் ஸத்வ குணம் அபிவிருத்தி* ஆகும். ஸத்வகுணத்தால் இராம சரித்திரம் உள்ளபடி தெரியும் என்பதற்காக. மரணம் நிச்சயம் என்று அறிவதற்கு ஸ்ரீபாகவதத்தில் ஒருவழி காட்டி இருக்கிறார். காதுத்வாரத்தை அடைத்துக் கொள்கிற போது கடல் ஓசை போல கேட்கும். அதற்கு "*ப்ராணகோஷம்*"என்று பெயர். அக்கோஷம் நின்றுவிட்டால் மரணம் சமீபம் என்று அடையாளம் என்றும் உள்ளங்கை, உள்ளங்கால் இவற்றில் ரேகை உண்டு. மாவோ, அல்லது வேறு அதற்குத் தகுந்த பொடியோ அவற்றில் கால், கை இவற்றை வைத்தால் ரேகை படியும். மரணம் சமீபமானால் ரேகை பதியாது. இதை யாரும் தெரிந்து கொள்ளலாம். மரணம் சமீபிக்கிற போது படுக்கை, பலகை, பாய் இவற்றில் படுத்துக் கொள்ளக்கூடாது. கீழே தான் படுத்துக் கொள்ளவேண்டும். தர்பத்தை ஒரு பிடியாவது வைத்துக் கொண்டு அதன் மேல் துணி விரித்துப் படுத்துக் கொள்ளவேண்டும். அப்பொழுது நமக்கு மரணம்

வந்துவிட்டதே என்று இடி விழுந்தாற்போல் இருப்பான். "ஆசைவாய்ச் சென்ற சிந்தையராகி" என்ற பெரியாழ்வாயர் திருமொழியின் (4-5-0 அநுஸந்தானத்தை அனைவன். தேக பந்துக்களும், மரணம் அடைகிறவனும் ஸ்நானம் செய்து புது வஸ்திரத்தை தரித்துக் கொண்டு படுத்துக் கொள்ள வேண்டும். இதனால் ஸத்வ குணம் தலையெடுக்கும். நல்ல கதி உண்டு. இதை "*ஊர்த்வம் கச்சந்தி*" என்பதனால் பகவான் சொல்கிறான். இப்படிப்பட்ட பெருமை "*சரபங்கர்*" போன்றவர்க்குத் தான் கிடைக்கும்.

**"ப்ரஹ்ம லோகம் ந கச்சாமி த்வாம் அத்ருஷ்ட்வா ப்ரியாதிதிம் |**
**த்வயாऽஹம் புருஷவ்யாக்ர தார்மிகேண மஹாத்மநா ||"**

வா.ரா. ஆரண்ய 5-30

இப்படி சரபங்கர், "*யமனைப் போய்விட்டு வா*" என்று சொல்லத் திறமை உடையவராய் இருந்தார். வைதிகத்தில் சிரத்தையாய் இருக்கிறவர்கள் தர்பங்களை வளர்க்க வேண்டும். அதில் உட்கார வேண்டும். மரணம் அடையும் பொழுது அதில் படுத்துக் கொள்ளவேண்டும். பகவான் சுலபமான வழிகள் எல்லாம் சொல்லியிருக்கிறான். எந்தக் கர்மாவாக இருந்தாலும் சரிவரச் செய்ய நம்மால் இயலாது. ஆனால் பகவான் கர்மாவைக் கட்டாயம் செய்ய வேண்டும் என்கிறான். "வேதேஷு *கிஞ்சித தீத்ய வைதிக:*" என்று சொல்வதுண்டு. வேதாத்யயனமும், வேதோக்த அனுஷ்டானமும் இருந்தால்தான் ப்ராமண்யம் இருக்கிறதாகச் சொல்கிறது. கல்யாணத்திலோ அபர காரியத்திலோ யாரும் மந்த்ர தந்திரங்களைச் சரியாகச் சொல்வதுமில்லை. செய்வதுமில்லை. வாத்யாருக்குக் கல்யாணமா, அவருக்குத் தாய் தகப்பனாரா, அபர காரியத்தில் இப்படி மந்திர தந்திரங்களில் எவ்வளவோ லோபம் நடக்கிறது. மந்திரத்தை ஒருவிதமாகச் சொன்னாலும் கூட தந்திரம் வரவே வராது. கையில் நெய்யை எடுத்து அக்கினியில் "*ஸ்வாஹா*" என்று சேர்க்க வேண்டிய கட்டம். வாத்தியார் மந்திரம் சொல்லுகிறார். கர்த்தா நெய்யை எங்கே விடுவது என்று தெரியாமல் வாயில் விட்டுக் கொண்டான். வாத்தியார் கர்த்தாவைப் பார்த்து, "*நெய்யை அக்கினியில் விடச்சொன்னேன். வாயில் விட்டுக் கொண்டாயே*" என்றார். அவன் நெய்யை முழுங்கவேயில்லை. கழுத்தில் வைத்துக் கொண்டிருந்தான். உடனே அக்கினியில் உமிழ்ந்தான். வாத்தியார் "*அடடா அக்கினியை எச்சலாக்கி விட்டாயே*" என்றார்,

உடனே ஒரு சொம்பு ஜலத்தைக் கொட்டினான். அக்கினி அணைந்து விட்டது. இப்படி நம்மால் கர்மா கேவலமாகக் கொண்டாடப்பட்டு வருகிறது. எப்படிப் போனாலும் கடைசியில் "*கிருஷ்ணார்ப்பணம்*" என்றால் அதில் எல்லாம் பூர்த்தியாகிவிடும் என்று சொல்லப்பட்டிருக்கிறது.

இனி சாஸ்திர விஷயத்தைப் பார்க்கலாம். பக்தி தான் சாதனம் என்று வியாக்கியானம்.

**" தமேவ சரணம் கச்ச சர்வபாவேந பாரத |**
***தத் ப்ரஸாதாத் பராம் சாந்திம் ஸ்தாநம் ப்ராப்ஸ்யஸி சாச்வதம் ||"***

(18-62)

**"இதிதே ஜ்ஞாந மாக்யாதம் குஹ்யாத் குஹ்யதரம் மயா |**
**விம்ருசயைததசேஷேண யதேச்சஸி ததா குரு ||"**

(18-63)

இந்த ச்லோகத்தில் பகவான் தன் உபதேசத்தைப் பூர்த்தி செய்து கொண்டுவிட்டான். "*யதேச்சஸி ததாகுரு*" என்ற பேச்சிலேயே நன்றாகத் தெரிகிறது இக்கருத்து. இப்படிச் சொன்ன பகவான், கீதையில் சாரமான பொருளைச் சொல்ல வேண்டும் என்று கருதி,

**"ஸர்வ குஹ்யதமம் பூய: ச்ருணுமே பரமம் வச: |**
**இஷ்டோSஸி மே த்ருடமிதி ததோ வக்ஷ்யாமி தே ஹிதம் ||"**

(18-64)

என்று ரகசியத்தைச் சொல்ல ஆரம்பிக்கிறான். 9ஆம் அத்தியாயக் கடைசியில் பக்தியை "*மன்மநா பவ மத்பக்த: மத்யாஜீமாம் நமஸ்குரு*" (9-34) என்று உபதேசித்திருக்கிறான். அதே விஷயத்தை மீண்டும் இங்கே அருளிச் செய்கிறான் என்பது தாத்பர்யம்.

**"ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் சரணம் வ்ரஜ |**
***அஹம் த்வா ஸர்வ பாபேப்யோ மோக்ஷயிஷ்யாமி மா சுச: ||***

(18-66)

என்று ரகசியார்த்தத்தைக் கூறுகிறான். "*ஸர்வதர்மாந்*" என்பது பக்தி பரம வ்யாக்யானம். அது இரண்டு விதம். அனுஷ்டானம் ஒன்று. ஆக சுவாமிக்கு மூன்று விதமான அபிப்பிராயம் உண்டு என்று தெரிகிறது. அதை இங்கு விரிவாகப் பார்க்கலாம்.

"*கர்த்ருத்வம், மமதை, பலம்*" இவற்றை விடவேண்டும் என்பதை "*ஸர்வதர்மாந்*" என்பதால் தெரிவிக்கிறான். "*பக்தியை என்னிடம் செய்கிறபோது இம்மூன்றையும் விட்டு* ***என்னையே உபாயமாகவும் ப்ராப்யமாகவும்*** *விரும்பு. இப்படிச் செய்தால் நீ என்னை அடைய ஒட்டாத பாபங்களைப் போக்குகிறேன். நீ பயப்படாதே.*" இதுதான் *முதல் அர்த்தம்.* பகவான் திரும்பத் திரும்பச் சொல்லுவான். எந்தக் காரியத்தைச் செய்தாலும் நான் செய்கிறவன் என்றும், இச்செயல் என்னுடையது என்றும், இந்தப் பயன் வேண்டும் என்று எண்ணாதே என்றும் சொல்லுவான். "***கிருஷ்ணன் தான் செய்கிறவன். அவன் தான் பலன். அவன் தான் சாதனம் என்று எண்ணு***". இது *முதல் யோசனை.*

இனி இரண்டாவது. - பகவானிடத்தில் பக்தியைச் செய்வது மிக முக்கியமானது. இது எத்தனை கிரந்தங்களை ஆராய்ந்தாலும் சாரம் இதுவே. "*ஆலோட்ய ஸர்வ சாஸ்த்ராநி விசார்யச புனப்புன:*" என்று வ்யாசர் சாரமாக அருளிச் செய்தார். "*த்யேயோ நாராயணஸ்ஸதா - இதம் ஏகம் சுநிஷ்பந்நம்* " என்று கூறியது மிகவும் சாரமானது. பாரதமோ, இராமாயணமோ, நாராயணன் பெருமையைத் தான் சொல்கிறது என்பது தேசம் எல்லாம் பிரசித்தம். பகவானை த்யானம் பண்ண வேண்டும் என்பது நம் தேசத்தில் யாருக்குத் தான் தெரியாது? இது மண்பாடு. இப்படி இருக்க நாராயணனை மட்டும் சிந்தனை பண்ண ஏன் அனுஷ்டானத்தில் வரவில்லை என்றால், அதற்கு வைஷ்ணவன் செய்த பாபம் என்றுதான் சொல்ல வேண்டும். இது எப்படிப் போகும் என்றால் அந்த பாபத்தை அனுபவித்துப் போக்கலாம். "*கொன்றால் பாபம் தின்றால் போகும்*" என்பர். "*நாபுக்தம் க்ஷீயதே கர்ம கல்ப கோடி சதைரபி*" என்று சொன்னபடி அனுபவித்தே போக்க வேண்டும். இல்லாவிட்டால் ப்ராயச்சித்தம் பண்ணிப் போக்கவேண்டும். அல்லது பக்தியைப் பண்ணிப் போக்க வேண்டும். பாபம் இதற்குத் தடையாய் இருக்கிறது. ஆகையால் அது முடியாது. நாம் செய்த பாபங்களுக்குப் ப்ராயச்சித்தம் செய்தும் தலைக்கட்ட முடியாது. உபாகர்மாவன்று பாடசாலை திறக்கப் படுகிறது. அன்று வேத ஆரம்பம். "*தை மாதம் பௌர்ணமியில்*" பாடசாலையைச் சாத்தச்சொல்லுகிறது. இதற்குப் பிராயச் சித்தம், ஆவணி அவிட்ட காயத்ரீ ஜெபம், காமோகார்ஷீத் ஜபம் இவை. "*காமோ கார்ஷீத் மந்யுர கார்ஷீத்*"

என்பதை நன்றாகச் சொல்லி எண்ண வேண்டும். சிலர் எண்ணும் போது இரண்டாக எண்ணிவிடுவர். இப்படிச் செய்தால் பிராயச்-சித்தத்திற்குப் பிராயச்சித்தம் எங்கு சொல்லி இருக்கிறது? நாம் செய்கின்ற பிராயச்சித்தங்கள் இப்படித்தான் இருக்கும். ஆகையால் நம் பாபங்களுக்குப் பிராயச்சித்தமுமில்லை. ஆசமனம் அடிக்கடி பண்ண வேண்டி வரும். தும்மல், இருமல், கொட்டாவி இப்படி சில சேஷ்டைகள் நிகழ்கிறபோது. அப்பொழுதெல்லாம் பகவன் நாமாவை 15 உரு சொல்ல வேண்டி வரும். ஒரு நாளைக்கு நம் சரீரத்தில் தும்மல், இருமல் இவை எவ்வளவு வருகின்றன? அப்பொழுதெல்லாம் இந்தச் சுலபமான காரியத்தை நம்மால் செய்ய முடிகிறதா? இப்படியெல்லாம் பிராயச்சித்தங்களை விட்டுவிட்டு கிருஷ்ணன் திருவடிகளில் ஒருதரம் விழுந்தால் அவ்வளவு பாபமும் போய்விடும். பாபம் இருக்கிறது என்று பயப்படவேண்டாம். "*மாமேவ யே ப்ரபத்யந்தே மாயா-மேதாம் தரந்தி தே*" என்ற ச்லோகத்தைத் தான் பகவான் இங்கு மீண்டும் சொல்லுகிறான் என்று வ்யாக்யானம். அடிக்கடி பகவானை வணங்கினால் பண்ணின பாபங்களுக்குப் பிராயச்சித்தம் ஏற்படுகிறது. இந்த ஜீவன் அநேக ஜந்மாக்களில் மூட்டை மூட்டையாகப் பாபங்களைச் செய்திருக்கிறான். அந்தந்த பாபங்களுக்குப் பிராயச்சித்தம் என்னென்று இவனுக்குத் தெரிந்து அதற்குத் தக்கபடி செய்யவேண்டும். அது முடியாத காரியம். இதற்கு பதில் "***அவன் திருவடிகளில் விழுவதைத் தவிர வேறு வழியில்லை***." இது 2வது நிர்வாஹம் "*ஸ்வதந்த்ரப் ப்ரபத்தி:*" சரணாகதி கத்யத்தில் "*சுவாமி*" அனுஷ்டானம் செய்திருக்கிறார். எவனால் கீதையில் பரக்கச் சொன்ன கர்மானுஷ்டானத்தையும் ஆத்ம சிந்தனத்தையும், பக்தியும் செய்ய முடியவில்லையோ, அவன் ஆத்மக்ஷேமத்தை இழக்க வேண்டியதில்லை. அவன் கிருஷ்ணன் திருவடிகளில் ஒருதரம் சரணாகதி பண்ணினால் மோக்ஷ விரோதியான பாபம் போகும் என்று சொல்கிறார் "*தேசிகர்*." இங்கு "*லோகாசாரியன்*", மற்ற கர்மங்களைச் செய்ய ஞான சக்திகள் இல்லாதவர்களாய் இருப்பினும், எத்தகையவனாய் இருப்பினும், எல்லாப் பற்றுதலையும் விட்டுவிட்டு எம்பெருமான் திருவடிகளில் சரணாகதி பண்ணினால் ஆத்ம க்ஷேமத்திற்குக் குறைவில்லை என்று சொல்லியிருக்கிறார். இது "*லோகாசாரியன் பக்ஷம்.*" இரண்டுக்கும் இரண்டு உதாரணம். வெங்காயம் தமோ குணத்தை அபிவிருத்தி பண்ணும் பதார்த்தம்.

இது சாப்பிட்டால் "*சாந்த்ராயண விரதம்*" செய்ய வேண்டும். "*புக்த்வா சாந்தராயணம் வ்ரஜேத்* " என்பது சாஸ்திரம். "*இங்கு வெங்காயத்தைச் சாப்பிட்டுவிட்டு, அந்த விரதம் செய்*" என்று அர்த்தம் இல்லை. வெங்காயத்தின் தோஷம் தெரியாமல் சாப்பிட்ட பிற்பாடு, தெரிந்ததும் தோஷத்தைக் கண்டு நடுங்குகிறானே அவனுக்குத் தான் அந்த விரதம் சொல்லப்பட்டிருக்கிறது. "*ஸ்நாத்வா புஞ்ஜீத்வா*" என்பது ஒரு வாக்கியம். "*போஜனத்திற்கு முன்பு ஸ்நாநம் செய்*" என்று விதிக்கிறது. "*ஸ்நாநம் பண்ணியே போஜநம் செய்ய வேண்டும்*" என்பது இதன் பொருள். கர்மம் கைங்கர்யத்தில் புகும். ஞானம் ஸ்வரூப ப்ரகாசத்திலே புகும். பக்தி ப்ராப்ய ருசியிலே புகும் என்று ப்ரபன்னாதிகாரிக்குக் கர்ம ஞான பக்திகள் உபயோகப்படுகிற வழியை விளக்கி இருக்கிறார்கள். இந்த அர்த்தத்தைத் தான் நம் சுவாமி திருக்கோட்டியூர் நம்பிகளிடத்தில் கேட்டுத் தெரிந்து கொண்டதாகச் சரித்திரம். சுவாமி, நம்பிகளிடம் சரம ச்லோகத்தின் விசேஷார்த்தங்களைக் கேட்டது இதுதான் என்று க்ரந்தங்களில் தெரிகிறது. அவர் வெளியிட்ட அர்த்த விசேஷம்தான் இந்த "*ஸ்வதந்திரப் பிரபத்தி*" என்பது. முதலில் சொன்ன அர்த்தத்திற்கும் இதற்கும் வாசி தெரியவேண்டும். கர்ம, ஞான, பக்தி என்ற இம்மூன்றையும் த்யாகம் செய்து எல்லாம் பகவானாக எண்ணி சரணாகதி செய்வது முதல் அபிப்பிராயம். பிராயச்சித்தமாகச் செய்வது இரண்டாவது அபிப்பிராயம். ***கர்ம ஞான பக்தி யோகங்கள். மோக்ஷ சாதனம் என்பதை விட்டுவிட்டு கண்ணன் திருவடிகளையே உபாயமாகப் பற்றுவது.*** *இதுதான் மூன்றாவது அபிப்பிராயம்,* **இதுதான் கீதாசாரம் என்று சம்பிரதாயத்தில் சொல்லப்படுகிறது.**

**"ஈச்வரே கர்த்ருதா புத்தி: சத்த்வோபா தேயதாம் அந்திமே |**
**ஸ்வகர்ம பரிணாமஸ்ச்ச சாஸ்த்ர சாரார்த்த உச்யதே ||"**

**பதினெட்டாம் அத்தியாயம் முற்றும்.**

*ஸர்வம் ஸ்ரீகிருஷ்ணார்ப்பணம் அஸ்து*

⌘ ⌘ ⌘ ⌘ ⌘ ⌘

ஸ்ரீ :

ஸ்ரீ ஆளவந்தார் திருவடிகளே சரணம்



"யத்பதாம்போருஹத்யான வித்வஸ்தாசேஷ கல்மஷ : |
வஸ்துதாமுபயாதோऽஹம் யாமுநேயம் நமாமி தம் ||"

ஸ்ரீமதே ராமானுஜாய நம :



"ஆரெனக்கின்று நிகர்சொல்லில்? * மாயன் அன்று ஐவர் தெய்வத்
தேரினில்செப்பியகீதையின் * செம்மைப்பொருள்தெரியப்
பாரினில்சொன்னஇராமானுசனைப் பணியும்நல்லோர்
சீரினில்சென்றுபணிந்தது * என்ஆவியும்சிந்தையுமே."

*இராமானுசநூற்றந்தாதி - 68*

Printed at : Navbharath Enterprises, "Vishnu Chittam", Bangalore - 560 020, Ph : 080-2336 4142, 2336 4682, E-mail : navbarat@gmail.com